இப்பொழுது எலுமிச்சை ரசத்துடன்
டீயைக் குடித்துப் பாருங்கள்

# LEMON



எக்காலத்திலும் இது
வசீகரிப்பது! ஒரு
கோப்பை மிகச் சூடான
டீயில் சிலதுளி எலுமிச்சம்பழ
ரசத்தை விட்டு ருசிக்கேற்ற
வாறு சர்க்கரையைச் சேர்த்து
(பால் கூடாது) கலக்கி டீயின்
தன்மையுடன் எலுமிச்சம்பழப்
புஷ்டியையும் பருகுங்கள்






நான்தான் டீ — நான் உங்கள் நண்பன்






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 18
இதழ் 30

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விளம்பி ஆவணி
மாசி 10

# தொழில் வளம் பெருகுமா ?

"சோஷலிஸம்" என்பது கொள்ளையடித்தலோ சூறையாடுதலோ அல்ல. எல்லாரும் இன்பமாக வாழ வகையளிக்கும் வாழ்க்கை முறை. மனிதனுடைய இன்பம் ஏராளமான சொத்து சேர்த்துக் கொள்வதிலோ, மாடி வீடுகளில் வசிப்பதிலோ இல்லை. உண்மை இன்பம், அவனவன் தன் உடலால் உழைத்து அல்லது மனத்தால் மூளையால் உழைத்துத் தன் வயிற்றுக்குரிய உணவைச் சம்பாதிக்கிற மன நிறைவில் இருக்கிறது.

இன்று நம் நாட்டில் இருக்கும் நிலை என்ன ? படித்தவர்களுக்கும் வேலையில்லை, படிக்காத கோடிக்கணக்கான ஏழை மக்களுக்கும் வேலையில்லை. ஆகவே, இன்றைய அரசாங்கம் முதலில் கவனிக்க வேண்டிய பணி என்ன வென்பது இதிலிருந்தே தெளிவாகத் தெரிந்திருக்கும். வேலையில்லாதவர்களுக்கு முதலில் வேலை செய்யப் போதுமான வாய்ப்புக்கள் அளிக்க வேண்டும்; அதற்குரிய வேலைத் திட்டங்கள் வகுக்கவேண்டும்!

அதற்குப் பதில் இன்றைய சர்க்கார் என்ன செய்யத் துடிக்கிறது ? திருவாளர் 'க'விடம் ஏராளமான நிலம் இருக்கிறது. அதற்கு ஒரு உச்சவரம்பு கட்டி மற்றதைச் சொற்ப நஷ்டத்தொகை கொடுத்துப் பறித்து விடுவோம் என்கிறது. இதில் ஏற்படும் இரண்டு பெரிய அநீதிகளைக் கவனிக்க வேண்டும்.

இன்றுள்ள பெரிய பண்ணைக்காரர்கள் யாரும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு ஒரு ராஜா மான்யமாக அளித்த நிலத்தைப் பெற்றுள்ளவர்கள் அல்ல. அப்படிப் பெற்றவர்களெல்லாம் சுதேச சமஸ்தானாதிபதிகள், ஜமீன்தார்கள் முதலியோர். இவர்கள் நில உடைமைகளைச் சட்ட மூலமாகப் பறித்தாகிவிட்டது. இப்பொழுதுள்ளவர்கள் எல்லாம், தாங்களோ தங்கள் முன்னோர்களோ, உழைத்துப் பணத்தைச் சம்பாதித்து, சேமித்து, அதைப் போட்டு நிலத்தை வாங்கித் தங்கள் நிலங்களை, பூஸ்திதியைப் பெருக்கிக் கொண்டவர்கள். மாடு போலவும், வீடு போலவும், கார் போலவும், நிலமும் ஒரு சிறந்த சொத்து என்று நாம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மதித்து வந்திருக்கிறோம். நமது அரசியல் நிர்ணயச் சட்டமும் 'நிலம்' சொத்து என்று அங்கீகரித்து, அதைத் தனி நபர்கள் வாங்கவும், விற்கவும் உரிமையுண்டு என்று கூறுகிறது. அந்தச் சொத்துடைய தனி நபர்களுக்கு அச்சொத்து சம்பந்தமாகப் பாதுகாப்பு அளிக்கச் சர்க்கார் கடமைப்பட்டுள்ளதாகக் கூறுகிறது.

இந்த அரசியல் நிர்ணயச் சட்டத்தைச் செய்த நேரு சர்க்காரே, இந்த விதியைக் காற்றில் பறக்க விட்டு விட்டு, சொற்பத் தொகையை நஷ்ட ஈடாகக் கொடுத்து யோக்கியமான மக்களுடைய நிலத்தை எடுத்துக் கொள்ளப் பார்ப்பது பெருத்த அநீதி !

இன்னொரு விஷயமும் இதில் உண்டு. 'நில உச்சவரம்புச் சட்டத்தினால் பாதிக்கப் படுவோர் சொற்பத் தொகையினர்தானே? ஏன் இதற்கு ஆட்சேபம்?' என்று கோபித்துக் கொள்ளுகிறார் நேரு. ஒரு சர்க்கார், சிறுபான்மையினருக்கு அநீதி இழைத்ததனால் அது நீதியாகிவிடுமா ? அநீதி ஒருவருக்கு இழைத்தாலும், அநீதிதான் ! பல பேருக்கு இழைத்தாலும் அநீதிதான் ! ஒரு சிறு அநீதியினால் பலபேருக்கு லாபம் உண்டாவதாயின் சர்க்கார் துணிந்து செய்யலாம் என்று ஒருகால் ஆதரவு அளிக்கலாம் ! ஆனால் இந்த நில உச்சவரம்பு ஏற்படுத்திப் பறிக்கப்பட்ட நிலத்தை எத்தனை ஏழைகளுக்குத் தானம் செய்ய முடியும் ? தானத்துக்கு யார் பாத்திரம் ? போட்டியும் பொறாமையுந்தான் உண்டாகுமே தவிர மக்களிடையில் திருப்தி ஏற்படாது. வெள்ளாமைப் பெருக்கமும் ஏற்படாது.

உச்சவரம்பு கட்டி எடுத்துக் கொள்ளப்படும் நிலத்தைப் பொதுக் கூட்டுச் சாகுபடிக்கு விடப்படும் என்று சொல்லப்படுகிறது. அப்படிச் செய்தால் நிலத்தின் விளைவு பெருகாது. வேலையில்லாத விவசாயிகளுக்கு வேலை கிடைத்து விடவும் முடியாது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் கீழ் கூலிகளாகத்தான் குடியானவர்கள் உழைக்க வேண்டியிருக்கும். மொத்தத்தில் மக்களிடையே பரவலாக அதிருப்தியும் மனக்கசப்பும்தான் வளரும்.

இவ்வளவு குறைகள் மலிந்த ஒரு சீர்திருத்தத்தை ஏன் கொண்டு வரவேண்டும்? "என்னுடைய வாழ்நாட்களுக்குள் ஏதாகிலும் பெரிய காரியம் ஒன்றைச் செய்தாக வேண்டும். நான் செய்வது தவறாக இருக்கலாம். இருந்தாலும் செய்தேயாக வேண்டும்" என்கிறார் நேருஜி. என்ன அர்த்தமற்ற பிடிவாதம்! ராஜாஜி, 'நீங்கள் செல்லும் பாதை தவறாக இருக்கிறது' என்று சொல்லியும், அந்த எச்சரிக்கையை அவர் நல்லபடியாக எடுத்துக் கொண்டு ஆராய முன்வரவில்லை. அதற்குப் பதில், 'நாம் சோஷலிஸப் பாதையை வகுத்துக் கொண்டு விட்டோம்! நாம் அந்தப் பாதையில் முன்னேறியேயாக வேண்டும்' என்று கூறுகிறார்.

சோஷலிஸம் என்பது எல்லோரும் ஆண்டிப் பண்டாரங்களாகி, கையில் கப்பரை எடுத்துக் கொண்டு வெளிநாடுகளில் யாசகத்துக்குப் போவதல்ல! நாட்டு மக்கள் எல்லாரும் உழைத்து, பாடுபட்டு, தங்கள் உணவைத் தாங்கள் சம்பாதிக்க வாய்ப்புக்களை உண்டாக்கித் தருவதுதான்.

மக்களுக்கு வேலையில்லாத நிலைமை மாறி எல்லாருக்கும் ஒரு தொழில் இருக்கச் செய்யவேண்டும். அந்தத் தொழில் மூலம் சம்பாதித்துப் பிழைக்க வேண்டும். எத்தனை தொழிற்சாலைகள் எத்தனை இடங்களில் சர்க்காரே ஏற்படுத்த முடியும்? பிலாய், ரூர்கேலா, துர்க்காபூர் இரும்பு - எஃகு தொழிற்கூடங்கள் நம் நாட்டு வேலையற்றோர்க்கெல்லாம் வேலை வாய்ப்பு அளித்துவிட முடியுமா? ஊரை விட்டு ஊருக்கு மாற்றும் முறை கோடிக்கணக்கான மக்களிடை செலுத்த முடியாது. அல்லது நமது நாட்டில் பல வருஷங்கள் படித்துப் பட்டம் பெற்று ஆண்டு தோறும் சர்வகலாசாலைகளையும் உயர் நிலைப் பள்ளிகளையும் விட்டு வெளியேறும் இளைஞர்களுக்கெல்லாம் சர்க்கார் தனது காரியாலயங்களில் மேஜைகளையும் நாற்காலிகளையும் போட்டுக் குமாஸ்தா உத்தியோகம் அளித்து விடப் போகிறதா? அதுவும் முடியாது.

இதற்குக் கிராமங்களில், சிறிய நகரங்களிலெல்லாம் சின்னச் சின்ன தொழிற்கூடங்கள் தோன்ற வேண்டும். அப்போதுதான் அந்தந்தக் கிராம மக்கள் அங்கங்கேயிருந்து வேலை செய்ய முடியும். இதற்கான தொழிற்கூடங்களைச் சர்க்காரே எல்லாவிடங்களிலும் ஏற்படுத்தி விட முடியுமா? ஒரு நாளும் முடியாது.

ஆகவே, நிலம் படைத்த தனவந்தர்கள் தனித்தனியாகவோ, பலர் ஒன்றுகூடியோ அவர்கள் சேமித்துள்ள தனத்தைக் கொண்டு, கூட்டுறவு முறையில் சிறு சிறு தொழிற்கூடங்கள், கிராமப்புறங்களில் துவக்கினால்தான் நாட்டிலுள்ள வேலையில்லாத் திண்டாட்டம் நீங்கும், நாட்டு மக்கள் சந்தோஷமாகவாழ வழி ஏற்படும்.

இதற்குரிய வழிகளைத்தான் கடைப்பிடிக்க வேண்டும். கிராமப்புறங்களில் கையில் பணத்தை வைத்துக் கொண்டிருக்கும் ஓரிருவரையும் அழித்து விட்டு, எல்லாரையும் திண்டாடவிடுவதில் பயனில்லை.

சென்ற வருஷ பட்ஜெட்டில் நகர்ப்புறங்களில் கம்பெனிகளும் தொழில்களும் நடத்தி வருபவர்களுக்குத் திரும்பிய பக்கமெல்லாம் வரி விதித்து, அவர்கள் புதுத் தொழில்கள் ஆரம்பிக்க வழியில்லாமல் செய்தாகி விட்டது. எஞ்சிய ஆலை முதலாளிகள் கிராமாந்தரங்களில்தொழிற்கூடங்கள் ஆரம்பிக்கப் போவதில்லை. அவர்களுடைய மனப்போக்கு அந்த வழியில் செல்லாது. கிராமாந்தரங்களிலுள்ள பெரும் பண்ணைக்காரர்கள்தான் கிராமாந்தரங்களில் சிறு தொழிற்கூடங்களை ஏற்படுத்தலாம். இப்பொழுது இந்த நில உச்சவரம்பு கொண்டு வந்து, கிராமங்களில் இருக்கும் சிறு பணக்காரர்களை ஆண்டியாக்கி விடுவதால் அவர்கள்சிறு தொழில்கள் ஆரம்பிக்க வழியில்லாமல் போகிறது. இப்படிப்பட்ட சட்டங்கள் செய்வதால் சோஷலிஸ சமதர்ம சமுதாயத்தை ஏற்படுத்திவிட முடியாது. சம துன்ப சமுதாயத்தைத்தான் ஏற்படுத்த முடியும்.

நாட்டில் அதிகார பதவியிலிருப்பவர்கள் ராஜாஜியும் மற்றவர்களும் சொல்வதைக் கூர்ந்து கவனித்து ஆலோசித்து, அவர்கள் சொல்வதிலுள்ள உண்மையை உணர்ந்து நடந்துகொள்ள வேண்டும்.

# பாட புத்தகமும் மந்திரி சபையும்

சென்னை சர்க்கார் கல்வி இலாக்காவின் டைரக்டர் மேற்பார்வையில் 'குவிண்டின் டர்வர்டு' என்ற ஆங்கில நாவலின் சுருக்கம் ஒன்று எழுதப்பட்டு வெளியிடப்பட்டது. அது இவ்வருஷ எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதும் மாணவர்களுக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது. அந்தப் புத்தகத்தில் பிழைகளுக்கு ஒரு அளவில்லை. இது பற்றிப் பள்ளிக்கூட ஆசிரியர்களிடையே சென்ற ஒரு வருஷமாகவே 'கசமுச' என்று பேச்சிருந்து வந்தது. 'சுயராஜ்யா' பத்திரிகையில் அதைப் பற்றிப் பலமாகக் கண்டித்தும் எழுதப்பட்டது.

சமீபத்தில் ஒரு ரிட் மனு உயர் நீதிமன்றத்தில் தாக்கல் செய்து, இப் புத்தகத்தில் இவ்வருஷம் பரீட்சை எழுதும் மாணவர்களுக்குக் கேள்வி கேட்கக் கூடாது என்று கோரியிருந்தார், ஒரு மாணவனின் தகப்பனார். அதன் மீது தீர்ப்புக் கூறிய நீதிபதி

# பயன் அடைவாரா ?


1935ல்
பதவி ஏற்றால் காங்கிரஸ் பலம் பெருகும்


கூடாது
பதவி ஏற்றால் காங்கிரஸ் பலம் குறையும்


பின்னர்


இப்பொழுதுதான் எனக்கும் புரிந்தது- காங்கிரஸ் பதவி ஏற்றதால் பலம் பெருகியிருக்கிறது.


யுத்த காலத்தில்
பிரிவினைக்கு ஒப்புக் கொண்டாவது சுதந்திரம் பெறுவோம்


சுதந்திரம் தாமதமானாலும் பரவாயில்லை: பிரிவினை கூடாது.


பின்னர்


இந்தியாவைப் பிரித்துச் சுதந்திரம் தருவதாக மௌண்ட் பாட்டன் சொல்லி விட்டார். அதுதான் சரி!


இன்று
நாகபுரி நிலத் தீர்மானம் நாட்டுக்குத் தீமை விளைவிக்கும்


ராஜாஜி சொல்வது புரியவில்லை. முப்பது வருஷங்களாகவே மாறுபட்டு வந்திருக்கிறேன்!


சரித்திரத்திலிருந்து நேருஜி பாடம் கற்பாரா?

ஸ்ரீ பாலகிருஷ்ணய்யர் புத்தகத்தைப் பற்றி மிகக் கடுமையாகக் கண்டித்திருக்கிறார்.

''புத்தகம் முழுமையும் ஒரே அபத்தம். இலக்கணப் பிழைகள் சொற் பிழைகள் மலிந்திருக்கின்றன. அதோடுமின்றி அச்சுப் பிழைகள் மலிந்திருக்கின்றன. பள்ளிக்கூடங்களில் எந்தமாதிரியான புத்தகங்களைப் பாட புத்தகமாக வைக்கக் கூடாது என்று தெரிய வேண்டுமானால் அதற்கு இந்தப் புத்தகம் ஒரு சிறந்த உதாரணம்.''

இது மட்டுமல்ல; இன்னும் பல கேலியும் கோபமும் நிறைந்த மொழிகள் நீதிபதியின் தீர்ப்பில் காணப்படுகின்றன.

இத்தகைய கண்டனம் நீதிமன்றத்தில் ஏற்பட்ட பிறகு இந்த அவமானத்துக்குக் காரணமாயிருந்த அதிகாரியாவது, கல்வி இலாக்கா பொறுப்பை வகிக்கும் மந்திரியாவது வேலையையே விட்டு விலக வேண்டியது நியாயம்.

ஒரு பாலம் உடைந்து ரயில் கவிழ்ந்தது என்ற செய்தியைக் கேட்டவுடன் அதற்கு முழுப் பொறுப்பு தம்முடையதுதான் என்று கூறி, சில ஆண்டுகளுக்கு முன் ரயில்வே மந்திரியாக இருந்த லால்பகதூர் சாஸ்திரி ராஜிநாமா செய்தார். இது ஜனநாயக சம்பிரதாயம்.

இவ்வளவு அவமானத்தைச் சர்க்காருக்குத் தேடித்தந்த கல்வி இலாக்கா டைரக்டராவது, அவரது குற்றத்துக்குப் பொறுப்பாளராகிய மந்திரியாவது ராஜிநாமா செய்திருந்தால் சர்க்காருக்குச் சுரணையிருக்கிறது என்று கருதலாம்.

# வாயில்லாப் பூச்சிகள்

நாளுக்கு நாள் வாழ்க்கைக்கு இன்றியமையாத பல பண்டங்களின் விலைவாசிகள் விஷம் போல் ஏறிக்கொண்டே போகும் நிலைமையைக் கண்டு சாதாரண மக்கள் மிகவும் பீதியடைந்திருக்கிறார்கள். அரிசி விலை ரூ. 1-28; புழுங்கலரிசி விலை ரூ. 1-00; துவரம்பருப்பு படி ரூ. 1-50; உளுத்தம்பருப்பு படி ரூ. 1-25; மிளகாய் விசை ரூ. 4-00; நல்லெண்ணெய் விசை ரூ. 3-00; கடலெண்ணெய் விசை ரூ. 2-25; தேங்காய் எண்ணெய் விசை ரூ. 4; இவை சில உதாரணங்கள்.

இன்னும் உயருமோ என்றும் அஞ்ச வேண்டியிருக்கிறது. ஏனெனில் மொத்த வியாபாரம் நடக்கும் இடங்களில் சரக்குக்காக ஒரு விலை, கோணிப் பைக்காக ஒரு விலை, வண்டிச் சத்தத்துக்காக ஒரு விலை, விற்பனை வரிக்காக ஒரு விலை, இன்னும் என்ன சேருமோ, என்ன சட்டம் வருமோ என்பதற்கெல்லாம் முன்னெச்சரிக்கைக்காக ஒரு விலை என்று எல்லாம் ஏறுமுகமாகவே இருக்கின்றன.

அன்னியச் செலாவணி சேமிப்பு செய்ய ஐந்து சதம் மண்ணெண்ணெய் இறக்குமதியைக் குறைத்தனர். புட்டி 20 ந. பை.யிலிருந்து 60 ந. பை.க்கு உயர்ந்தது.

இரண்டு லட்சம் டன் அரிசிச் சேமிப்பு செய்யப் போகிறோம், அப்போதுதான் அரிசி விலை குறையும் என்று சொல்லி நெல்லுக்கும் அரிசிக்கும் விலை நிர்ணயம் செய்தது நமது சென்னை அரசாங்கம். அரிசி விலை உயர்ந்து விட்டது. வியாபாரிக்கு அரசாங்க விலையில் சரக்குக் கிடைக்கவில்லை. விவசாயியோ கட்டுப்பாட்டு விலை எங்கள் ஜீவனத்துக்குக் கட்டுப்படியாகாது என்று விளைந்த நெல்லை விற்பனை செய்யத் தயங்குகிறான்.

இப்படிப் பல காரணங்கள் இருந்த போதிலும் பலனை அனுபவிப்பது நீங்களும் நாமும், நம்மைப்போன்ற மத்தியதரக் குடும்பத்தினர்களும்தாம். மாதச் சம்பளம் வாங்கிப் பிழைப்பவர்கள் பஞ்சப்படி போதவில்லை என்று கதறுகிறார்கள். தொழிற்சாலையில் வேலை செய்பவர்கள் ''அதிகம் கொடு. இல்லாவிட்டால், வேலை நிறுத்தம்'' என்கிறார்கள். கமிஷன் ஏஜெண்டுகளாகவும், விற்பனையாளர்களாகவும், சொந்த முறையில் கண்யமாக ஜீவனம் நடத்தி வரும் கணக்கற்றவர்களின் நிலை பரிதாபம். முறையிடவோ கோரிக்கையைக் கேட்கவோ ஆளில்லை.

நமது மக்கள் 'வாயில்லாப் பூச்சிகள்' என்று பரிதாபகரமாக மேல் நாட்டு ஆசிரியர்கள் கண்ணீர் வடிப்பது வழக்கம். இப்பொழுது உண்மையில் வாயில்லாப் பூச்சிகளின் நிலைமையிலிருப்பவர்கள் உணவுப் பண்டங்களை வாங்கும் சாதாரண மக்கள். விலைவாசிகள் உயர்வால் அவர்கள் படும் அவதி சொல்லி முடியாது.

அருள் வாக்கு

நம் மதத்துக்குப் பொதுவானது வேதம். வேதத்தில் சொல்லியிருப்பதைக் கடைப்பிடிப்பதுதான் நம் மதத்தினுடைய பொது அடையாளம். பண்டைக் காலத்தில் உலகம் முழுவதும் ஒரு மதமாகத்தான் இருந்தது. அந்த மதம் நமது வைதிக மதம் என்று சொன்னால் அந்தக் காலத்தில் லோகம் முழுவதும் வேத முறைப்படி வாழ்ந்தவர்களாக இருந்திருக்க வேண்டும். அதற்கு வேண்டிய ஆதாரங்கள் ஏராளமாக இருக்கின்றன.

— ஸ்ரீ சங்கராச்சாரியார் - காஞ்சி காமகோடி பீடம்

# கல்கி

# மாவட்டச் சிறுகதைப் போட்டி

**முதற் பரிசு ரூ. 200. இரண்டாவது பரிசு ரூ 100**

●

★ ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு மாவட்டத்தை இலக்காகக் கொண்டு இந்தச் சிறுகதைப் போட்டி நடத்தப்படும். ஒவ்வொரு மாதமும் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளில் இரண்டு கதைகளுக்குப் பரிசு வழங்கப்படும்.

★ தமிழ் நாட்டின் மாவட்டங்களான கன்யாகுமரி, திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, தென் ஆற்காடு, செங்கற்பட்டு, வட ஆற்காடு, சென்னை, சேலம், கோயமுத்தூர், நீலகிரி ஆகிய பதின் மூன்று மாவட்டங்கள் இந்தப் போட்டியில் இடம் பெறும்.

★ எல்லா மாவட்டங்களைப் பற்றிய கதைப் போட்டிகளிலும், எல்லாத் தமிழ் எழுத்தாளர்களும் கலந்து கொள்ளலாம்.

★ கதைகள் பண்பட்ட தமிழ் நடையில் அந்தந்த மாவட்டத்தைப் பின்புலமாகக் கொண்டு, முழுவதும் அந்தப் பிரதேச மணம் கமழ்வதாக இருப்பதோடு சொந்தக் கற்பனையாகவும் இருக்க வேண்டும்.

## முதற் போட்டி

# தஞ்சை மாவட்டம்

### விதிகள்

1. கதைகள் தஞ்சை மாவட்டத்தின் சூழ்நிலை எல்லா வகையிலும் அமையுமாறு எழுதப்பட வேண்டும். தஞ்சைப் பிரதேசத்தைச் சேர்ந்த ஊர்கள், பழக்க வழக்கம், தொழில், காவிரிக்கரை வாழ்வு போன்றவற்றைச் சித்திரிக்கும் கதைகளே இப் போட்டியில் இடம் பெறும்.
2. கதைகள் 'கல்கி' இதழின் ஐந்து பக்கங்களுக்குக் குறையாமல் ஏழு பக்கங்களுக்கு மேற்போகாமல் இருக்க வேண்டும்.
3. ஒரு எழுத்தாளரே ஒன்றுக்கு மேற்பட்டும் கதைகள் அனுப்பலாம்.
4. பரிசுக்கதைகளைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் 'கல்கி' ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.
5. பரிசுபெறாத கதைகளில் பிரசுரிக்கத் தகுதியுடையவை, உரிய சன்மானம் அளித்துக் 'கல்கி'யில் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.
6. பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படாத கதைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் கதைகளோடு உரிய தபால் பில்லைகள் இணைக்க வேண்டும்.
7. கதைகள் சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.
8. தஞ்சை மாவட்டப் போட்டிக்கான கதைகள் மார்ச்சு மாதம் 31-ந் தேதிக்குள் 'கல்கி' காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும்.
9. போட்டி முடிவு ஏப்ரல் மாத இறுதிக்குள் அறிவிக்கப்படும்.
10. கதைகளின் உறைகளிலும், கதைகளின் தலைப்புக்களிலும் "கல்கி தஞ்சை மாவட்டச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

குறிப்பு:—தஞ்சை மாவட்டத்தின் சிறுகதைப் போட்டி முடிவு வெளியாகும் இதழிலேயே அடுத்த மாவட்டச் சிறுகதைப் போட்டிக்குரிய விவரங்கள் அறிவிக்கப்படும்.

ஆசிரியர், கல்கி

# வம்புச் சாவடி

தொக்கி

"காங்கிரஸ்காரர்கள் அதிகமாகப் பேசுவதைக் கைவிட வேண்டும். குறைவாகப் பேச வேண்டும்!" என்று மந்திரி திரு லால்பகதூர் சாஸ்திரி ஒரு கூட்டத்தில் அறிவுறுத்தியுள்ளார்.

"'பாத யாத்திரை' இயக்கத்தைப் போல் காங்கிரஸ்காரர்கள் குறைத்துப் பேசும் இயக்கம் ஒன்று ஏன் ஆரம்பிக்கக் கூடாது?" என்று நண்பர் விதண்டாவாதம் அவர்கள் கேட்கிறார்.

குறைத்துப் பேசும் இயக்கத்தை, தலைவர்கள் ஒரு நல்ல நாள் பார்த்து ஆரம்பித்து வைக்கலாம். ஒவ்வொரு கிராமத்துக்கும், காங்கிரஸ்காரர்கள் செல்ல வேண்டும். பொதுக் கூட்டம் கூட்ட வேண்டும். கூட்டத்தில் குறைவாகப் பேசுவதால் ஏற்படக் கூடிய பலன்களை விளக்கி இரண்டொரு வார்த்தைகளில் பிரசங்கத்தை முடித்துக்கொண்டு விட வேண்டும். சில பிரசங்கிகள் தாம், இரண்டொரு வார்த்தைகள் கூறப் போவதாகத் தெரிவித்து விட்டு, கூட்டம் கலைந்தாலொழியப் பிரசங்கத்தை நிறுத்திக் கொள்ள மாட்டார்கள்!

அவ்வாறு செய்துவிடாமல், நிஜமாகவே இரண்டொரு வார்த்தைகளில் பெரிய விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும் என்பது விதண்டாவாதத்தின் யோசனை.

"இது சாத்தியமில்லை. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி இரண்டே வார்த்தைகளில் எப்படிப் பேச முடியும்?" என்று கேட்டேன்.

"எப்படி முடியுமா? முடிந்துதான் ஆக வேண்டும். 'இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் நமக்கு நன்மையை உண்டாக்கும்' என்று பிரசங்கத்தை ஒரு நொடியில் முடித்துக் கொள்ளலாமே!" என்றார் விதண்டாவாதம்.

"நல்லது. காஷ்மீர் பிரச்னையைப் பற்றி எப்படிச் சுருக்கமாகக் கூற முடியும்?" என்று மீண்டும் வினவினேன்.

"'காஷ்மீர் விவகாரத்தில் நமக்கே வெற்றி கிடைக்கும்!' என்று கூறினால் போதுமே!"

"சர்வதேச நிலைமை?"

"'சர்வதேச நிலைமை ரொம்பச் சங்கடமான நிலைமைதான்!' என்று சொல்லிவிட்டுப் பேச்சை முடித்துக் கொள்ளலாம்" என்றார் விதண்டாவாதம். இது மட்டுமல்ல; எந்தக் காங்கிரஸ்காரர்கள் இந்தக் குறைவாகப் பேசும் இயக்கத்தில் கலந்து கொண்டு மிக மிகக் குறைவாகப் பேசுகிறார்களோ, அவர்களுக்குப் பரிசுகள் கூட வழங்கலாம் என்கிறார் விதண்டாவாதம்.

இவற்றையெல்லாம் திரு லால்பகதூர் சாஸ்திரியார் ஒப்புக் கொள்வாரா என்பது சந்தேகம்தான். ஏனெனில், அவரைப் போன்ற காங்கிரஸ் தலைவர்கள், பாக்கிக்கெல்லாம் உச்சவரம்பு கட்டினாலும் கட்டுவார்களே தவிர பேச்சுக்கு மட்டும் உச்ச வரம்பு கட்ட மாட்டார்கள்.

ஒவ்வொரு காங்கிரஸ்காரரும், வட்டாரரீதியில் இவ்வளவு வார்த்தைகள்தான் பேச வேண்டும் என்று உச்சவரம்பு கட்டலாமல்லவா? மேலிடத்துத் தலைவர்கள், மொத்தம் ஒரு நாளைக்கு 1000 வார்த்தைகள்; ராஜ்ய காங்கிரஸ்காரர்கள் 600 வார்த்தைகள்; ஜில்லா காங்கிரஸ்காரர்கள் 200 வார்த்தைகள்; தாலூகா காங்கிரஸ்காரர்கள் 75 வார்த்தைகள்; கிராம காங்கிரஸ்காரர்கள் 24 வார்த்தைகள் என்று வரம்பு கட்டினால் என்ன?

சட்டசபை காங்கிரஸ் அங்கத்தினர்களைப் பற்றி நான் ஒன்றும் கூறப் போவதில்லை. கட்சிக் கட்டுப்பாட்டின் கீழ் அவர்கள் பேச்சில் ஏற்கெனவே உச்ச வரம்பு கட்டினாற் போலத்தான் இருந்து வருகிறார்கள்! மற்றவர்களின் பேச்சுக்குத்தான் இப்போது உச்ச வரம்பு தேவை.

நமது சென்னை ராஜ்யத்தில் குறைவாகப் பேசும் காங்கிரஸ் தலைவர்கள் சிலர் இல்லாமற் போய்விடவில்லை. அவர்களுள் முதன் மந்திரி திரு காமராஜ் அவர்களைக் குறிப்பிட வேண்டும்.

ஆந்திரப் பிரதேச முதன் மந்திரி ஸ்ரீ சஞ்சீவி ரெட்டியும் இனிமேல் தமது பேச்சுக்களைக் குறைத்துக் கொள்ளப் போவதாக அறிவித்திருக்கிறார். இதர காங்கிரஸ்காரர்களையும் இவ்வாறு செய்யுமாறு கேட்டுக் கொண்டிருக்கிறாராம்.

இந்தியப் பிரதமர் நேருஜியின் பிரசங்கங்கள் இப்போதெல்லாம் சற்று சுருக்கமாகவே அமைந்து வருவதைக் காணலாம். இதற்குக் காரணம், அவருடைய புதல்வி ஸ்ரீமதி இந்திராகாந்தியின் முயற்சியாக இருந்தால் ஆச்சரியமில்லை. "ஐந்து நிமிஷ நேரத்துக்குள் பிரசங்கத்தை முடித்துக் கொள்ளவேண்டும்!" என்று ஸ்ரீமதி இந்திரா காந்தி, தமது தந்தைக்குச் சிலமாதங்களுக்கு முன் கட்டளை விதித்து இருக்கலாம். அப்படியிருந்தும் டெல்லி பார்லிமெண்டு காங்கிரஸ் கட்சிக் காரியதரிசிகள் திருப்தியடையவில்லை. "கட்சிக் கூட்டத்தில் நேருஜி தமது பிரசங்கத்தைக் குறைத்துக் கொண்டு, அங்கத்தினர்கள் பேசுவதற்கு அதிக சந்தர்ப்பம் அளிக்க வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்! இதற்கு நேருஜி சம்மதம் தெரிவித்திருக்கிறார். "குறைத்துப் பேசுங்கள். அதிகமாகப் பேசாதீர்கள்!" என்ற கோரிக்கைகள் நாட்டில் இப்போதெல்லாம் அதிகரித்து வருவது நல்ல விசேஷம்தான்! ஆனால் இந்த 'அதிகமாகப் பேசாதீர்கள்!' என்ற கோரிக்கைகள் அதிகமாகி விடக்கூடாது!

# மர்பி நற்செய்திகளை தருகிறது




**MODEL 0724**

- 6-வால்வ் • ஆல்-வேவ்
- 8-பாண்ட். முழுவதும் பாண்ட்ஸ்ப்ரட்
- ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இருவித மாடல்கள்)
- நிகர விலை ரூ. 495-00 உள்ளூர் வரிகள் தனி



## murphy radio

வீட்டிற்கு உற்சாகமளிக்கிறது!

மர்பி ரேடியோ ஆப் இந்தியா லிட்., பம்பாய்-12

MR/55

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

70

**எப்பொருள் எத்தன்மைத்து**
**ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு**

வெவ்வேறு பொருள்களைப் பார்க்கிறோம். அதனதன் குணவிசேஷங்களை அறிந்து அவற்றை ஆண்டு வருகிறோம். எந்தப் பொருளையும் அதன் உண்மைக் குணத்தைக் குறைவற அறிந்து உணர வேண்டும். குறைபட அறிந்த அறிவு அறிவாகாது. உண்மைப் பொருளை அறிந்து உணர வேண்டும்.

உலகம் மாயையால் கவரப்பட்டிருக்கிறது. மாயை, மயக்கம் இவற்றை அகற்றி உண்மைப் பொருளை அறிய வேண்டும். எந்தப் பொருளும் நம்மை மயக்கும். அந்த மயக்கத்தினால் தோன்றும் பொய்யை அகற்றி அதன் மெய்ப் பொருளை உணர வேண்டும். பொருள்களின் உண்மையை அறிந்து வாழ்ந்தோமானால் அது ஞான வாழ்வு ஆகும். பாவங்களில் சிக்க மாட்டோம்.

பொருள்கள் பல மாய வடிவம் காட்டும். அந்த மாய வடிவத்தை நீக்கி மெய் வடிவத்தைக் காண வேண்டும்.

அப்பொருள்-அந்தப் பொருளின் மெய்ப் பொருள்-உண்மையான பொருளை

மெய்ப் பொருளைக் கண்ட காட்சியே ஞானம். எல்லாப் பொருள்களிலும் உள்ளது ஒரு அத்துவதியப் பரம் பொருள்—இரண்டற்ற ஓர் பரம் பொருள்—அதுவே மெய்ப்பொருள். அந்தப் பரம்பொருளைக் காண்பதே மெய்யறிவு. அதுவன்றி, வெற்று ஐம்புலனறிவு-இது வேறு அது வேறு என்று உணரும் குறைபட்ட அறிவு—மெய்யறிவு ஆகாது. இவ்வாறு இந்தக் குறளுக்கு டி. கே. சி. பொருள் சொல்வார். இது பழைய உரைகளில் இல்லையாயினும் ஒரு சிறந்த உரையேயாகும்.

* * *

பொருள்களின் உண்மைப் பண்பைக் காணுவதில் பயின்றவர் பொய்த் தோற்றங்களினால் ஏமாந்து பாவங்களிலும் பற்றுகளிலும் பசைகளிலும் சிக்குண்டு பிறப்பும் இறப்புமாகிய சுழலில் அகப்பட்டு அலைய மாட்டார்கள். மறுபிறப்பினின்று வீடு பெறுவார்கள். காமத்திலும் குரோதத்திலும் லோபத்திலும் சிக்கிச் சாக மாட்டார்கள்.

**கற்றுஈண்டு மெய்ப்பொருள்**
**கண்டார் தலைப்படுவர்**
**மற்றுஈண்டு வாரா**
**நெறி.**

தலைப்படுதல்-எய்துதல், அடைதல், இவ்வுலகத்துக்கு மறுபடியும் வாராத நெறியை அடைவார்.

சிற்றின்பங்களுக்கு ஏதுவானதை உண்மை இன்பம் தருவதாக எண்ணுவது சாதாரணக் குற்றம். அதை அகற்றுவது மெய்யறிவாகும்.

* * *

துக்கம் நிறைந்த பிறப்பை அறுப்பது நம்முடைய நோக்கம் ஆகவேண்டும். துக்கத்துக்குக் காரணம் காமம், கோபம், மயக்கம். இந்த மூன்றும் அகற்றினோமானால் துக்கம் என்பது இல்லை. பிறப்பே அறுந்து போகும்.

**காமம் வெகுளி**
**மயக்கம் இவைமூன்றன்**
**நாமம் கெடக்கெடும்**
**நோய்.**

நாமம் கெட-கொஞ்சங்கூட இல்லாமல் தீர்ந்தோமானால், நோய்-துக்கமயமான பிறப்பு.

இடையறாத ஞான யோகத்தால் அதாவது அறிவும் தியானமும் அப்பியாசமும் மேற்கொண்டோமானால், காமம், கோபம், மயக்கம் இம் மூன்றும் வாசனையற நீங்கும்; பிறப்பாகிய துக்கம் தீர்ந்து போகும்.

முற்றிலும் தீர்ந்துவிடச் சக்தியற்றவர்களாயினும் விட்ட அளவு லாபம் என்பதை மறக்கலாகாது.



# கூட்டுறவுச் சாகுபடி

எஸ். ஒய். கிருஷ்ணசாமி

கூட்டுறவுச் சாகுபடி வேண்டுமா, வேண்டாமா என்பதைப் பற்றி நம் நாட்டில் இப்பொழுது பெரும் சர்ச்சை ஆரம்பமாகி யிருக்கிறது. நில உச்ச வரம்புத் திட்டமும் கூட்டுறவுச் சாகுபடியும் ஒரு புது உறவு கொண்டாடி வருகின்றன. ஆகவே இந்த இயக்கத்தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து பார்ப்பது அவசியம்.

பெரிய நிலப் பண்ணைகளை, வகுத்து நில மில்லாதவருக்கு அளிப்பதற்குச் சட்டங்கள் தயாராகி வருகின்றன. அச்சமயம் அதை எதிர்ப்பவர் ஒரு கேள்வி கேட்கிறார்கள். "சிறிய விவசாயி நூதன வழிகளாலும் விஞ்ஞான முறையிலும் நிலத்தைச் சாகுபடி செய்ய முடியாது. அம் முறைகளைக் கையாளப் பொருள் வேண்டும். அதுவும் இவனிடம் கிடையாது. பெரிய விவசாயிக்கு இந்தச்சௌகரியங்கள் உண்டு. ஆகவே இந்த உச்ச வரம்புத் திட்டங்கள் நாட்டின் நன்மையை அழிக்குமேயன்றிப் பாதுகாத்து உயர்த்த மாட்டா. எதற்கு இந்தத் திட்டம்?"

இக்கேள்விக்கெல்லாம் அஞ்சினவர்களா வரம்பு கட்ட வந்தவர்கள்? "சிறிய விவசாயி படும் பாட்டை நாங்கள் அறிவோம். அதை நீங்கள் புதிதாக எங்களுக்கு எடுத்துக் காட்ட வேண்டாம். சிறியவர் பலர் கூடிக் கூட்டுறவு விவசாயம் செய்தால் எல்லாச் சீர்திருத்தத்தையும் கையாளலாம். கூட்டுறவுச் சாகுபடியே விவசாய வியாதிக்குக் கைகண்ட மருந்து. அதை அமுலாக்கியே தீருவோம்" என்று பதிலளிக்கின்றனர்.

ஒரு விவசாயிக்கு இரண்டு ஏக்கர் நிலம் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். நூறு சிறிய குடியானவர்கள் ஒன்று சேர்ந்தால் அதுவே இருநூறு ஏக்கர் கொண்ட ஒரு சங்கம் ஆகிவிடுகிறது. இருநூறு ஏக்கர் சாகுபடி பெரிய குடித்தனம் போன்றது. உண்மை; ஆனால் இருநூறை நூறால் வகுத்தால் இரண்டுதான். சங்கத்தில் சேர்ந்த ஒவ்வொருவனுக்கும் தனது இரண்டு ஏக்கருக்குள்ள பங்குதான் கிடைக்கும். பின்னர் எதற்காகத் தன் உரிமையைப் பறி கொடுத்து விட்டுக் கூட்டுறவு விவசாய முறையை நாட வேண்டும்?

"இருநூறு ஏக்கர் சாகுபடியில் நவீன முறைகளைக் கையாண்டு செலவைக் குறைத்து அறுவடையை அதிகப்படுத்த முடியும். ஆகையால் இரண்டு ஏக்கரில் செய்யும் தனிச் சாகுபடியை விடக் கூட்டுறவுச் சாகுபடியில் விளைச்சல் அதிகம், வரும்படியும் அதிகம்" என்று போதனை செய்கிறார்கள்.

ஆனால் அதில் உண்மை இல்லை. தஞ்சாவூர் ஜில்லாவின் மேல் பாகத்தில், அதாவது தஞ்சாவூர், பாபநாசம் தாலுக்காக்களில் சிறிய பட்டாதார்கள் பெரும்பான்மையோர். கிழக்கே போகப் போக நூற்றுக்கணக்கான ஏக்கருக்கு உரிமை உள்ளவர்கள் அதிகம். மேல் 'டெல்டா'வில் விளைச்சல் அதிகம்: கீழ் 'டெல்டா'வில் விளைச்சல் குறைவு. இதற்கு நிலத்தின் தன்மை காரணம் என்று சிலர் கூறுவர். ஆனால் 1940ம் ஆண்டில் இதை நான் கவனித்து விசாரணை செய்தேன். சிறிய பட்டாதார் நிலத்திலிருந்து எடுக்கும் வருமானத்தைப் பெரிய பட்டாதார் எடுக்க முடியாது என்று தெரிந்தது. சிறியவன் தனக்குள்ள வயலின் ஒவ்வொரு சதுர அங்குலத்தையும் கவனித்து வருவான். இரவு பகல் என்று பார்க்காது உழைப்பான். மனைவி, மக்களெல்லாம் ஒன்றுகூடி நிலத்தில் வேலை செய்வார்கள். நிலத்தையே நம்பினவர்கள் அவர்கள். ஆகவே சிறிய பண்ணைக்காரன் ஒரு ஏக்கரில் எவ்வளவு விளைவிக்க முடியுமோ, அவ்வளவையும் விளைவித்துத் தீர வேண்டும். அதற்காக விடாமுயற்சியோடு வேலை செய்வான்.

கோயமுத்தூர், சேலம் ஜில்லாக்களில் சிறிய பட்டாதார்கள் அதிகம். அங்கே நீருக்குப் பஞ்சம். கிணற்று நீரை ஒரு துளி கூடச் சேதாரமின்றி இறைத்து வயலுக்குப் பாய்ச்சுவது வழக்கம். விடியற்காலையிலிருந்து இரவுவரை வேலைசெய்யும் உழைப்பாளர்களை அங்கு காணலாம். இரண்டு மூன்று ஏக்கரில் காப்பிக் கொட்டையைத் தவிர வேறு எல்லா உணவுப் பொருள்களையும் அவர்கள் சாகுபடி செய்து வாழ்க்கையை நடத்துவது ஒரு அதிசயம். நீரையோ நிலத்தையோ அபகரித்தவரை யம லோகத்துக்கே அனுப்பி விடுவார்கள். அவ்வளவு பற்றுதல் தங்கள் நிலத்தில்!

பஞ்சாப் மாகாணத்தில் 'ஜாட்' என்று ஒரு குடியானவ மரபினோர், தங்கள் நிலத்தைச் சாகுபடி செய்யும் சீரைப் பார்த்தால்தான் தெரியும், சிறு விவசாயி

நிலத்தை எப்படிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது.

ஜப்பானில் தலைக்கு மூன்று ஏக்கருக்கு மேல் கிடையாது. ஆசியாவிலேயே பெரும் விளைவு அங்கேதான்.

தன்னுடைய நிலத்தைப் பொன்னைப் போல் காப்பாற்றி வரும் சிறிய விவசாயி தான் நாட்டுக்கு நாயகன். அவன்தான் அதிகப்படியான விளைவு செய்கிறான். ஏக்கர் அதிகரித்தால் விளைவு அதிகமாகும் என்பது சாகுபடியின் தன்மையைத் தெரியாத நகரவாசிகள் பேச்சு. அமெரிக்கா போன்ற நாடுகளில் ஒருவனுக்கு ஆயிரம் அல்லது பத்தாயிரம் ஏக்கர் நிலம் உண்டு. வேலை செய்வோருக்குக் கூலி அதிகம். அங்கே உழுவதற்கும், நடுவதற்கும், அறுவடை செய்வதற்கும் கூலி கொடுத்து முடியாது. செலவைக் குறைக்க 'டிராக்டர்', 'ஸீடர்', 'ஹார்வஸ்டர்' முதலிய இயந்திரங்களை உபயோகித்து, ஓரிருவரே ஆயிரக்கணக்கான ஏக்கர்களைச் சாகுபடி செய்கிறார்கள். ஜனத்தொகை குறைவாகவும் நிலம் ஏராளமாகவும் இருக்கும் நாடுகளில் பெரும் சாகுபடியில் (அதாவது ஆயிரக்கணக்கான ஏக்கர்களில், நூறு இருநூறில் அல்ல) சிக்கனம் உண்டு. இந்தியாவைப் போல் ஜனத்தொகையும் பெருகி நிலமும் அனைவருக்கும் வேண்டிய அளவு இல்லாது இருக்கும் நிலைமையில், ஒன்று சேர்த்தால் செலவு குறைந்து விளைவு பெருகும் என்று எண்ணுவது அறியாமையாகும்.

இந்தியாவில் விவசாயம் ஒரு தொழில் அல்ல; ஒரு வாழ்க்கை வழி. அதை வேர் அறுப்பது தீமையைத் தேடுவதாகும். கூட்டுறவுச் சாகுபடியில் குடியானவனுடைய மனைவியும் மக்களும் இரவு பகலாய் உழைப்பார்களா?

மேலும், பெரியவரிடம் பிடுங்கிக் கொடுக்கும் நிலம் ஓரே இடத்தில் சேர்க் இருக்குமா? ஒரு பட்டாதாருக்கே பல இடங்களில் நிலம் இருக்கும். பல பேரிடம் வாங்கிய துண்டுகள் இன்னும் சிதறியிருக்கும். இந்தத் துண்டுகளை வைத்துக் கூட்டுறவுச் சாகுபடி செய்து வருமானத்தை எப்படி அதிகரிப்பது? இல்லை, இடையே இருப்பவரைப் பலாத்காரமாகக் கூட்டுறவாளியாக மாற்றப் போகிறார்களா, என்ன?

கூட்டுறவுச் சாகுபடியை நமது அரசாங்கத்தார் இதுவரை அனேகம் இடங்களில் ஆரம்பித்தாகி விட்டது. மருந்துக்காவது ஓர் இடத்தில் சங்கம் முன்னேறி இருக்கிறதா? இன்றுவரை நடத்திய கூட்டுறவுச் சாகுபடிச் சங்கங்கள் சரியாக வளரவில்லை என்பதற்கு அரசாங்க அத்தாட்சிகள் ஏராளமாக இருக்கின்றன. இலவசமாக நிலம் கிடைப்பவரைச் சேர்த்துக் கூட்டுறவுச் சாகுபடியை ஆரம்பம் செய்து பார்த்தாகி விட்டது. அரசாங்க அறிக்கைகளே இந்தச் சங்கங்கள் சரியாக நடக்கவில்லை என்று கூறுகின்றன.

கூட்டுறவுச் சாகுபடிக்கும் உச்ச நில வரம்புத் திட்டத்துக்கும் என்ன தொடர்பு? இப்பொழுது இந்தியாவில் சிறிய விவசாயிகள்தானே பெரும்பான்மையோர். ஏன், இப்பொழுதே அவர்களைச் சேர்த்து வைத்துக் கூட்டுறவுச் சாகுபடி செய்வதுதானே? அது நடக்காது என்று தெரிந்து, "நாங்கள் கொடுக்கும் நிலத்தைக் கூட்டுறவுச் சாகுபடி செய்தே தீர வேண்டும்" என்ற நிபந்தனைப் பரிசை வழங்கி இனிமேல் கூட்டுறவுச் சாகுபடியை அமுலுக்குக் கொண்டு வரப் போகிறார்களாம்! "நிலம் தருவேன்" என்றால் நிலம் இல்லாதவன் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் ஒத்துக் கொள்வான். ஆனால் அது நிலைக்காது.

சமீபத்தில் மத்திய அரசாங்கத்தின் ஆதரவில் சிலர் சைனா தேசம் சென்று அங்கே நடந்து வரும் கூட்டுறவு விவசாயத்தைக் குறித்து ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார்கள். சைனாவில் விவசாயம் மூன்று அவதாரங்கள் எடுத்திருக்கிறது. முதலில், ஒரு கிராமத்தில் இருப்பவர் தங்கள் சொந்த நிலத்தைச் சாகுபடி செய்த பிறகு மிஞ்சிய வேளையில் மற்றவருக்காக உழைத்தும், தங்கள் விவசாயக் கருவிகளை மற்றவருக்காக உதவியும் வர வேண்டும் என்று ஒரு திட்டம் கொண்டு வந்தனர். இவ்வாறு செய்த உதவிக்கு அறுவடையில் பங்கு கொடுக்கப்பட்டது. இதற்குப் "பரஸ்பர உபகாரத் திட்டம்" என்ற நாமமும் கொடுக்கப்பட்டது. இரண்டாவதாக, இது போதாதென்று, கூட்டுறவுச் சாகுபடி ஆரம்பிக்கப்பட்டது. இந்தத் திட்டத்தில் ஒவ்வொரு விவசாயியும் பொதுவாக உழைக்க வேண்டும்; அவனுடைய சொந்த நிலத்துக்கென்று பொது 'அறுவடையில் ஒரு பங்கும், அதன் மேல் பொதுவுக்கு உழைத்ததற்காகச் செய்த வேலையின் கணக்கை யொட்டி ஒரு பங்கும் கொடுக்கப்பட்டன. இந்தத் திட்டத்தில் "தன்னுடைய சொந்த நிலம்" என்ற ஒரு பேர் மட்டும் மிஞ்சியது. வேலை யெல்லாம் பொதுவிலே தான் செய்யப்பட்டது. மூன்றாவது திட்டத்தில் நிலம் எல்லாம் பொது மக்களுக்கு உரிமை, வேலைக்கு மட்டும் கூலி உண்டு என்ற திட்டம் அமுலாகி நில உரிமை அழிந்து போய் அனைவரும் "கூட்டுத் தொண்டர்" ஆகி விட்டனர். இதுதான் "கம்யூனிஸ்ட்" மதத்தில் கூறியிருக்கும் பொது உரிமை என்ற பூலோக சொர்க்கம். சொத்து எல்லாம் பொதுவாக இருக்க வேண்டும், உழைப்புக்கு மட்டும் கூலி என்று வாதாடுபவருடன் நான் இப்பொழுது எதிர்த்துப் பேச முன் வரவில்லை. "கம்யூனிஸ்ட்" வழிகள் நன்மையைத் தரலாம், தீமையைத் தரலாம். அது வேறு கேள்வி. சைனாவில் கூட்டுறவு விவசாயம் நன்றாக நடைபெற்று வருகிறது. அதுவே நமக்கும் வேண்டும் என்பவருடன்தான் எனக்கு விரோதம். சைனாவில் கூட்டுறவைக் கம்யூ




புதுதில்லி கர்நாடக சங்கீத சபையின் ஆதரவில் நடந்த தியாகராஜ ஆராதனை உற்சவத்தில் உற்சாகத்துடன் பஞ்சரத்னக் கிருதி பாடிய திரு இ. எஸ். கிருஷ்ண மூர்த்தியும், குரு கே. ஏ. பத்மநாபனும்.

னிஸ்ட் கட்சியினர் சில காலத்துக்கு ஒரு கருவியாக உபயோகித்துக் கொண்டு நில உரிமையை அழித்துவிட்டார்கள் என்பது உண்மை. 'அவ்வாறு உரிமையை அழிப்பது எங்கள் நோக்கம்' என்று நமது அரசாங்கமும் கம்யூனிஸ்ட் தத்துவத்தைக் கடைப் பிடிக்கட்டும். 'அதொன்றும் இல்லை. கூட்டுறவுச் சாகுபடியே எங்கள் நோக்கம்' என்று கூறுவார்களானால் அது தான் கண்மூடித்தனம்.

கூட்டுறவுச் சாகுபடி அப்படியே நிற்காது. முன் சென்று பொது சாகுபடியாக மாறி நில உரிமை அழிந்தாவது போகும். இல்லை, பின்சென்று அவரவர் நிலங்களை அவரவர் கவனிக்கும்படியாவது நேரும். ஆகவே, நில உரிமை அழிவது நன்மை என்ற கொள்கையை ஒப்பாதவர் கூட்டுறவை நம்பியிருப்பது பேதைமை.

ஆனால், விவசாயத்தில் கூட்டுறவுக்கு இடம் இல்லை என்று எண்ணக் கூடாது. விவசாயிக்கு வேண்டிய விதை, எரு, கலப்பை போன்ற கருவிகள், இவைகளை வாங்குவதற்குக் கூட்டுறவுச் சங்கம் வேண்டும். முன் போட்டுப் பின் எடுப்பது விவசாயத்துக்கு வாய்ந்த தன்மை. ஆகையால் விவசாயிக்குக் கடன் கொடுக்கச் சங்கம் வேண்டும். தானியத்தை அறுவடையானதும் தனித்தனியே விற்பனை செய்தால் விலை இறங்கி விடும். இடைரென்று ஏராளமான தானியங்களை விற்பதும் சரி அன்று. அனைவருடைய தானியத்தையும் ஒன்றுசேர்த்து, அதை மெதுவாக விற்பனை செய்வதற்குக் கூட்டுறவுச் சங்கம் தேவை. இவ்வாறு ஒவ்வொரு விஷயத்திலும் கூட்டுறவுச் சங்கம் விவசாயிக்கு உதவும். சாகுபடி மட்டும் விவசாயி தனியாகச் செய்ய வேண்டும். தனக்கென்று உழைப்பதுபோல் பொதுவுக்கு உழைக்க வேண்டும் என்பது ஏட்டுச் சுரைக்காய். மேலிருந்து செய்யும் அதிகாரத் தோரணையினாலும், வழங்கும் பண உதவியினாலும், நிலமின்றியிருப்போர்க்கு நிலம் கிடைத்த சில நாட்களுக்குக் கூட்டுறவுச் சாகுபடி நன்றாக நடப்பது போல் வெளித் தோற்றம் அளித்து உள்ளுக்குள் உளுத்து விடும்.

அரசியல் பிரச்னை ஒன்றும் இதோடு கலந்துள்ளது. மேனாட்டுச் சரித்திரங்களைப் படித்தால், சுதந்திரத்துக்கும் சுயேச்சையான வாழ்க்கைக்கும் முன்னின்று போர் புரிந்தவர்கள் சிறிய விவசாயிகளே என்று தெரிய வருகிறது. கூலிக்கு வேலை செய்பவன் சுதந்திரத்துக்குப் போராட மாட்டான். தன் வயிற்றைத் தானாக உழைத்து வளர்ப்பவனுக்கு மானமும் மரியாதையும் வாழ்க்கைக்கு முக்கியம். அவைகளைக் காப்பாற்ற அவன் எப்பொழுதும் தயாராக இருப்பான். அவன் தான் சுதந்திரத்துக்குக் காவலாளி. அவனை ஒழிப்பது நாட்டின் நலத்துக்குப் பெரும் தீங்கு. அவனுக்குத் தன் உழைப்பிலும் சொத்திலும் இருக்கும் ஆர்வத்தை வளர்க்க வேண்டுமே யன்றி, ஒருவிதத்திலும் அதைக் குறைக்கக் கூடாது.

எண்ண எண்ண இந்தக் கூட்டுறவுச் சாகுபடி அச்சம் அளிக்கிறது. பொது மக்களைத் திரட்டித் திண்டாட வைக்கும் குறுக்கு வழி என்று விளங்குகிறது. அவசரமின்றி இதனால் விளையும் தீங்குகளைத் தெரிந்து கொண்டு இதைத் தள்ளி விடுவதற்குப் போதிய தைரியத்தை நாம் அடைய வேண்டும்.

# சித்திரச் சிறு வெடிகள்

ஆந்திர என்.ஜி.ஓ.வினராகிய எங்களுடைய குறைகளைத் தீர்க்கும் வரையில் தெரு நடைபாதையில் தூங்கும் விரதம் அனுஷ்டிப்போம். — செய்தி -




பெண் மக்களின் முன்னேற்றத்தைச் சுட்டிக் காட்டும் வகையில் ஸ்ரீமதி இந்திரா காந்தி காங்கிரஸ் அக்கிராசனர் பதவிக்கு வந்திருப்பதைப் பாராட்டிப் பர்தா அணிந்த மாதர்கள் ஏராளமாகக் கூடி வரவேற்பு அளித்தார்கள். — டெல்லிச் செய்தி -



எடின்பரோ கோமகனுக்குப் பரிசாகப் பத்தமடைப் பாய், குத்து விளக்கு இன்னும் தந்தசாமான்கள் கொடுத்து அனுப்பினார்களாம்!



எனக்குத் தெரியாமல் போய் விட்டதே! நாலு கட்டு அப்பளாம், சுண்டைக் காய் வத்தல் எல்லாம் கொடுத்து அனுப்பி இருப்பேனே!



சாமா



மனைவி: என்னங்க இது? பேப்பரைப் படித்து விட்டு இப்படி துக்கமா உட்கார்ந்து விட்டீங்க?

கணவர்: இப்போ எல்லோரும் பாதயாத்திரை போறாங்களே; கொஞ்ச நாளில் சந்திரமண்டல யாத்திரைக்கு இவங்க போகணும் என்றால் எப்படிப் போகப் போறாங்க? என்று யோசிக்கிறேன்!

உங்கள் பேராதரவைப் பாராட்டி "ஆஷா" அழகு சாதனத் தயாரிப்பாளர்கள் கண்ணைக் கவரும் காலண்டர் ஒன்றை அவர்களுடைய லாவண்டர் பிரிலியண்டைன், அல்லது ஒரு டிலக்ஸ் பவுடர் பெட்டி வாங்குபவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்திருக்கிறார்கள்.

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

---

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(நிறுவியது)

"வீணா விஹார்," 17-A. ஸயான் - மாதுங்கா எஸ்டேட்
(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)
**பம்பாய் - 22**
தந்தி: 'GROW RICH'

POST BAG No. 6759

| 25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள்<br>2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்<br>1959 மார்ச் மாத ஸீரிஸ் | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

சேரக் கடைசி தேதி 7-3-59 ... முதல் ஏலத் தேதி 8-3-59

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ 50/- | ரூ 1,250/- | H | ரூ 15/- | ரூ. 375/- |
| F | ரூ 25/- | ரூ 625/- | | | |

## நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 7-3-59 ... முதல் ஏலத் தேதி 8-3-59

*50 மாதங்கள்* *50 அங்கத்தினர்கள்*

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| A | ரூ. 100/- | ரூ 5,000 | ரூ 500/- |
| B | ரூ 50/- | ரூ. 2,500 | ரூ 250/- |
| D | ரூ. 20/- | ரூ 1.000 | ரூ 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) **எம். வி. சுப்ரமணியம்,** மானேஜிங் டைரக்டர்

வெள்ளிக்கிழமை *(வார விடுமுறை நாள்)*

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை: மாலை 4 முதல் இரவு 8 மணி வரை

தலைமை ஆபீஸ்: "பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரித் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5

கிளைகள்: "ஜெனகத் பில்டிங்ஸ்", விக்டர் ஜுபிலி பார்க் ரோடு, பெங்களூர்-2 ● B-8, பிளாக் III ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1 ● 10197, அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புது டெல்லி-5

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# புதிய 'திட்டம்' உருவாகிறது!

**ரஜனி**

—கொழும்பு, பிப்ரவரி 11ல்.

சென்றவாரம் இலங்கையின் சுதந்திர தினத்தைச் சிங்களவர்கள் வாழும் தென் இலங்கை மாத்திரம் கொண்டாடத் தமிழ் மக்கள் வாழும் வடக்கு, கிழக்கு மாகாணங்கள் கட்டுப்பாடாகத் துக்க தினமாக அதை அனுஷ்டித்தனர். சென்ற 1948.ம் வருட பிப்ரவரி மாதம் 4-ம் தேதி இலங்கை பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுப் பரிபூரண சுதந்திரம் அடைந்தது. இலங்கை பெற்றது உண்மையான சுதந்திரம்தானா அல்லது மறைமுகமாகவேனும் பிரிட்டிஷ் செல்வாக்கு தொடர்ந்து இருந்து வருகிறதா என்பதைப் பற்றிச் சில வருடங்களுக்கு முன்புவரையில் பலருக்கும் சந்தேகம் இருந்து வந்தது உண்மையே. இலங்கையிலிருந்த பிரிட்டிஷ் தளங்கள் இலங்கையின் கைக்கு மாறிய பின்னர் இவ்விதச் சந்தேகம் யாருக்குமில்லை. தவிர அயல்நாட்டுப் பிரச்னைகளில் இலங்கை அரசாங்கம் சுயேச்சையான கொள்கையைக் கடைப்பிடித்து வருவதும் சுதந்திரத்தை உண்மையாக்கியுள்ளதென்றே கூற வேண்டும்.

என்றாலும், சுதந்திர தினத்தைத் தமிழ் பேசும் மக்கள் கொண்டாடாமல் அதைத் துக்க தினமாகவும் தமிழ் மக்களின் உரிமைப் போராட்ட தினமாகவும் அனுஷ்டிக்கப் போதிய நியாயம் இருக்கிறது. நாட்டின் சுதந்திரத்துக்காகப் போராடியவர்களில் முன்னணியில் இருந்தவர்கள் தமிழர்கள். அப்படியிருந்தும் நாடு பெற்ற சுதந்திரத்தில் அவர்களுக்குப் பங்கில்லாது செய்யப்பட்டிருக்கிறது. ஒற்றை ஆட்சியை ஸ்திரப்படுத்தி, சுதந்திரத்தின் பலனைச் சிங்கள வகுப்பார் மட்டுமே அனுபவிக்கும் முறையில் அரசியல் திட்டம் இயங்கி வருகிறது. இதன் பயனாக, தமிழ் மக்கள் சம்பந்தப்பட்டமட்டில் நாடு பெற்ற சுதந்திரம் அர்த்தமோ அல்லது பயனோ இல்லாது போய்விட்டதுடன் பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பதில் சிங்களவர்கள் ஆட்சியை நிலைநிறுத்துவதாகவே முடிந்திருக்கிறது. ஆகவே பிப்ரவரி 4-ம் தேதியன்று தமிழ் மக்கள் தங்களது இல்லங்கள்தோறும் கறுப்புக் கொடிகளைப் பறக்கவிட்டு அமைதியாகத் துக்க தினம் அனுஷ்டித்தார்கள். யாழ்ப்பாணம் மட்டக்களப்பு நகர சபைக் கட்டிடங்கள் மீதெல்லாம் கறுப்புக் கொடிகள் பறக்க விடப்பட்டிருந்தன. அதேசமயம் தமிழ்ப் பகுதிகளிலுள்ள சிங்களவர்கள் சுதந்திர தினத்தைக் கொண்டாடத் தமிழ் மக்கள் சிறிதும் இடைஞ்சல் விளைவிக்காமல் இருந்தது குறிப்பிடத் தகுந்தது மட்டுமல்ல, பாராட்டத் தக்கதுமாகும்.

* * *

இலங்கை அரசாங்கத்தின் நீதி நேர்மையற்ற பிரஜாவுரிமைச் சட்டத்தின் பயனாக இந்நாட்டில் பிறந்து தலைமுறை தத்துவமாக இங்கேயே வாழ்ந்து வருபவர்களும் இலங்கையைத் தவிர வேறு நாட்டை அறியாதவர்களுமான, சுமார் ஏழரை லட்சம் இந்திய வம்சாவளியினர் நாடற்றவர்களாக்கப் பட்டிருக்கிறார்கள் அல்லவா? அவர்களுக்கு ஏற்கனவே இருந்து வரும் எண்ணித் தொலையாத துன்பங்கள் போதாதென்று அவர்களது பிழைப்பில் மண்ணைப் போடவும் திட்டங்கள் தீட்டப்பட்டு வருவதாக அஞ்சப்படுகிறது. இந்தியப் பிரஜைகளை நாடு கடத்தும் திட்டத்தைப் பற்றி மந்திரிசபை உபகமிட்டி சென்றவாரம் தொழில் மந்திரி திரு. டி. பி. இலங்கரத்ன தலைமையில் கூடிப் பேசியபோது, சில இந்தியர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட விஸா காலாவதியாகியவுடன் நாடு கடத்தப் படுவதைத் தடுப்பதற்காக பாஸ்போர்ட்டுகளைக் கிழித்தெறிந்துவிட்டு நாடற்றவர்களின் ஜாபிதாவில் சேர்ந்து விடுவதாயும் ஆகையால் நாடற்றவர்களை வேலையில் வைத்துக் கொண்டிருப்பதையும் அவர்களுக்கு வேலை கொடுப்பதையும் தடை செய்வது பற்றி உபகமிட்டியினர் யோசித்து முடிவு செய்ய வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டிருக்கிறார். இலங்கையிலுள்ள பத்து லட்சம் இந்திய வம்சாவளியினர்களில் சுமார் ஒன்றரை லட்சம் பேர்கள் மட்டுமே இந்தியா பாஸ்போர்ட் எடுத்துள்ள இந்தியப் பிரஜைகளென்று சென்ற 1954 ம் வருடம் டில்லி ஒப்பந்தத்தின் போது ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது. இவர்களில் பெரும்பாலோர் சென்ற நான்கு வருடங்களுக்கிடையில் அரசாங்கத்தின் நாடு கடத்தும் திட்டத்தின் கீழ் இந்தியாவுக்குத் திருப்பியனுப்பப் பட்டு விட்டனர். பாக்கியாகச் சுமார் ஏழு அல்லது எட்டாயிரம் இந்தியப் பிரஜைகளுக்குமேல் இருக்க மாட்டார்களென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. யாரோ ஒரு சிலர் பாஸ்போர்ட்டுகளைக் கிழித்தெறிந்துவிட்டு நாடற்றவர்களின் ஜாபிதாவில் சேர்ந்து விட்டார்களென்பதற்காக இலங்கையிலேயே பிறந்தவர்களும் தலைமுறை தத்துவமாக இந்நாட்டிலேயே வாழ்ந்து வருகிறவர்களும் இலங்கையைத் தவிர வேறு நாட்டை அறியாதவர்களுமான ஒன்பது லட்சம் பேர்களை அவர்களது பிழைப்பில் மண்ணைப்போட்டு வதைப்பதா? இம்மாதிரியான யோசனை எவ்வளவு பெரிய சவு இரக்கமற்ற அநியாயமான யோசனை?

இதில் முக்கியமாக ஒரு விஷயம் கவனிக்கத் தகுந்தது. இந்த ஒன்பது லட்சம் இந்திய வம்சாவளியினர்களும் நாடற்றவர்களென்ற திரிசங்கு சொர்க்க நிலைமையைத் தாங்களாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை. பிறந்து வளர்ந்து உழைத்து உழைத்து ஓடாகத் தேய்ந்து

போன நாட்டிலே பிரஜாவுரிமை பெறுவதற்காக மனுக் கொடுத்தவர்கள். அரசாங்கத்தின் நீதிநேர்மையற்ற பிரஜாவுரிமைச் சட்டம் அவர்களுக்குப் பிரஜாவுரிமையை மறுத்து அவர்களை நாடற்றவர்களாக்கி விட்டது. இவர்களில் பெரும்பாலோருக்கு இந்தியா கறுப்பா அல்லது சிவப்பா என்பது தெரியாது. ஒரு சிலர் யாத்திரைக்காக இந்தியாவுக்குப் போய் வந்துள்ள போதிலும், இந்தியாவில் அவர்களுக்கு உற்றார் உறவினர்கள் யாருமில்லை. தவிரவும் இவர்கள் இலங்கையிலேயே நீடித்து வசித்து வருவதாலும் இந்தியாவிடம் தங்களுக்குத் தொடர்பில்லை யென்று சத்தியப் பிரமாணம்செய்து இலங்கைப் பிரஜாவுரிமைக்கு மனுக் கொடுத்துள்ளதாலும் இவர்கள் எங்களது பிரஜைகளல்லவென்று இந்திய அரசாங்கம் திட்டவட்டமாகக் கூறி விட்டது. இலங்கையோ இவர்களுக்கு இலங்கைப் பிரஜாவுரிமையளிக்க மறுக்கிறது. இவ்விதம் இரு நாடுகளும் கையைக் கழுவிவிட்ட நிலைமையில் செய்வதென்னவென்று தடுமாறும் மக்களுடைய பிழைப்பையும் பிடுங்கி அவர்களைப் பட்டினி போட்டு வதைப்பதென்றால், அதுவும் புத்தபகவான் போதித்த அன்புநெறியைக் கடைப்பிடிப்பதாகக் கூறும் ஒரு நாட்டிலே இத்தமாதிரியான அநியாயம் நடப்பதென்றால் இது எத்தனை பெரிய கொடிய பயங்கர அக்கிரமம்?

நாடற்ற மக்களின் வேலையைப் பறித்து அவர்களது வயிற்றில் அடித்துப் பட்டினி போட்டால் அவர்கள் இந்தியாவுக்குப் போய் விடுவார்களென்று அரசாங்கம் மனப்பால் குடிக்கிறது. இம்மாதிரியான அநியாய நடவடிக்கைகளினால் இந்தியர்களை விரட்டிவிட முடியாதென்றும், அவர்கள் செத்தாலும் இங்கு சாவார்களே தவிர தங்களுக்கு முன்பின் தெரியாத ஒரு நாட்டுக்குப் போய்விட ஒரு போதும் அவர்கள் சம்மதிக்க மாட்டார்களென்றும் காங்கிரஸ் உப தலைவர் திரு கே. ராஜலிங்கம் எச்சரித்திருக்கிறார். நாடற்றவர்களின் பிழைப்பில் மண் போடுவதில்லையென்று முன்னாள் பிரதம மந்திரியான ஸர் ஜான் கொத்தலாவலை உத்தியோகபூர்வமாக வாக்குறுதியளித்திருப்பதைத் திரு ராஜலிங்கம் சுட்டிக் காட்டி இந்த வாக்குறுதியை அரசாங்கம் புறக்கணிப்பதாயிருந்தாலும்கூட மிலேச்சத்தனமாகப் பல லட்சம் மக்களைப் பட்டினி போடும் காரியத்தில் இறங்குவது கேவலத்திலும் கேவலம் என்பதை அவர் இடித்துக் காட்டியிருக்கிறார். இந்திய வம்சாவளியினர்களான தோட்டத் தொழிலாளரைப் பட்டினி போட்டு வதைத்து விரட்ட ஒரு நாசுக்கான சதித் திட்டம் இப்போது உருவாகி வருவதைக் காண முடிகிறதாகையால் இந்திய அரசாங்கமும் இந்தியத் தலைவர்களும் மிருந்த விழிப்புடன் இருக்க வேண்டிய அவசியம் பலமாக வற்புறுத்தப்படுகிறது.




## புதிய காரியதரிசி

கொழும்பில் சென்ற பல ஆண்டுகளாகச் சிறப்பாகப் பொதுப் பணியாற்றி வரும் இலங்கை இந்தியச் சங்கத்தின் வருடாந்தரப் பொதுக் கூட்டம் இவ்வாரம் நடைபெற்றபோது அதற்குத் திரு கே. எம். ஷா தலைவராகவும் திரு எஸ். பத்மநாப அய்யர் காரியதரிசியாகவும் தெரிவு செய்யப்பட்டார்கள். திரு எஸ். பத்மநாப அய்யரே சென்ற ஆண்டிலும் காரியதரிசியாயிருந்தார். சென்ற வருட மே, ஜூன் மாத வகுப்புக் கலகத்தின் போது வீடு வாசல்களை இழந்து தவித்த இந்தியப் பிரஜைகளுக்குத் திரு அய்யரும், இந்தியச் சங்கமும் செய்த சேவைகள் அனந்தம். அவற்றை இந்திய மக்கள் ஒரு போதும் மறக்க முடியாது. இந்தியச் சமூகத்தின் முதுபெருந் தலைவரும் காலஞ்சென்றவருமான திரு பெரிசுந்திரம், அக்காலத்திய இந்திய அரசாங்க ஏஜண்ட் திரு டி. எல். ஆர். சந்திரன் திரு ஏ. வி. பாய் முதலான பல பெரியார்களினால் 1936-ம் ஆண்டில் ஸ்தாபிக்கப்பட்ட இச் சங்கம் அன்று முதல் இன்று வரையில் சமூகத்துறையில் அரும் பணியாற்றி வருவது குறிப்பிடத்தக்கது. இதன் காரியதரிசியான திரு பத்மநாபய்யர் இலங்கையிலுள்ள இந்திய அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷனின் இலங்கைக் கிளைத் தலைவராவார்.

பிப்ரவரி 27உ முதல்...

சென்னை மற்றும் தென்னாடெங்கும்

கஸ்தூரி பிலிம்ஸ்

# நான் சொல்லும் ரகசியம்

டைரக்ஷன்

P. ஸ்ரீதர்ராவ்

தயாரிப்பு

V.C. சுப்புராமன்

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 25. பாற்கடலைக் கடைந்ததும் லக்ஷ்மி அவதாரமும்

சுகர் பரீக்ஷித்துக்கு மேலும் பகவானுடைய கதைகளைச் சொல்லலானார் :

ஆறுவது மன்வந்தரத்தில் ஹரி ஆமை அவதாரம் எடுத்துப் பாற்கடலில் மந்தர மலையைத் தாங்கினார். தேவர்களுக்கு அமுதம் அளிப்பதற்காக மந்தர மலை மத்தாக அமைக்கப்பட்டது. அசுரரால் போரில் தோல்வியும் அடைந்து உயிரையும் இழந்த தேவர்களுக்கு அமுதம் அளிக்க வேண்டி வந்தது. போரில் தோல்வியுற்றது மின்றி, இந்திரனைத் துர்வாச மகரிஷியின் சாபமும் வருத்தியது. ஒரு சமயம் துர்வாசர் வைகுண்டத்தில் இருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார். பரமன் அளித்த பூமாலையைக் கழுத்தில் அணிந்திருந்தார். வரும் வழியில் ஐராவதத்தின் மீதேறி வரும் இந்திரனைக் கண்டார். முனிவர் தம் மாலையை இந்திரனுக்கு அளித்தார். செருக்கேறிய இந்திரன் அம்மாலையை யானையின் தலை மீது விட்டெறிந்தான். யானை அதைத் துதிக்கையால் எடுத்துப் புவிமீது போட்டுக் காலால் மிதித்தது. முனிவருக்குத் தாங்காத கோபம் வந்தது. இந்திரனும் அவனும் மூவுலகும் சிறப்பின்றிப் பாழாகப் போக வேண்டும் என்று சாபம் கொடுத்தார். அன்று தொட்டு வேள்வியும் நற்சடங்கும் இல்லாது உலகங்களெல்லாம் இருள் மூடிக் கிடந்து வந்தன.

இந்நிலையில் இந்திரனோடு வானோர் அனைவரும் பிரமனை அண்டினர். பிரமன் அவர்கள் பரிதவிப்பதைக் கண்டு, ''இந்த வருத்தத்தைப் போக்க வல்லவன் விஷ்ணு ஒருவனே'' என்று கூறி, அவருடன் வைகுண்டம் சென்று எம்பெருமானைப் புகழ்ந்தார். துதியைக் கேட்டு மகிழ்ந்து ஹரியும் அவர்கள்முன் தோன்றினார். ஆயிரம் கதிரவன் ஒருங்கே திரண்டாற்போல் கண்ணைப் பறிக்கும் ஜோதியுடன் தோன்றிய விஷ்ணுவைப் பிரமன் மறுபடியும் துதி செய்தார்.

''கட்டையிலே தீயும், பசு மடியில் பாலும், பூமியில் பயிரும், உழைப்பில் நல்வாழ்க்கையும் மாந்தருக்கு முயற்சியினால் கிடைப்பதுபோல், மாசற்ற மனத்திலே இடைவிடாது சிந்தித்துக் கடவுளைக் கவிவாணர் கண்டுகொண்டு தாம் கண்ட தோற்றத்தை மற்றவருக்கு எடுத்துரைப்பார். நாங்களோ, நேராகவே இன்று தேவரீரைத் தரிசனம் செய்து விட்டோம். கானகத் தீயிலே வருந்தித் தவிக்கும் யானைக்குக் கங்கையின் நீர் கிடைத்தாற்போல் தவித்து நிற்கும் எங்களுக்கு உங்கள் தரிசனம் அமைந்துள்ளது. நாங்கள் வந்த காரியத்தைக் கைகூடும்படி செய்ய வேண்டும். அது என்னவென்று உங்களுக்கு உரைக்கவும் வேண்டுமோ ?''

பிரமன் சொல் கேட்ட நாராயணன் இடிமுழக்கம் போன்ற குரலில் பதில் அளித்தார். ''உங்களுடைய நன்மைக்காகக் கூறுகிறேன், கேளுங்கள். நற்காலம் வரும் வரை காத்திருப்பீர் ; இப்பொழுது அரக்கருடன் சமாதானம் செய்துகொள்வீர். நாடியதை அடைய வேண்டி எதிரியுடனும் நெருங்க வேண்டும்; நாடியது கைகூடில் பாம்பினிடம் அகப்பட்ட எலியென எதிரியைப் பந்தாடலாம். இப்பொழுது சாவை அகற்றும் அமுதத்தைத் தேட வேண்டும். பாற்கடலில் பற்பல பச்சிலைகளையும் மூலிகைகளையும் போடுங்கள். மந்தர மலையை மத்தாகவும் வாசுகியைக் கயிறாகவும் வைத்துப் பாற்கடலைக் கடையுங்கள். நானும் உதவுகிறேன். அரக்கரும் கூடவே கடையட்டும். அவர்களுக்கு உழைப்புத்தான் மிஞ்சும். பலன் உங்களுக்கே. அவர்களுடன் இப்பொழுது இணைந்து போக வேண்டும்'' என்றார்.

இந்திரனும் மற்ற தேவர்களும் அசுரராஜனை பலியை அணுகி அவருடன் சமாதானம் செய்து கொண்டனர். விஷ்ணு தங்களுக்கு இட்ட கட்டளையைத் தெரிவித்தனர். பலியும் அதற்கு இசைந்தான். பிறகு இரு சார்பாரும் ஒன்றுகூடி மந்தர மலையை அடியோடு தூக்கிக் கடற்கரைக்கு எடுத்துச் சென்றனர். ஆனால் போகும் வழியில் மலையின்

பாரத்தைத் தாங்க முடியாமல் களைப் புற்ற இந்திரன், பலி முதலியோர் மலையைப் பூமியில் வைத்து விட்டார்கள். கீழே விழுந்த மலை பலரை நசுக்கிக் கொன்று விட்டது. இதை அறிந்த ஹரி கருடன்மீதேறி அங்கு வந்து, தம் பார்வையினாலேயே காயமுண்டவரைக் குணப்படுத்திவிட்டு, மலையைக் கருடன் மீது ஒரு கையால் விளையாட்டாகத் தூக்கி வைத்துக்கொண்டு கடலோரம் பறந்து சென்றார்.

வாசுகி என்ற பாம்புத் தலைவனை மந்தர மலையைச் சுற்றிக் கயிறாகக் கட்டி, தேவரும் அசுரரும் அமுதம் கிடைப்பதற்குப் பாற்கடலைக் கடைந்தனர். வாசுகிக்கும் அமுதத்தில் பங்கு தருவதாக ஆசை காட்டி அவனை இணங்கச் செய்தார்கள்.

கடல் கடையத் தொடங்கும்போது ஹரி தாமாகப் பாம்பின் தலைப் பக்கத்தைப் பிடித்துக் கொண்டார். தேவர்களும் அவருடன் சேர்ந்து அந்தப் பக்கமே நின்றார்கள். ஹரியின் செயல் அசுரத் தலைவர்களுக்குப் பிடிக்கவில்லை. ''மறை பயின்று, பிறப்பாலும் வீரத்தாலும் புகழ்வாய்ந்த நாம் கேவலமான வாலைப் பிடிப்பதா?'' என்று எண்ணி ஒதுங்கி நின்றார்கள். இதைப் பார்த்த ஹரி புன்முறுவலுடன் வாலைப் பிடித்துக் கொண்டார். தேவர்களும் அவர் பக்கம் சென்றனர். அசுரர்கள் தலைப் பாகத்தைப் பிடித்துக் கொண்டனர். இரு சார்பாரும் கடலைக் கடைய ஆரம்பித்தனர். ஆனால் மலை அதனுடைய பெரும் பாரத்தால் கடலுக்குள் ஆழ்ந்து விட்டது. தங்கள் முயற்சி வீணானதென்று இரு சாராரும் மனத் தளர்ச்சி அடைந்தார்கள். அச்சமயம் அனந்தன் ஆமை வேடம் பூண்டு, கடலுக்குள் புகுந்து மந்தரமலையைத் தாங்கி நின்றார். கடலினின்று மேற்கிளம்பும் மலையைக் கண்டு களித்துத் தேவரும் அசுரரும் திரும்பவும் கடையத் தொடங்கினார்கள். தம்முடைய ராஜஸ சக்தியால் அசுரருக்குள் புகுந்த விஷ்ணு, அவர்களுக்கு ஊக்கம் அளித்தார். சாத்விக சக்தியால் தேவருள் புகுந்தார். உணர்ச்சியை இழந்து மலையில் உராய்ந்தும் வலி வராதிருக்க வாசுகியினுள் புகுந்தார். மலையின்மீது ஏறி மற்றொரு மலையெனத் திகழ்ந்தார். இவ்வாறு ஒரே தருணத்தில் மலையை மேலும் கீழுமாய் நிலையில் நிறுத்தும் ஹரியின் பலத்தால் இரு கட்சியினரும் வேகமாகக் கடலைக் கடைந்தனர். வாசுகியின் வாயினின்று வெளிவந்த தீயெனச் சுடும் மூச்சினால் மூடுண்டு அரக்கர் சோர்ந்தனர். நெருப்பினால் வாடும் மரங்களைப் போல் தோன்றினர். ஆனால் தேவர்மீது அனந்தனுடைய ஆணையினால் மழை பெய்தது; கடற் காற்றும் வீசியது. பெருமுயற்சி எடுத்தும் அமுதம் வராததைக் கண்டு மகாவிஷ்ணுவே வாசுகியைப் பிடித்துக் கொண்டு கடைந்தார்.

அப்பொழுது கடலினின்று ''ஹாலாஹலம்'' என்ற கொடிய நஞ்சு வெளி வந்தது. நாலா பக்கத்திலும் பரவும் அவ்விஷத்தின் வேகத்தை ஒருவராலும் சகிக்க முடியவில்லை. எல்லோரும் ஒன்று கூடிச் சதாசிவனிடம் சென்றார்கள். சிவனைப் பலவாறு துதித்தனர். ''தேவ தேவனே! மகாதேவனே! மூவுலகையும் எரிக்கும் இக் கொடிய விஷத்திலிருந்து எங்களைக் காப்பாற்ற வேண்டும். மாந்தரைத் துன்புறுத்தும் கொடியவரை மாய்ப்பது உனக்குப் புதிதன்று. மன்மதனைச் சாம்பலாக்கினாய்; தக்ஷனுடைய வேள்வியைத் தூளாக்கினாய்; முப்புரத்தை எரித்தனை; யமனை அடக்கினாய்; ஆகவே எங்களைக் காத்தருள்வாய்'' என்றனர்.

தேவர் படும் துயரை அறிந்த சிவபெருமான் உமையிடம் பின்வருமாறு மொழிந்தார்: ''பவானி! கடலிலிருந்து கிளம்பிய காலகூட விஷத்தினால் இவர்களுக்கு ஆபத்து நேரிட்டிருக்கிறது. வருந்துவோரைக் காப்பதுவே, பெரியோர்க்கு அழகு. நற்குணம் வாய்ந்தவன் தன்னுயிரைக் கொடுத்து மன்னுயிரைக் காப்பான். இதுவே ஹரிக்குப் பிரியமானது. ஆகையால் இப்பொழுதே இந்தக் கொடும் விஷத்தை நான் உட்கொள்வேன். என் செயலால் அனைவரும் நன்மையை அடையட்டும்!'' சதியும் இச்செயலுக்குச் சம்மதித்தனள். பரவியிருந்த நஞ்சைத் தம் இரு கைகளிலும் ஒடுக்கிச் சிவன் அதை விழுங்கினார். கடல் நீரின் தீமையெலாம் விஷமாய்த் திரண்டு அந் நஞ்சு அவர் கழுத்துக்கு நீலமேனியை நல்கியது. அதுவும் அவர் உருவுக்கோர் அழகைத் தந்தது.

விடைபாகன் விஷத்தை விழுங்கிய பின் தேவரும் அசுரரும் திரும்பவும் பாற்கடலைக் கடைந்தனர். அதனின்று வேள்விக்கு வேண்டிய பொருள்களை



(பால், நெய், தயிர்) தரும் பசு வெளி வந்தது. அப்பசுவை ரிஷிகள் ஏற்றுக் கொண்டனர். பிறகு மதியென வெண்ணிறம் வாய்ந்த உச்சைச்ரவஸ் என்ற குதிரை கிடைத்தது. அதை பலி தனக்கென்று எடுத்துக் கொண்டான். அதன் பின் ஐராவதம் என்ற யானை வெளிவந்தது. அதை இந்திரன் தனதாக்கினான். கௌஸ்துபம் என்ற சிவப்பு மணி தோன்றியது. அதை விஷ்ணு தம் மார்பில் அணிந்து கொண்டார். விரும்பியதை வழங்கும் வல்லமை வாய்ந்த பாரிஜாதம் என்ற மரமும், கண்டவர் கண்ணைக் கவரும் அப்ஸரசுகளும் ஒருங்கே வெளி வந்த பிறகு, மின்னலை மிஞ்சிய அழகுடன் லக்ஷ்மி தேவி தோன்றினாள். இருந்தவர் அனைவரும் அம்மையின் அழகைக் கண்டு வியந்தனர். இந்திரன் அவளுக்குச் சிங்காதனம் தந்தனன்: நீராட ஆறுகள் பொற் குடத்தில் நீர் நல்கின. பூமி மூலிகைகளையும், பசுக்கள் பஞ்சகவ்யத்தையும், வசந்தகாலம் தனக்குரிய பூவையும் கனியையும் கொடுத்தன. முனிவர் அவளுடைய அலங்காரத்துக்கு விதிவகுத்தனர். கந்தர்வர் பாட, அவர் மனைவியர் ஆடினர். வானத்தில் பேரிகையும் துந்துபியும் முழங்கின. அந்தணர் மறை ஓத, திசையைக் காக்கும் யானைகள் அம்மைக்கு அபிஷேகம் செய்தன. கடலரசன் மஞ்சள் பட்டாடையை அளித்தான். வருணன் வைஜயந்தி மாலையைத் தந்தான். விச்வகர்மா நகைகள் கொடுத்தான். சரஸ்வதி முத்து மாலையை வழங்கினாள். பிரமன் தாமரையைச் சமர்ப்பித்தான். நாகர் குண்டலத்தைக் கொடுத்தனர்.

அவர் ஏந்திய கரம் திகழ, கன்னத்தையொட்டிக் குண்டலமிரண்டாட, தனக்கு இசைந்த மணாளனைத் தேடிப் புன்னகை வதனமொடு ஸ்ரீதேவி திரிந்தனள். சந்தனம் சிந்தும் மார்பும், மெல்லிடையும், சலசலக்கும் காற்சலங்கையும் கலந்து கண்டவருக்குப் பொற்கொடியெனத் தோற்றம் தரும் தேவிக்குத் தகுந்த மணாளன் எங்குமே இசையவில்லை. ஸ்ரீதேவி சிந்தித்தனள். “தவமிருப்போருக்குச் சினம் சிதையவில்லை; அறிவிருப்போர்க்கு ஆசை அகலவில்லை; சிறப்பிருந்தும் சிற்றின்பத்தில் இச்சை போகவில்லை; மற்றவரை அண்டினவன் கொற்றவன் ஆவனோ? தர்மம் இருந்தும் தயை இல்லையே! கொடை இருந்தால் கூடவே பலத்தில் ஆசையும் அண்டி நிற்கிறது; பெருமை பொருந்தியவர்



முதுமை அடைகிறார்; அடியோடு ஆசை அற்றவன் மணாளனாக மாட்டான்; ஆயுள் இருந்தால் அன்பு இல்லை; அன்பிருப்பவர் அற்பாயுளில் அசந்து விடுகிறார்; இரண்டும் இருந்தும் அமங்களம் குடிகொண்டிருக்கிறது. அனைத்தும் பொருந்தியவன் ஆண்டவன் ஒருவனே, அவன் தானாக என்னை நாடவில்லை!''

இவ்வாறு எண்ணி எண்ணித் தனக்குத் தகுந்தவன் ஹரி ஒருவனே என்று தீர்மானம் செய்துகொண்டு நன்மைகள் நாடும் நாராயணனைக் கணவனாய் வரித்தான். சுரும்புகள் சூழ்ந்திருக்கும் தாமரை மாலையை மாதவன் கழுத்திலிட்டு, அவன் மார்பில் அழியாத இடம் பெற்று, அவன் அருகில் வெட்கிநின்றாள்.

மூவுலகுக்கு அன்னையான அனந்தனும் செல்வத்துக்குச் செல்வியான ஸ்ரீதேவியைத் தன் மார்பில் என்றும் இருக்கச் செய்தான். அங்கிருந்து அன்னையும் அன்பான பார்வையால் அனைவருக்கும் நன்மையை நல்கினான். தேவர்கள் களித்தனர். மங்கள வாத்தியங்கள் கோஷித்தன. சிவனும் பிரமனும் ஏனைய லோக பாலகரும் மலர்மாரி பொழிந்தனர். தேவியின் பார்வையின் பெருமையால் தேவர்கள் நல்லொழுக்கத்தையும் நற்குணத்தையும் அடைந்தார்கள். தேவியின் அருட் பார்வையைப் புறக்கணித்த அசுரருக்குத் தளர்ச்சியும், வெட்கமின்மையும், ஆசை மிகுதியும் சோம்பலும் மேலிட்டன.

## டாடா — பைஸன்

அயல் நாட்டினர் பணம் கடனாக அளித்து உதவுவதைக் காட்டிலும் தொழில் அபிவிருத்தியில் கூட்டாளிகளாகச் செயல் புரிவதில் பல அநுகூலங்கள் உள்ளன. தொழில் நுணுக்க சம்பந்தமான அறிவும் செய்முறைகளும் நமக்கு இலவசமாகக் கிடைப்பதுடன் யந்திரச் சாமான்களும் கிடைத்து விடுகின்றன. இந்த முறையைத்தான் பாரதம் பொதுவாக விரும்புகிறது. இதை அயல் நாட்டவரும் தொழிலில் கிடைக்கும் லாபத்தை உத்தேசித்து விரும்புகின்றனர். செயல் முறையிலும் காட்டுகின்றனர். இவ்விதக் கூட்டு-முறை தொழில் வளர்ச்சிக்கு ஒரு உதாரணம் பைஸன்ஸ் லிமிடெட் என்ற பிரும்மாண்டமான ஆங்கிலேயக் கம்பெனியின் ஒரு பாகமாகிய பைஸன்ஸ் பெஸ்ட் கண்ட்ரோல் கம்பெனியும், பாரதத்தில் பிரபலமாக இருக்கும் டாடா கெமிகல் கம்பெனியும் இணைந்து செயல்படும் கூட்டுறவு. இந்தப் பைஸன் கம்பெனி முக்கியமாகக் கிருமிநாசினிகள், பிரத்தியேகமான பேடன்ட் மருந்துகள், தொழிற்சாலைக்கு வேண்டிய ரஸாயனச் சாமான்கள் தோட்டங்களுக்குத் தெளிக்கும் பூச்சி மருந்துகள், உரங்கள் முதலிய பொருள்களை உற்பத்தி செய்வதில் தலைமை ஸ்தானம் வகிக்கிறது. இதனுடைய தொழிற்சாலைகள் உலகில் எல்லாப் பாகங்களிலும் பரவிக் கிடக்கின்றன. இந்த ஸ்தாபனத்தின் தலைவர் ஸர் பிராங்க் கை க்ளாவரிங் பைஸன்; இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து விவசாயத் துறையில் நாம் அடைந்துள்ள முன்னேற்றத்தையும், உணவு உற்பத்தித் துறையில் தன்னிறைவு எய்த நாம் எடுத்துக் கொள்ளும் முயற்சியையும் உற்பத்தியைப் பெருக்க என்ன செய்யப்படுகிறதென்பதையும் சமீபத்தில் நேரில் கண்டறிந்து சென்றார். விஞ்ஞான முறையில் நமது விவசாயம் பெருக வேண்டுமென்று எழுப்பும் நம் கோஷங்கள் செயலில் பலிக்க வேண்டுமானால் இத்தகைய கம்பெனிகள் உற்பத்தி செய்து விநியோகிக்கும் ரஸாயன உரங்கள் மூலம்தான் முடியும். பெங்களூரிலும் இக்கம்பெனியின் கூட்டுறவினால் ஒரு தொழிற்சாலை சீக்கிரமே நிறுவ உத்தேசித்திருக்கிறது என்பதையும் ஸர் பிராங்க் பைசன் தெரிவித்தார். இந்த ஸ்தாபனத்தின் கூட்டுறவினால் உருவாகும் தொழிற்சாலைகள் விரைவில் உற்பத்தி செய்யும் நிலைமையை அடைந்து நமது தேவைகளைப் பூர்த்தி செய்ய உதவும் என்று எதிர்பார்க்கலாம்.



எல்லா விசேஷ தினங்களுக்கும்
ஏற்றதொரு புடவை



நைலான்ஸ் . ஜார்ஜெட் . க்ரேப்ஸ் . ஸாட்டின் . ப்ரின்ட்ஸ்

# சக்தி சில்குகள்

ஓர் போதார் தயாரிப்பு

சக்தி மில்ஸ்களில் தயாரிக்கப்பட்ட ஸில்குகளைவிட விதவிதமான ஸில்குகள், பல்வேறு வர்ணங்களிலும், அநேக ரகங்களிலும் வேறு எங்கும் கிடைக்காது. ஞாபகமிருக்கட்டும்—சக்தி ஸில்குகள் உயர்தரமானவை, எளிதில் சலவை செய்யக்கூடியது. சாயம் போகாதது. மேலும் சலவையில் சுருங்கிப்போகாதென்பதற்கு உத்திரவாதமுள்ளது. சக்தி ஸில்குகளை அணிந்து மோகனமாகத் தோன்றுங்கள்.

ஸ்ரீ சக்தி மில்ஸ் லிமிடெட், பம்பாய்

SSM-4

# பாண்டிமாதேவி

அத்தியாயம் 28

## கூடல் இழைத்த குதூகலம்

அன்றைக்கொரு நாள் செம்பவழத் தீவின் கடை வீதியில் அந்த மூன்று முரட்டு மனிதர்கள் பேசிக் கொண்டு போன பேச்சைக் கேட்டதிலிருந்து மதிவதனிக்குக் கவலையும், பயமும் அதிகமாயிருந்தன. அந்தப் பேச்சை ஒட்டுக் கேட்பதனால் இப்படிப் புதுக் கவலைகளும், பயமும் ஏற்படும் என்று தெரிந்திருந்தால் முதலிலேயே ஒட்டுக் கேட்காமல் இருந்திருப்பாள்.

கொம்பு முளைக்காத குட்டிப் பருவத்துப் புள்ளிமான் போல் அவலமற்றுக் கவலையற்று அந்தத் தீவின் எழிலரசியாய்த் துள்ளித் திரிய வேண்டிய அவளுக்குக் கவலை ஏன்? பயம் ஏன்? கலக்கம் ஏன்? எவனைப் பற்றிய நினைவுகள் அவள் நெஞ்சில் நிரந்தரமாக ஓடிக் கொண்டிருக்கின்றனவோ, அவனையே கொலை செய்வதற்கு முயல்கிறவர்களைப் போல் அவர்கள் பேசிக் கொண்டு சென்றதனால் தான் அவள் கவலைப்பட்டாள், பயந்தாள், கலங்கினாள். அந்த முரடர்களுடைய பேச்சை ஒட்டுக் கேட்ட நாளிலிருந்து அவளுக்கு ஒரு காரியமும் ஓடவில்லை.

“ஐயோ! அந்த முரடர்களால் நடுக்கடலில் அவருடைய கப்பலுக்கு ஒரு துன்பமும் நேராமலிருக்க வேண்டுமே. அவர்கள் கையில் அகப்பட்டுக் கொண்டால் அவரைக் கொல்லாமல் விட மாட்டார்களே? அவருடைய விரோதிகள் எவரோ அவரைக் கொன்று விடுவதற்கென்றே அந்த முரட்டு ஆட்களைத் தூண்டி விட்டு அனுப்பியிருக்கிறார்கள் போலிருக்கிறது. எல்லா நன்மையும் கொடுக்கும் அந்த வலம்புரிச் சங்கு அவர் கையிலிருக்கிற வரை அவரை எந்தப் பகை என்ன செய்துவிட முடியும்? கடவுளின் கருணையும், அவரையே நினைத்துக் கொண்டிருக்கும் எனது





"நல்ல காலமும் தான் அவரைக் காப்பாற்ற வேண்டும்" என்று தானே தனக்குள் சிந்தித்துச் சிந்தித்துச் சிந்தனைச் சூட்டில் வெந்து கொண்டிருந்தாள் மதிவதனி. அதன் காரணமாக எந்தக் காரியத்தைச் செய்தாலும் சுயநினைவு இன்றிச் செய்து கொண்டிருந்தாள் அவள். சிந்தனை ஓரிடத்திலும், செயல் ஓரிடத்திலுமாகப் பைத்தியக்காரி போல் கடையிலும், வீட்டிலும், கடற்கரை மணற்குன்றுகளிலும், திரிந்து கொண்டிருந்தாள் அவள். அந்தத் தீவின் கரையோரத்துத் தென்னை மரங்களிலிருந்து பறந்து செல்லும் கிளிகளின் கூட்டங்களைப் பார்க்கும்போதெல்லாம், "என் மனத்துக்கும் இப்படி வான வெளியில் நீந்திக் கீழேயுள்ள கடலைக் கடந்து பறந்து செல்லும் ஆற்றல் இருந்தால் வேகமாகப் பறந்து போய் அவருடைய தோளின் மீது உரிமையோடு உட்கார்ந்துகொண்டு அந்த முரடர்கள் அவரைத் தேடிக் கொண்டிருக்கும் இரகசியத்தைக் காதோடு சொல்லி எச்சரித்து விடுவேன்'',' என்று எண்ணி ஏங்குவாள். அவளும் ஒரு கிளிதான். ஆனால் பறக்கும் கிளி இல்லையே. பேசிச் சிரித்து உணர்ந்து நடக்கும் பெண் கிளியாயிற்றே அவள்!

"தலையை அழுத்தும் பாரமான சுமைகளைத் தாங்கிக் கொண்டுகூடப் பொறுமையாக நீண்ட தூரம் நடந்து விட முடிகிறது. ஆனால் கனமோ, பாரமோ, உறைக்காத எண்ணங்களையும், ஆசைகளையும், ஏக்கங்களையும் சுமந்து கொண்டு மட்டும் பொறுமையாக வாழ முடிவதில்லையே? நினைவின் சுமைகளுக்கு அவ்வளவு கனமா? அவ்வளவு பாரமா?" மதிவதனியால் தாங்க முடியவில்லை.

சில நாட்களாகவே அவள் ஒரு மாதிரி ஏக்கம் பிடித்துப் போய்க் கிடப்பதை அவளுடைய தந்தையும், அத்தையும் உணர்ந்து கொண்டனர். அந்தப் பெண்ணின் முரண்டுக்கும், பிடிவாதத்துக்கும் பயந்து அவளிடம் ஒன்றும் கேட்கவில்லை அவர்கள். எதையாவது வற்புறுத்திக் கேட்டால் அழுது விடுவாளோ என்று பயம் அவர்களுக்கு.

அன்று நண்பகலில் மதிவதனியின் அத்தை ஒரு குடலை நிறைய அடுக்குமல்லிகைப் பூக்களைக் கொண்டு வந்து

கொடுத்து, "மதிவதனி! இவற்றை உன் கையால் அழகாகத் தொடுத்துக் கொடு, பார்க்கலாம். இன்று மாலை நான் கடற்கரையிலுள்ள ஏழு கன்னிமார் கோவிலுக்குப் போய் நேர்த்திக் கடன் செலுத்தி வழிபட்டு விட்டு வர வேண்டும். எல்லாம் உனக்கு நல்ல இடத்தில் நல்ல கொழுநன் வாய்த்துப் பெருவாழ்வு வாழ வேண்டுமே என்பதற்காகத்தான்" என்று கூறி வேண்டிக் கொண்டாள்.

அத்தையின் வேண்டுகோளை மறுக்க முடியாமல் மதிவதனி உட்கார்ந்து கொண்டு நாரை எடுத்து மலரைத் தொடுக்க ஆரம்பித்தாள். கை மலர்களைத் தொடுத்துக் கொண்டிருக்கும் போதே மனம் நினைவுகளைத் தொடுக்க ஆரம்பித்தது. மனம் ஏதாவதொன்றில் ஒருமையாகக் குவியும்போது, அந்த ஒன்றைத் தவிர இரண்டாவதாகச் செய்யப்படும் காரியம் சரியாக நடைபெறாது. பராக்குப் பார்த்துக் கொண்டே சிந்தனையில் மூழ்கியிருந்த மதிவதனி பூக்களை எடுத்து முடிவதை மறந்து வெறும் நாரையே மாற்றி மாற்றிச் சுருக்கிட்டு முடிந்து கொண்டிருந்தாள். தற்செயலாக அந்தப் பக்கமாக வந்த அவளுடைய அத்தை, அவள் பூத்தொடுத்துக் கொண்டிருந்த அழகைப் பார்த்ததும், பொறுக்க முடியாமல் சிரித்து விட்டாள்.

"நீ பூத்தொடுக்கிற சீரைப் பார்த்தால் சிரிப்புத்தான் வருகிறது. ஏதோ நினைவில் எங்கேயோ கவனத்தை வைத்துக் கொண்டு வெறும் நாரை வளைத்து வளைத்து முடிந்து கொண்டிருக்கிறாயே, அம்மா! நீ காரியம் செய்கிற அழகு மிகவும் நன்றாக இருக்கிறது. நானும் பார்த்துக் கொண்டே தான் இருக்கிறேன். நாலைந்து நாட்களாக நீ பித்துப் பிடித்தவளைப்போல் இருக்கிறாய். வேளா வேளைக்கு உண்ண வருவதில்லை. இந்த வயதான காலத்தில் அண்ணனுக்கு உதவியாகக் கடைக்குப் போக மாட்டேனென்கிறாய். வேலையற்றுப் போய்க் கடற்கரை மணல் மேடுகளிலெல்லாம் கால் கடுக்கச் சுற்றிக் கொண்டிருக்கிறாய். நீ எப்போது வீட்டுக்குத் திரும்பி வருவாய்? எப்போது வெளியே போவாய்? என்பதே எனக்கும் அண்ணனுக்கும் தெரியாமற் போய் விட்டது. உன்னைப் போல் பருவம் வந்த பெண்ணுக்கு இந்தப் போக்கு நல்லதில்லை."

அவளைப் பற்றித் தன் மனத்திலிருந்த குறைகளை அவள் முன்பே சொல்லித் தீர்த்து விட்டாள் அத்தை.

பூக்களையே தொடாமல் தான் வெறும் நாரை முடிந்து கொண்டிருந்ததை உணர்ந்தபோது, மதிவதனிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. முதலில் ஐந்தாறு கண்ணிகள் பூ வைத்துத் தொடுத்திருந்தாள். அதன் பின்பு வெறும் நாரில்தான் வரிசையாக முடிச்சுக்கள் விழுந்திருந்தன. தப்பித் தவறி இதுமாதிரி அத்தையின் வாயில் விழுந்து விட்டால் நிறையப் பேச்சு வாங்கிக் கட்டிக் கொள்ளாமல் மீள முடியாதென்று அவளுக்குத் தெரியும்.

"ஏதோ தெரியாமல் செய்து விட்டேன், அத்தை! கொஞ்சம் நினைவு தடுமாறி விட்டது. இன்னும் சிறிது நேரத்தில் எல்லாப் பூக்களையும் விரைவாகத் தொடுத்துக் கொடுத்து விடுகிறேன்" என்று முகத்தில் மலர்ச்சியை வரவழைத்துக் கொண்டு கூறினாள் மதிவதனி.

"கொஞ்சம் என்ன? சில நாட்களாகவே நீ முழுக்க, முழுக்க, நினைவு தடுமாறிப் போய்த்தானே திரிகிறாய்? அந்த வலம்புரிச் சங்கை விலைக்கு வாங்கிக் கொண்டுபோன இளைஞனை நீ இன்னும் மறக்கவில்லை போலிருக்கிறது. அவனை நினைத்துக் கொண்டு தான் நீ இவ்வளவு ஆட்டமும் போடுகிறாய். நானும், அண்ணனும், உன்னை எவ்வளவோ கண்டித்துப் பார்த்து விட்டோம். நீ எங்கள் கண்டிப்பைக் கேட்டுத் திருந்துகிற பெண்ணாகத் தெரியவில்லை. நடக்கக் கூடிய காரியத்தையா நீ நினைக்கிறாய்? நீயும் உன் தந்தையும் சொல்வதிலிருந்து அந்த இளைஞன் பெரிய செல்வக் குடும்பத்துப் பிள்ளையாயிருக்க வேண்டுமென்று தெரிகிறது. தென் திசைக் கடலில் எங்கோ ஒரு மூலையில் இருக்கும் இந்தச் சிறு தீவில் உன்னைப்போல் ஒரு பெண்ணைச் சந்தித்ததை எப்போதோ மறந்து போயிருப்பான் அவன். அவனையே நினைத்துக் கொண்டு ஏங்கும் அசட்டு எண்ணங்களை இந்த விநாடியிலேயே விட்டு விடு. நமக்கு எட்டாத பொருளை, நம்மால் எட்டி எடுக்க முடியாத உயரத்தில் இருக்கும் அழகை, நாம் நினைத்து உருகிப் பயனென்ன? இரண்டு கைகளும் முடமாகிக் கால் நொண்டியான ஊமை ஒருவன் தனக்கு எதிரே உள்ள பாறையில் சுவையான 'பசுவெண்ணெய்' உருட்டி வைத்திருப்பதைப் பார்க்கிறான். வெய்யிலில் வெண்ணெய் உருகிப் பாறையில் வீணாகி வழிகிறது. அவனால் என்ன செய்ய முடியும்? தான் உண்ணக் கைகள் இல்லை. நடந்து செல்லக் கால்கள் இல்லை. பிற

## டூமெக்ஸ் பேபி சோப் அற்புதமானதென்றே நான் நினைக்கிறேன்!

விவேகமுள்ள இந்தியத் தாய்மார்கள் டூமெக்ஸ் பேபி சோப்பை உபயோகிக்கத் தொடங்கிவிட்டார்கள்— இது அழகான இளஞ் சிவப்பு நிறமுள்ள சோப். டூமெக்ஸ் பேபி சோப் மிருதுவாக சுத்திகரிக்கும் தன்மைவாய்ந்தது என்பதில் ஆச்சர்யமொன்றுமில்லை. இது குழந்தைகளின் கண்களுக்கோ, சருமத்திற்கோ எரிச்சலையுண்டாக்குவதில்லை. டூமெக்ஸ் பேபி சோப் போலித்திலின் காகிதத்தில் பொதியப் பட்டு, நன்கு காட்சியளிக்கும் இளஞ்சிவப்பும், நீலநிறமும் கலந்த அட்டைப் பெட்டியில் வைக்கப்பட்டு உங்களுக்குக் கிடைக்கிறது.




**டூமெக்ஸ்**

# பேபி சோப்

குழந்தைகளின் சருமத்திற்குச் சாலச்சிறந்தது.

டூமெக்ස் ப்ரைவேட் லிட்.,
லேவல் ஹவுஸ், பல்லார்ட் எஸ்டேட் பம்பாய் 1.


நோயால் வருந்தும் பொழுதும், நோயிலிருந்து குணம் பெறும் பொழுதும் யாவருக்கு ஒரு சிறந்த டானிக்
நல்ல தேகவளர்ச்சியையும், திரும்ப வாலிபத்தையும் கொடுக்கக் கூடிய ஆயுர்வேதிக் டானிக்
ZANDU
ச்யவன்பிராஷ்
லேஹியம்


ஜண்டு பார்மஸ்யூடிகல்
வொர்க்ஸ் லிட்.,
கோகலே ரோடு சௌத், பம்பாய்-28.

அழகிய பளபளப்பான
கூந்தலின் ரகசியம் . . .



அழகுமிக்க பளபளப்பான கூந்தலைப் பெற்றிருப்பதன் ரகசியம் ஒழுங்கான பாதுகாப்பு மட்டுமல்ல, சரியான தலைமயிர்த் தைலம் தேர்ந்தெடுப்பதும் கூட.
கால்கெமிகோவின் காஸ்டரால் உபயோகிப்பதால் கூந்தல் நன்கு வளருகிறது. நரை தடுக்கப்படுகிறது. மயிர் உதிர்வது நிற்கிறது என்றுணர்ந்தவர்கள் அதை தேர்ந்தெடுக்கிறார்கள்.
சுத்தப்படுத்தப்பட்ட விளக்கெண்ணெயினால் தயாரிக்கப்பட்ட இந்த ரம்மிய வாசனை கொண்ட கூந்தல் தைலம் தலைமயிருக்குப் புது பளபளப்பு தருகிறது.
5, 10 அவுன்ஸ் வசீகர புட்டிகளில் கிடைக்கும்
காஸ்டரால்
தனிப்பட்ட குணம் பெற்ற
கூந்தல் தைலம்




CASTOROL

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி, லிட்.,
கல்கத்தா - 29.
தென் இந்தியக் கிளை : 5/149, பிராட்வே, மதராஸ்-1

ரைக் கூப்பிடலா மென்றாலோ வாய் வலைமை. சாத்தியமில்லாத ஆசைக ளோடு போராடி என்ன நன்மை விளையப் போகிறது, பெண்ணே! அந்த இளைஞனைப் பற்றிய ஆசை யைத் தொலைத்துத் தலை முழுகிவிட்டு எப்போதும் போல் நீ பழைய மதிவதனியாக மாறி விடு. நான் உன் முகத்தில் மலர்ச்சியைக் காணவேண் டும். உன் உதட்டில் சிரிப்பைக் காண வேண்டும். உன் வாயில் கலகலப்பு நிறைந்த பழைய குறும்புப் பேச்சைக் கேட்க வேண்டும். உன் நடையில் பழைய துள்ளலைக் காண வேண்டும். இன்றே, இந்தக் கணமே, நீ பழைய மதிவதனியாக மாறிவிடு. கடைக் குப் போ. பழைய சுறுசுறுப்போடு விற்பனையைக் கவனி. அண்ணனுக்கு மகள், மகன், இரண்டாகவும் இருப் பவள் நீ ஒருத்திதான். இப்படிச் சோக நாடகம் நடித்து அண்ணனை யும் என்னையும் வேதனைப் படுத் தாதே.'' — அத்தை தன் உள்ளத் தின் உணர்ச்சிகளாயிருந்த ஆத்திரம், வேதனை, ஆவல் எல்லாவற்றையும் அடக்க முடியாமல் அந்தப் பெண் ணின் முன்பு கொட்டித் தீர்த்து விட் டாள். அத்தையின் பேச்சுக்கு மதிவதனியிடமிருந்து பதில் வர வில்லை. முழங்காலைக் குத்த வைத்து அதன்மேல் முகத்தைப் புதைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் அவள். மெல்லிய விசும்பல் ஒலி அத்தையின் செவிகளில் விழுந்தது.

"என்னடி, பெண்ணே? இதற் காகவா அழுகிறாய்? அழுகை வரும் படி நான் என்ன சொல்லி விட்டேன் இப்போது?'' — என்று கேட்டுக் கொண்டே கீழே குனிந்து அவள் முகத்தை நிமிர்த்தினாள் அத்தை. அவளுடைய விழிகள் கண்ணீர்க் குளங்களாக மாறி யிருந்தன. கண் களில் அரும்பிய கண்ணீர் அரும்புகள் செடிகளில் அரும்பி மலர்ந்த மலர் களில் உதிர்ந்தன.

"யாராவது இதற்காக அழுவார் களா? கோவிலுக்குக் கொண்டுபோக வேண்டிய மலர்களின் தூய்மை கெடும்படியாக இப்படி இவற்றின் மேல் கண்ணீரைச் சிந்துகிறாயே? நீ செய்கிற காரியம் உனக்கே நன்றா யிருந்தால் சரிதான்'' என்று கடிந்து கொண்டே அவள் கூந்தலைக் கோதி விட்டுச் சரி செய்தாள் அத்தை.

அந்தச் சமயத்தில் வெளியே சென் றிருந்த மதிவதனியின் தந்தை வீட்டுக் குள் நுழைந்தார்.

"மதிவதனி! எதற்காக அம்மா இப்படி உன் அத்தையிடம் அழுது முரண்டு பிடித்துக் கொண்டிருக் கிறாய்?'' என்று அவர் கேட்டார்.

"அண்ணா! உங்கள் பெண்ணுக்கு நீங்கள்தான் சொல்ல வேண்டும். அவளுடைய நினைவுகளும், கனவு களும் இப்போது இந்தத் தீவிலேயே இல்லை. முன்னைப் போல் சிரிக்காமல், பேசாமல் கலகலப்பாக இராமல் எப் போதும் 'அவனையே' நினைத்துப் புழுங்கிக் கொண்டிருக்கிறாள். கடற் கரைக் கன்னிமார் கோயிலுக்குப் போவதற்காகப் பூத்தொடுக்கச் சொன்னேன். தொடுப்பதற்காக உட் கார்ந்தவள் சுய நினைவே இல்லாமல், பூவை மறந்து வெறும் நாரை முடிந்து



கொண் டிருக்கிறாள். 'இப்படியெல் லாம் இருக்காதே, அவனை மறந்து விட்டு முன்போல் இரு!' என்று கண் டித்தேன். அதற்குத்தான் இந்தப் பலமான அழுகை.''

தம் தங்கை கூறியதைக் கேட்டு மதிவதனியின் தந்தை சிரித்தார். "இந்தமாதிரி வயதுப் பெண்களை இத் தகைய அனுபவங்களிலிருந்து கண் டித்து மட்டும் திருத்திவிட முடியாது. தன்னை நினைக்காதவனைத் தான் நினைந்து ஏமாந்த பெண்களின் கதைகள் உலகத்தில் அதிகமாக இருக் கின்றன. அந்தக் கதைகளில் ஒன்றாக என் அருமைப் பெண்ணின் நினைவு களும் ஆகிவிடக் கூடாதே என்பது தான் என்னுடைய கவலை. நினைப் பதை அடைவது ஒரு தவம்; ஒரு புனிதமான வேள்வி அது. நினைத்து

நினைத்து அந்த நினைவுகளை உறுவேற்றி வலுவேற்றி எண்ணியதை அடைந்தே தீரும் ஆசைத் தவத்துக்குப் பிடிவாதம் நிறைய வேண்டும். அந்த அன்புமயமான தவத்தை விடாப் பிடியாகப் பிடித்துக்கொண்டு செய்து வெல்லும் தெம்பு இதிகாச காலத்துப் பெண்களுக்கு இருந்தது. சீதைக்கும், பாஞ்சாலிக்கும், ஓரளவு சகுந்தலைக்கும் இருந்த அந்தத் தெம்பு செம்பவழத் தீவின் ஏழைப் பரதவனை என்னுடைய மகளுக்கு இருந்தால் அவளுடைய கல்வினைதான் அது. சீதையும், பாஞ்சாலியும், சகுந்தலையும் நினைத்தவர்களை அடைய மட்டும்தான் முடிந்தது. சாவித்திரியோ அவர்களினும் ஒருபடி மேலே போய் விட்டாள். தான் அடைந்த ஆடவனைத் தன் நினைவுத் தவத்தால் கூற்றுவனிடமிருந்தே மீட்க முடிந்தது அவளால். தெய்விகக் காதலின் வெற்றிக்கு இத்தகைய நினைவுவன்மை பெண்களுக்கு வேண்டும். சிறிய ஆசைகளில் மனம் வைத்துவிட்டால் நினைவுகளுக்கு ஆற்றலே உண்டாவதில்லை. நீயும் நானும் இவளைக் கண்டிப்பதை இன்றோடு விட்டு விட வேண்டும். இவ்வளவு வயது வந்த பெண்ணைக் கண்டிப்பதும் அநாகரிகமானது. இவளுடைய நினைவுகளே இவளுக்கு வினைவு கற்பிக்கட்டுமென்று விட்டு விடுவதுதான் நல்லது" என்று ஒன்றிலும் பட்டுக் கொள்ளாதவர் போல், தம் தங்கையிடம் கூறிய அவர் மதிவதனியின் பக்கமாகத் திரும்பி, "மதிவதனி! நீ ஏன் அழுகிறாய்? நீ இன்னும் குழந்தையில்லையே? தாயைத் தவிர வேறு நினைவில்லாத வரை பெண் பேதையாயிருக்கிறாள். தந்தை, உடன்பிறந்தோர், விளையாட்டுப் பொருள் — எல்லாவற்றையும் கடந்து தன்னைத் தவிர இன்னொரு ஆண் மகனை நினைக்கத் தொடங்கும் போது பேதை முழுமை பெற்ற பெண்ணாகி விடுகிறாள். இப்போது நீ ஒரு பெண். உன் நினைவுக்கு நீ ஒரு ஆண்மகனைத் தேடிக் கொண்டு விட்டாய். அந்த நினைவுக்கு ஆற்றலைத் தேடி உறுதியாக்கு. அதுதான் நான் உனக்குக் கூறும் அறிவுரை. இனிமேல் உன்னை நான் கண்டிக்கப் போவதில்லை; பயமுறுத்தப் போவதில்லை. 'அந்த இளைஞன் உன்னை மறந்து விடுவானென்று'—சொல்லிக் கலக்க மடையச் செய்யும் வழக்கத்தையும் இந்த விநாடியிலிருந்து நான் விட்டுவிடுகிறேன்" என்றார்.

தந்தையின் அந்தப் பேச்சைக் கேட்டவுடன், மதிவதனிக்கு உடல் சிலிர்த்தது. தை மாதத்து வைகறையில் கடல் நீராடினது போல் இருந்தது.

"அப்பா!..." என்று உணர்ச்சி மேலிட்டுக் கூவிக்கொண்டே எழுந்து ஓடிவந்து அவர் காலடியில் சுருண்டு விழுந்தாள் அவள். "நினைவை உறுதியாக்கு. நினைப்பதை அடைவது ஒரு தவம்" என்ற சொற்கள் அவள் செவிகளை விட்டு நீங்காமல் நித்திய ஒலியாகச் சுழன்று கொண்டிருந்தன. தன் எண்ணத்தின் இலட்சியமான காதலில் வெற்றி பெற ஒரு புதிய கருவி அவளுக்குக் கிடைத்துவிட்டது. அவனை அடைவதற்கு அவளுக்கு ஒரு புதிய உண்மையை அவள் தந்தை கூறி விட்டார்.

"அப்பா! 'இதிகாச காலத்துக்குப் பின்பும் நினைவைத் தவமாக்கி நினைத்தவனை அடையும் இலட்சியக் காதலுக்கு உதாரணமாகச் செம்பவழத் தீவில் ஒரு பெண் பிறந்திருந்தாள்' என்று என்னையும் எடுத்துக் காட்டாகக் கூறுவதற்குத் தகுந்தபடி நான் வாழ்ந்து காட்டிவிடப் போகிறேன், அப்பா! அப்படி ஒரு வாழ்க்கை வாழ்ந்துவிட வேண்டுமென்ற பிடிவாதம் இப்போதே எனக்கு உண்டாகி விட்டது."—அவருடைய பாதங்களில் தன் கண்ணீர் ஒழுக ஆவேசத்தோடு உறுதியான குரலில் கதறினாள் மதிவதனி.

"எழுந்திரு, அம்மா! காலம் உன் நினைவுக்கு வெற்றியைக் கொடுக்கட்டும்!" என்று அமைதியாகக் கூறி, அவள் பிடியிலிருந்து தம் பாதங்களை விடுவித்துக் கொண்டு வீட்டின் உட்பக்கமாக நடந்தார் அவர். மதிவதனியின் அத்தை ஒன்றும் சொல்லத் தோன்றாமல் சூனியத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

அன்றைக்கு மாலையில் தன் அத்தையோடு கடற்கரையிலுள்ள ஏழு கன்னிகைகளின் கோவிலுக்குப்போயிருந்தாள் மதிவதனி. ஏழு கன்னியர் கோவிலின் வாசலில் ஒரு பழைய புன்னை மரம் இருந்தது. மிகவும் வயதான மரம் அது. அதனடியில் மணற் பரப்பில் திருமணமாகாத கன்னிப் பெண்கள் தங்கள் மனத்திலுள்ள எண்ணம் நிறைவேறுமா என்றும், நினைவுக்கு இசைந்த கணவன் கிடைப்பானா என்றும், 'கூடல் இழைத்துப் பார்ப்பது வழக்கம். கூடல் இழைத்துப் பார்த்தலாவது, மணற்பரப்

பில் கிழக்குத் திசை நோக்கி அமர்ந்து கொண்டு, இரண்டு கண்களையும் மூடி வழிபடும் தெய்வத்தை மனத்தில் தியானித்து, வலது கை ஆள் காட்டி விரலால் மணற்பரப்பில் குருட்டாம் போக்கில் ஒரு வட்டம் போடுவது. கோட்டைத் தொடங்கிய நுனியில் விலகாமல் ஒழுங்காக வந்து பொருந்தி வட்டம் முழுமையாக முடிவுபெற்றால், எண்ணிய காரியம் வெற்றி பெறும் என்று தீர்மானித்துக் கொள்ளலாம்.

அத்தைக்குத் தெரியாமல் புன்னை மரத்தடியில் கூடல் இழைத்துப் பார்த்து விடவேண்டும் போல் ஆவல் குறுகுறுத்தது. மதிவதனிக்கு. வரிசையாக இருந்த ஏழு கன்னியரின் சிலைகளுக்கும் பூவணிந்து விட்டு அத்தை கண்களை மூடித் தியானித்துக் கொண்டு நின்றபோது, மெல்ல வெளிப் பக்கமாக நழுவிப் புன்னை மரத்தடி மணற்பரப்புக்கு வந்தாள் அவள். அத்தை திரும்பி வந்து பார்த்து விடப் போகிறாளே என்ற பயமும், வெட்கமும் பதற்றத்தை உண்டாக்கின. அவசரம் அவசரமாக அத்தை வரும் வழியை மிரண்டு திரும்பிப் பார்த்துக் கொண்டே மணற்பரப்பில் கிழக்கு நோக்கி உட்கார்ந்தாள். கண்களை மூடினாள். பளபளப்பான இமைத் தோல்களின் கரும் பசுமைச் சிறு நரம்புகள் மூடிய கண்களின் அழகைக் காட்டின. வலது கை விரல்கள் பயத்தால் நடுங்கின. உடல் வியர்த்தது. நெஞ்சு ஆவலால் வேகமாக அடித்துக் கொண்டது. வலது கை ஆள் காட்டி விரலால் வட்டத்தை மணலில் கீறி விட்டுக் கண்களை ஆசையோடு திறந்து பார்த்தாள். என்ன ஆச்சரியம்! ஆரம்பித்த நுனியோடு கோடு சரியாகப் போய்ப் பொருந்தி வட்டம் ஒழுங்காக முடிந்திருந்தது. அந்த வட்டத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கும்போதே தன் அன்புக்குரியவன் அன்று கப்பல் மேல்தளத்திலிருந்து ஊதிய சங்கின் ஒலி மறுபடியும் கேட்பது போல் ஒரு பிரமை ஏற்பட்டது அவளுக்கு. கூடல் கூடியதால் உண்டான குதூகலத்தால் மதிவதனி அதையே பார்த்துப் பூரித்துக் கொண்டிருந்த போது, பின்னால் யாரோ சிரிக்கும் ஒலி கேட்டது. திரும்பிப் பார்த்தாள். அவளுடைய அத்தை நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு வெட்கம் தாங்க முடியவில்லை.

## அத்தியாயம் 29
## கடற் காய்ச்சல்

சக்கசேனாபதி பதறிப் போனார். நடுக்கடலில் குமார பாண்டியனுக்கு அப்படி ஒரு நிலை ஏற்படுமென்று அவர் எதிர்பார்க்கவில்லை. சிலருடைய உடல் இயல்புக்குத் தொடர்ந்தாற் போல் கடலில் பயணம் செய்வது ஒத்துக் கொள்ளாது. இராசசிம்மனுக்குக் கடற்காய்ச்சல் வருவதற்கான அறிகுறிகள் இருந்ததை முன் கூட்டியே அவர் உணர்ந்து கொண்டார். சுருண்டு, சுருண்டு படுத்துக் கொள்வதையும், சோர்வடைந்து தென்படுவதையும் கொண்டே கடற் காய்ச்சல் வரலாமென்று அனுமானித்திருந்தார். ஆனால் அது இவ்வளவு கடுமையான நிலைக்கு வந்துவிடுமென்று அவர் நினைக்கவில்லை.

அன்று மாலை நேரத்துக்குள் காய்ச்சல் மிகுதியாகி விட்டது. குமார பாண்டியன் தன் நினைவின்றிக் கிடந்தான். ஏற்கெனவே அவனுக்கு ஒற்றை நாடியான உடல். காய்ச்சலின் கொடுமையால் அந்த உடல் அல்லித் தண்டாகத் துவண்டு போய் விட்டது. வெறும் காய்ச்சலோடு மட்டும் இருந்தால் பரவாயில்லை. மன உளைச்சலும் சேர்ந்து கொண்டது. 'தன் செயலைப் பற்றித் தாய் என்ன நினைப்பாள்? மகா மண்டலேசுவரர் என்ன நினைப்பார்? அன்பையெல்லாம் அள்ளிச் சொரிந்து ஒட்டிக் கொண்டு பழகிய மகாமண்டலேசுவரரின் அருமைப் பெண் குழல்மொழி என்ன எண்ணுவாள்?' என்று இத்தகைய கவலைகள் வேறு குமாரபாண்டியன் மனத்தைக் கலக்கியிருந்தன. அவன் கப்பல் தளத்தில் படுத்துக் கொண்டு தன்னை மறந்து உறங்கியபோது ஒரு கனவு கண்டிருந்தானே; அந்தக் கனவும் அவன் உள்ளத்தைக் குழப்பிக் கொண்டிருந்தது.

காய்ச்சல், சோர்வு, கலக்கம், குழப்பம், எல்லாவற்றுக்கும் நடுவில் அவன் நெஞ்சுக்கு ஆறுதலான நினைவு ஒன்றும் கோடையின் வெப்பத்தினிடையே சிலுசிலுக்கும் தென்றலைப் போல் ஊடுருவிக் கொண்டிருந்தது. அந்த நினைவு...? அதுதான் மதிவதனி

என்ற இனிய கனவு! பழுத்த மாங்காயில் காம்போரத்துச் செங்கனியின் செழுமை போல் கன்னங் குழியச் சிரிக்கும் மதிவதனியின் கன்னிச் சிரிப்பு, மூடினாலும், திறந்தாலும் அவன் இமைகளுக்குள்ளேயே நிறைந்து நின்றது. பூவுக்குள் மர்மமாக மறைந்து நிற்கும் நறுமணம் போல அந்தப் பெண்ணின் சிரிப்புக்குள் 'ஏதோ ஒன்று' மறைந்திருந்து தன்னைக் கவர்வதை அவன் உணர்ந்தான். காய்ச்சலின் வெப்பம் அவன் உடலெங்கும் கனன்றது. மதிவதனியைப் பற்றிய நினைவோ அவன் உள்ளமெங்கும் குளிர்வித்தது. சக்க சேனாபதி அவன் தலைப்பக்கத்தில் கன்னத்தில் ஊன்றிய கையுடன் அமர்ந்திருந்தார்.

குமாரபாண்டியனையும் அவன் கொண்டு வரும் பாண்டிய மரபின் அரசுரிமைச் சின்னங்களையும் பத்திரமாக ஒரு குறைவுமின்றி ஈழ நாட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும் பொறுப்பு அவருடையதுதானே? அவர் கவலைப்படாமல் வேறு யார் கவலைப்பட முடியும்? இலங்கைப் பேரரசன் காசிபனின் உயிர் நண்பனை இராசசிம்மனைக் கடற் காய்ச்சலோடு அழைத்துக் கொண்டு போய் அவன் முன் நிறுத்தினால் அவனுடைய கோபம் முழுவதும் சக்க சேனபதியின் மேல்தான் திரும்பும்.

காசிபனுடைய கோபத்துக்கு ஆளாக நேரிடாமல், கப்பல் ஈழ மண்டலக் கரையை அடையுமுன்பே குமாரபாண்டியனுக்குச் சுகம் ஏற்பட்டு அவன் பழைய உற்சாகத்தைப் பெற வேண்டுமே யென்று எல்லாத் தெய்வங்களையும் மனத்துக்குள் வேண்டிக் கொண்டிருந்தார் சக்க சேனபதி. இளவரசன் இராசசிம்மனின் உடலுக்கு அதிர்ச்சி ஏற்படாமல் இருக்க வேண்டுமென்பதற்காகக் கப்பலைக் கூட வேகத்தைக் குறைத்து மெதுவாகச் செலுத்த வேண்டுமென்று மாலுமியைக் கூப்பிட்டு எச்சரிக்கை செய்திருந்தார்.

நீண்ட பகல் நேரம் முழுதும் இராசசிம்மன் அன்றைக்குக் கண் விழிக்கவேயில்லை. உணவும் உட்கொள்ளவில்லை. தூக்கத்தில் அவன் என்னென்னவோ பிதற்றினான். மாலையில் பொழுது மங்கும் நேரத்திற்கு அவன் கண் விழித்தான். தாமரையின் சிவப்பான உட்புறத்து அகவிதழைப் போல் அவனுடைய கண்கள் சிவந்திருந்தன.

"இளவரசே! காய்ச்சல் உடம்போடு நீங்கள் இப்படிப் பசியையும் சேர்த்துத் தாங்கிக் கொண்டிருப்பது நல்லதில்லை. ஏதாவது கொஞ்சம் உணவு உட்கொள்ளுங்கள்" என்று சக்கசேனாபதி கெஞ்சினார்.

"நான் என்ன செய்யட்டும்? எனக்கு உணவு வேண்டியிருக்கவில்லை. வாயெல்லாம் சுவைப் புலன் மரத்துப் போய்க் கசந்து வழிகிறது. என்னை வற்புறுத்தாதீர்கள்" என்று குமாரபாண்டியனிடமிருந்து பதில் வந்தது. தட்டுத் தடுமாறிக் கொண்டே தனத்தில் விரித்திருந்த விரிப்பில் தள்ளாடி எழுந்து உட்கார்ந்தான். அவனுக்கு இருந்த தளர்ச்சியைக் கண்டு பதறிக் கீழே சாய்ந்துவிடாமல் சக்க சேனாபதி முதுகுப் பக்கமாகத் தாங்கிக் கொண்டார். நோயுற்றுத் தளர்ந்திருக்கும் அந்த நிலையிலும் இராசசிம்மனின் முக மண்டலத்தில் யாரையும் ஒரு நொடியில் கவர்ந்து தன்வடமாக்கிக் கொள்ளும் அந்த அழகுக் குறுகுறுப்பு மட்டும் குன்றவேயில்லை. சக்கசேனாபதியின் பருத்த தோளில் சாய்ந்து கொண்டுபெருமூச்சுவிட்டான் அவன்.

"ஈழ நாட்டுக் கரையை அணுகுவதற்கு முன் உங்களுக்கு உடல் தேறவில்லையானால் காசிப மன்னருக்கு நான் காரணம் சொல்லி மீள முடியாது. நான் சரியாகக் கவனித்து அழைத்துக் கொண்டு வராததனால் தான் உங்களுக்குக் காய்ச்சல் வந்திருக்க வேண்டுமென்று என்னைக் கோபித்துக் கொள்ளத் தொடங்கி விடுவார்" என்று சக்கசேனாபதி கூறியதற்கு இராசசிம்மன் உடனே மறுமொழி கூறவில்லை. சிறிதுநேரம் நிதானமாக எதையோ சிந்தித்துவிட்டுப் பதில் சொல்லுகிறவனைப் போல், "சக்க சேனாபதி! உடற் காய்ச்சலை விட இப்போது மனக் காய்ச்சல்தான் அதிகமாகிவிட்டது" என்று தழுதழுக்கும் குரலில் சொன்னான். அந்தச் சொற்களைச் சொல்லும்போது உணர்ச்சிக் குமுறலின் வேதனையால் வார்த்தைகள் தடைப்பட்டு வந்தன. சக்க சேனாபதி அதைக் கண்டு பயந்தார். "இளவரசே! காய்ச்சல் உள்ள போது இப்படி உணர்ச்சி வசப்பட்டுப் பேசவோ, நினைக்கவோ கூடாது. எதைப் பற்றியும் மனத்தைக் கவலைப்பட விடாமல் நிம்மதியாக வைத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறினார்.

"என்னால் அப்படி நிம்மதியாக இருக்க முடியவில்லையே, சக்க சேனாபதி! முள்ளில் புரண்டு கொண்டு பஞ்சணையாக நினைத்துக் கொள்வதற்கு நான் யோகியாக இருந்தால் அல்லவா முடியும்? ஆசையும், பாச



சிம்ஸன் குழுக் கம்பெனிகளின் மானேஜிங் டைரக்டரான ஸ்ரீ எஸ். அனந்தராம கிருஷ்ணன் அவர்கள் புதல்வன் சிரஞ்சீவி **சிவசைலம்** அவர்களுக்கும் சௌபாக்கியவதி **இந்திரா**வுக்கும் இம்மாதம் 2ம் தேதி சென்னை மயிலாப்பூர் ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணன் அவர்கள் இல்லமாகிய சுதர்மாவில் விவாகம் சிறப்பாக நடைபெற்றது. உறவினர்களும் நண்பர்களும் திருமணத்துக்குத் திரளாக வந்திருந்தனர். மணமக்களுக்கு ஏராளமான பரிசுகளும் வாழ்த்துரைகளும் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருந்தன.

ழும், ஆட்டி வைக்க ஆடும் சாதாரண மனிதன்தானே நானும்? நான் செய்து விட்டனவாக என்னாலேயே உணரப் படும் என் தவறுகள் நிழல்போல் என்னைச் சாடுகின்றனவே?" இராச சிம்மன் மனவேதனையோடு இப்படிச் சொன்னான்.

அவர்கள் இருவருக்கும் இடையே சில விநாடிகள் மௌனம் நிலவியது. இருந்தாற்போலிருந்து இராசசிம்மன் திடீரென்று குமுறி அழ ஆரம்பித்து விட்டான். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தார் அவர். அவனை வேதனைக் குள்ளாக்கியிருக்கும் எண்ணம் என்னவென்று சக்க சேனாபதியினால் விளங்கிக் கொள்ள முடிய வில்லை. உடலில் நோய் வேதனை அதிக மாகும்போது சில மனிதர்கள் தங்களுக்குத் தாங்களே அசட்டுத்தனமாக வாய்விட்டு அழுது கொள்வதுண்டு. 'குமாரபாண்டியனுடைய அழுகையும் அந்த வகையைச் சேர்ந்ததுதானோ?' என்று எண்ணி வருந்தினார்.

"இளவரசர் இப்படி வரவரச் சிறு குழந்தையாக மாறிக்கொண்டு வந்தால் நான் எப்படி ஆறுதல் சொல்ல முடியும்? எதற்காக, எதை நினைத்துக் கொண்டு இப்போது நீங்கள் அழுகிறீர்கள்?" அவன் முகத்தருகே நெருங்கிக் குனிந்து விசாரித்தார் அவர்.

"இத்தனை நாட்களாக இடையாற்றுமங்கலம் மாளிகையில் போய் யாருக்கும் தெரியாமல் திருடனைப் போல ஒளிந்திருந்தேனே! என் அன்னையைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று என் பாழாய்ப்போன மனத்துக்குத் தோன்றவே இல்லையே? சக்க சேனாபதி! 'பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என்று என் தாய் அடிக்கடி ஒரு பழமொழியைச்

சொல்லுவாள். அதற்கேற்றாற் போலவே, நானும் நடந்து கொண்டிருக்கிறேன். என் செயல்களையெல்லாம் தெரிந்து கொண்டால் என் தாயின் மனம் என்ன பாடு படும்? என்னால் யாருக்கு என்ன பயன்? எல்லோருக்குமே கெட்ட பிள்ளையாக நடந்து கொண்டு விட்டேன். இதையெல்லாம் நினைத்தால் எனக்கே அழுகை அழுகையாக வருகிறது. மகா மண்டலேசுவரர் என்னைப்பற்றி எவ்வளவோ நம்பிக்கையும், நல்ல எண்ணமும் வைத்துக் கொண்டு இடையாற்றுமங்கலத்தில் கொண்டு போய்த் தங்கச் செய்திருந்தார். நான் அவருக்கே நம்பிக்கைத் துரோகம் செய்து ஏமாற்றி அரசுரிமைப் பொருள்களைக் கவர்ந்து கொண்டு வந்து விட்டேனே! என்னைப் போல் பாவி இருக்க முடியுமா? நான் எவ்வளவு ஆரம் பண்பில்லாதவனாக நடந்து கொண்டு விட்டேன்?" என்று சக்கசேனாபதியிடம் அழுது கொண்டே சொல்லிப் புலம்பினான் அவன். என்ன கூறி எந்த விதத்தில் அவனைச் சமாதானப் படுத்துவதென்றே அவருக்குத் தெரியவில்லை.

"இல்லாததையெல்லாம் நீங்களாகக் கற்பனை செய்துகொண்டு அழாதீர்கள். சந்தர்ப்பங்கள் நம்மை எப்படி நடத்திக் கொண்டு போகின்றனவோ, அப்படித்தானே நாம் நடக்க முடியும்? உங்கள்மேல் என்ன தவறு இருக்கிறது? போரும், பகைவர் பயமும் உள்ள இந்தச் சூழலில் அரசுரிமைச் சின்னங்கள் இடையாற்று மங்கலத்தில் இருப்பதை விட இலங்கையில் இருப்பதே நல்லது" என்று ஒரு விதமாக ஆறுதல் சொன்னார்.

"என்னை அங்கே கூட்டிக் கொண்டு போய் அவற்றைக் காண்பியுங்கள்" என்று பிடிவாதம் பிடித்தான் அவன்.

மெல்ல எழுந்திருக்கச் செய்து நடத்திக் கூட்டிக் கொண்டு போய்க் காண்பித்தார். குழந்தை ஆச்சரியத்தோடு பார்ப்பதுபோல் முடியையும், வாளையும், சிம்மாசனத்தையும் திரும்பத் திரும்பத் தொட்டுப் பார்த்தான் இராசசிம்மன். அந்த அறையிலிருந்து வெளிவந்ததும், "என்னை உடனே மேல்தளத்துக்குக் கூட்டிக்கொண்டு போனால்தான் ஆயிற்று!" என்று முரண்டுபிடித்தான். அந்தத் திறந்த வெளிக் காற்று, காய்ச்சல் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது என்று அவர் எவ்வளவோ சொல்லித் தடுத்துப் பார்த்தார். அவன் கேட்கவில்லை. மேல் தளத்தில் கூட்டிக் கொண்டு போய் நிறுத்தினார்.

மேலை மாலை நேரத்து வானின் செம்பொன்னிறச் செழுமுகில்கள் ஆகாய வெளியைத் தகத்தகாயம் செய்து கோலமிட்டிருந்தன. வானின் பிறைச்சந்திரனை எட்டிப் பிடித்து விடுவது போல் அலைக் கைகளை மேல் எழுப்பியது நீலக்கடல். இராசசிம்மன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு விழிகளை இமைக்காமல், கடலையும், வான வெளியையும், நாற்புறத்திலும் திரும்பித் திரும்பிப் பார்த்தான். அந்த வானில், கடலில், அலைகளில், மேகங்களில், பிறைச் சந்திரனில், அவன் எதைக் கண்டானோ?

"சக்கசேனாபதி! கீழே போய் அந்த வலம்புரிச் சங்கை எடுத்துவாருங்கள்" என்றான். அவர் கீழே சென்றார். திரும்பிய பக்கமெல்லாம் செம்பவழத் தீவில் சந்தித்த அந்த அழகியின் முகமே தெரிவது போலிருந்தது இராசசிம்மனுக்கு. அந்த அற்புதமான இயற்கையின் சூழல் அவனை என்னவோ செய்தது. அவனுடைய நாவின் நுனியில் சில சொற்கள் துடித்தன. அவன் உள்ளம் ஏதோ ஒன்றை உணர்ந்து எதையோ அழகாக வெளியிடக் கிளர்ந்தது. அடுத்த விநாடி அவன் பாடத் தொடங்கினான். அலை ஓசையை இடையிட்டு அவன் இனிய குரல் ஒலித்தது. அந்த இனிமையில் 'மதிவதனி'யின் நினைவு அவனுள் சுழன்றது.

"மின்னலின் ஒளியெடுத்து முகில்தனில்
சூழல் தொடுத்துப்
பொன்னினில் நிறம்படைத்துப்
பிறையினில் நுதல் மடுத்துப்
புன்னகை முல்லையாகப்
புருவங்கள் விற்களாகக்
கன்னலின் சுவை குயிற்றிக்
கருவிளை கண்களாக்
மென்நடை பரதமாகி
மேல்இதழ் பவழமாகிப்
பன்னெடுங் காலமென்னும்
படைப்பினுக் கழகுகாட்டிக்
கன்னிமை யென்னுமோர்
கற்பகம் பழுத்ததம்மா."

சங்கோடு வந்து நின்ற சக்கசேனாபதி அந்த இன்னிசை வெள்ளத்தில் சொக்கி நின்றார். "உங்களுக்கு இவ்வளவு நன்றாகப் பாடவருமா?" என்ற அவர் கேள்விக்குப் பதில் கூறாமலே அவரிடமிருந்து சங்கை வாங்கிக் கொண்டான் அவன். (தொடரும்)

Lakmé



டால்கம் பௌடர்



யு டி கோலான்



லிப்ஸ்டிக்

பேஸ் பௌடர்





டஸ்டிங் பௌடர்

# Lakmé

லக்மே

அழகின் அலங்காரத்திற்கென
ப்ரஞ்சு முறையிலிருந்து
தயாரிக்கப்பட்ட சாதனங்கள்

Lakmé லக்மே ஒரு டாடா தயாரிப்பு

நரை மயிரே
தோன்ருமல்
முதுமைப் பருவம்
எய்தும் அழகு






லோமா

அகில உலகும் விய
ந்து போற்றிட கேசத்
திற்கு இயற்கைக் கரு
மையூட்டும் தைலம்,

நிச்சயமாகக் கருமையூட்டும் லோமாவின் சக்திக்கும் மீறி நரை மயிர் எய்தியவர் எவருமே கிடையாது! லோமா என்பது ஒரு சாயச் சரக்கல்ல, கேசத்திற்கு இயற்கை கருமையூட்டும் தைலமாகும்; அதே சமயம், இயற்கையான மூலப் பொருள்கள் கலந்துள்ள அது கேசத்திற்கு போஷாக்களிக்கும். தைலமுமாகும் . . . அதோடு மனோகர நறுமணமுள்ளது.

ஏகபோக ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா அஹமதாபாத்-1.
ஏஜெண்டுகள் :
ஸி. நரோத்தம் & கம்பெனி, மங்கள்தாஸ் ரோடு, பம்பாய்-2.

MPS-TAM

சென்னை ஏஜண்டுகள்: ஜே பாலையா & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்.
இலங்கை ஏஜண்டுகள்: சிக்குல் கதிர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-1.

# சோக்ரதர் சம்வாதங்கள்

க. சந்தானம்

## 6. காவலர் கடமை

(பங்கெடுத்துக் கொள்பவர்கள் : சோக்ரதர், களக்கோன், ஆடிமந்தோஸ் முதலானோர்)

சோக் : நமது காவலர் அறிவாளிகளாகவும், திறமையுள்ளவர்களாகவும் ராஜ்யத்தின்மீது பற்றுடையவர்களாகவும் இருக்க வேண்டுமல்லவா?

கள : உண்மை.

சோக் : எவனும் தனது நன்மையோடு பிணைக்கப்பட்டிருப்பதையே நேசிப்பானன்றோ?

கள : முற்றிலும் சரி!

சோக் : ஆதலால் நாம் கவனத்துடன் பொறுக்க வேண்டும். நமது காவலருக்குள் எவர் நாட்டின் நலத்தில் மிகுந்த ஆவலுள்ளவர்களென்றும் அதற்கு எதிராக எதனையும் செய்ய விரும்பாதவர்களென்றும் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

கள: அவர்களே தகுந்தவர்கள்.

சோக்: வளரும்பொழுது எல்லாப் பிராயங்களிலும் அவர்களுடைய குணங்களை ஆராய வேண்டும். தங்கள் நன்மையைப் பலாத்காரத்தாலோ, மயக்கத்தாலோ இழந்து விடாதிருப்பார்களாவென்றும் அறிதல் அவசியம்.

கள : அது எப்படி நேரிடும்?

சோக்: ஒரு மனிதன் தனது கொள்கைகளில் இரு காரணங்களால் தளர்ச்சியடையலாம். தனது மனப்பூர்வமாக, உண்மையைக் கடைப்பிடிக்கும்பொழுது மனப் பூர்வமாகச் செய்கிறான். அதற்கு மாறாக ஓர் உண்மையை இழந்து பொய் வழி நாடும் பொழுது தனது மனச்சாட்சிக்கு எதிராகச் செல்லுகிறான்.

கள: ஒருவன் மனப்பூர்வமாகத் தன் நிர்மானத்தை மாற்றிக் கொள்ளலாம். அப்படியின்றி எப்படி அது மாறிவிடும்?

சோக் : பலாத்காரத்தால் ஏற்பட்ட துன்பத்தாலும், வருத்தத்தாலும் சிலர் தம் கொள்கைகளைக் கைவிடுவதில்லையா?

கள : ஆமாம்.

சோக் : அப்படியே இன்பத்தின் மயக்கத்தாலும் தளர்ச்சி அதிகரித்து விடலாம்.

கள : அதுவும் உண்மையே.

சோக் : ஆதலால், ராஜ்யத்தை ரட்சிப்பதே தமது தனிக் கடமை என்று அசையாத மனப்பான்மையுடையோரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். யௌவனத்திலிருந்து அவர்களை நன்கு கவனித்து, மறதியாலோ, ஏமாற்றத்தாலோ தமது கடமையைத் தவறக்கூடாத விதங்களில் அவர்களைப் பரீட்சை செய்ய வேண்டும். அந்தச் சோதனைகளில் தேறியவர்களையே தலைமைக் காவலர்களாக்க வேண்டும்.

கள : அதுவே சரி.

சோக் : உண்மையில் 'காவலர்' என்ற பெயரை இவர்களுக்கே கொடுக்க வேண்டும். வெளி நாட்டு எதிரிகளை முறியடித்து உள் நாட்டுச் சமாதானத்தைக் காக்கும் பொறுப்பு அவர்களிடமே ஒப்புவிக்கப்பட வேண்டும். இதற்கு முன் நாம் 'காவலர்' என்று கூறிய மற்றவர்களை 'உதவிக் காவலர்' என்று அழைக்கலாம்.

கள : நீங்கள் கூறுவதை நானும் ஒப்புக்கொள்ளுகிறேன்.

சோக்: இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு புராணக் கதை சிருஷ்டித்து, அதைக் காவலர்களும் பிரஜைகளும் நம்பும்படி செய்வது நலம் என்று தோன்றுகிறது.

கள: எம்மாதிரிக் கதை?

சோக் : இந்தக் கட்டுக் கதைகளை உன்னிடம் சொல்ல எனக்குக் கூச்சமாக இருக்கிறது. அதை முதலில் காவலர்களுக்கும், பிறகு உதவிக் காவலர்களுக்கும் கடைசியாகப் பிரஜைகளுக்கும் உபதேசிக்க வேண்டும். அவர்களுடைய யௌவனமெல்லாம் ஒரு கனவு. வெளிப்படையாக அவர்கள் கற்ற கல்வியும் ஒரு மாயத் தோற்றம். உண்மையில் பூமாதேவியின் கர்ப்பத்தில் அவர்கள் வளர்ந்து, தேர்ச்சியடைந்து வந்தனர் என்று போதிக்கப்பட வேண்டும். அவர்களுடைய வித்தியாப்பியாசம் முடிந்ததும் பூமாதேவி அவர்களை வெளியில் அனுப்பி வைத்தாளென்றும், தங்கள் தேசமே அந்த அன்னையாதலால், அவளே அவர்களைப் போஷித்து வந்ததால் அவளுக்கு உண்மையான தொண்டுபுரிந்து எல்லா மக்களிடமும் அவளுடைய குழந்தைகளாகவும், தங்கள் சகோதர சகோதரிகளாகவும் பழக வேண்டுமென்றும் உபதேசிப்பதே இந்தக் கதை.

கள : இந்தக் கட்டுக்கதையைப் பற்றி நீங்கள் தயங்கியது நியாயமே.

சோக் : சற்றுப் பொறுத்திரு. பாதிதான் சொல்லியிருக்கிறேன். நமது கட்டுக் கதைகள் பின்வருமாறு உபதேசிக்கும்: 'பிரஜைகளே! நீங்கள் அனைவரும் சகோதரர்கள். ஆனால் ஈசன் உங்களைப் பலவித



தியாகராயநகர் ஆர்ட்ஸ் அகாடமியின் ஆதரவில், மித்திரா நாடக சபாவின் "சங்கோஜி" என்ற ஹாஸ்ய நாடகம் டாக்டர் ராமராவ் கலா மண்டபத்தின் திறந்தவெளி அரங்கில் மிகவும் சிறப்பாக நடந்தது. மேற்படி நாடகத்தில் பெண் பார்க்கும் படலம் மிகவும் வேடிக்கையாயிருந்தது. அந்தக் காட்சியை இந்தப் படத்தில் காணலாம்.

மாகச் சிருஷ்டித்திருக்கிறான். காவலர் அமைப்பில் அதிகத் தங்கம் கலந்திருக்கிறார். உதவிக் காவலரை ஆக்கும்பொழுது வெள்ளி சேர்த்திருக்கிறார். குடியானவர்களுக்குச் செம்பும், கைத்தொழிலாளிகளுக்கு இரும்பும் கலந்திருக்கிறார். சாதாரணமாக இக்கலப்புக்கள் குழந்தைகளிடமும் காணப்படும். ஆனால் அனைவரும் ஒரு தாயின் வயிற்றில் உதிப்பதால் தங்கப் பெற்றோருக்கு வெள்ளிக் குழந்தையும், வெள்ளிப் பிதாவுக்குத் தங்க மகனும் பிறக்கலாம். கடவுள் காவலர்களுக்கிட்ட முதல் விதி, தங்கள் ஜாதியின் பரிசுத்த பரம்பரையைப் பாதுகாப்பதே. குழந்தைகளில் தோன்றும் குணங்களைக் கவனத்துடன் ஆராய்ந்து, வெள்ளிப்பெற்றோருக்குப் பிறந்தாலும் தங்கக் குழந்தையை உயர்த்தியும், தங்கத் தாய் தந்தையருடையதாயினும் பித்தளை, இரும்புக் குழந்தைகளைக் குடியானவர்கள் குடிசைத் தொழில் வகுப்பார்களுக்குத் தாழ்த்தியும் சமூகத்தைச் சீர்திருத்துவதற்குத் தயங்கலாகாது. ஏனென்றால் பித்தளை, இரும்பு மனிதர் காவலரானால் ராஜ்யம் அழிந்து விடும் என்று அசரீரி கூறியிருக்கிறது. இந்தக் கதையை நமது பிரஜைகள் ஏற்பார்களா?

கள: இந்தத் தலைமுறையில் நம்பமாட்டார்கள். அப்படி நம்பச் செய்வது சாத்தியமில்லை. ஒருவேளை இரண்டாம் மூன்றாம் தலைமுறைகளிலும், பின்னரும் அது சம்பிரதாயமாகக் கூடும்.

சோக்: அந்தக் கஷ்டத்தை நான் அறிவேன். ஆனால் அவ்வித நம்பிக்கையே ராஜ்யத்தின் மீது பக்தியையும், பரஸ்பர சகோதர வாஞ்சையையும் நிலைநிறுத்தும். நமதுகட்டுக் கதை இனி ஊர் வதந்தி என்ற சிறப்பு பெற்று எங்கும் பரக்கட்டும். அதற்குள் வீரர்களைத் தயார் செய்து ஆயுதபாணிகளாக்கித் தகுந்த தலைவர்களுக்குக் கீழ் அணிவகுத்து நிற்கச் செய்வோம். அவர்கள் இப்பொழுது ஊர் முழுதும் சுற்றிப் பார்த்து உள்நாட்டுக் கலகத்தை அடக்கவும், வெளி நாட்டுப் படையெடுப்பை எதிர்க்கவும் வசதியுள்ள ஓர் இருப்பிடத்தை நிர்ணயித்து, தெய்வங்களுக்குப் பலி கொடுத்துத் தங்கள் விடுதிகளை அமைத்துக் கொள்ளட்டும்.

கள: அப்படித்தான் செய்ய வேண்டும்.

சோக்: குளிர் காலத்து வாடையிலிருந்தும் கோடையின் வெப்பத்திலிருந்தும் பாதுகாக்கக் கூடிய வீடுகள் தேவையன்றோ? ஆனால் அவை வியாபாரிகளின் வீடுகள் போலில்லாமல், போர்வீரர் விடுதிகளாக இருக்க வேண்டும்.

கள: அவற்றின் வித்தியாசங்களென்ன?

சோக்: அதை விளக்க முயல்வேன். தான் வைத்திருக்கும் காவல் நாய்கள் பசியாலோ, முரட்டுச் சுபாவத்தாலோ ஆடுகளைத் தாக்கும் ஓநாய்கள் போலானால் அந்த இடையன் மூடனன்றோ?

கள: அது மிகவும் மோசமான காரியம்.

சோக்: அப்படியே நமது உதவிக் காவலர்கள், மற்றப் பிரஜைகளைக் காட்டிலும் பலசாலிகளாதலின், மக்களைக் காக்கும் தோழர்களாக இராமல் கொடிய அரக்கர்களாகாமல் தடுக்கப்பட வேண்டும்.

கள: ஆமாம்! இதில் அதிகக் கவனம் செலுத்துவது அவசியம்.

சோக்: இதற்கு நல்ல கல்வியே தகுந்த சாதனமல்லவா?

கள: இவர்களுக்கு நல்ல கல்வி ஏற்கெனவே அளிக்கப்பட்டு விட்டதே!

சோக்: கல்வி மட்டுமல்ல, அவர்களுடைய விடுதிகள், சொத்துக்கள், இதர வசதிகளும் காவலர்களின் சற்குணத்தைக் கெடுத்துப் பிரஜைகளைக் கொள்ளையடிப்பதற்குத் தூண்டத் தகாதவைகளாக இருக்க வேண்டுமல்லவா?

கள: நிச்சயம் வேண்டும்.

சோக்: அவர்களுடைய வாழ்க்கையைப் பற்றி இப்போது சிந்திப்போம். முதன் முதலில் மிகவும் அவசியமான சாமான்களைத் தவிர இதர சொத்து இருக்கக் கூடாது. பிறர் பிரவேசிக்கக் கூடாத தனி வீடோ, பண்டகசாலையோ எவருக்கும் கொடுக்கலாகாது. மிதமான பழக்க

வழக்கங்களும், தைரியமுள்ள வீரர்களுக்குரிய உணவுப் பொருளை மட்டுமே வழங்க வேண்டும். பிரஜைகளிடமிருந்து வருஷாந்திரச் செலவுகளுக்குப் போதிய ஓர் குறிப்பிட்ட சம்பளம் பெற்றுக் காவலர் அனைவரும் கூடிப் போர்க்களத்திலிருப்பதுபோல் போய்ச் சேர்ந்து வசிக்க வேண்டும். உண்மையான தங்கமும் வெள்ளியும் கடவுளால் அவர்களின் தேகத்திலேயே புதைக்கப்பட்டிருப்பதால், அப்பெயர் கொண்ட உலக மண்களுக்கு ஆசைப்பட்டுத் தங்கள் குணத்தில் மாசு படிய வைக்கலாகாது. இந்தத் திரவியமான தங்கமும், வெள்ளியும் உலகின் அக்கிரமங்களுக்கு மூல காரணமாக இருந்திருக்கின்றன. மற்றப் பிரஜைகள் அவைகளை வைத்து வியாபாரம் செய்யட்டும். காவலர்கள் மட்டும் அவற்றைத் தொடவோ, அவையிருக்கும் வீடுகளில் வசிக்கவோ அறவே கூடாது. தங்கம், வெள்ளி ஆபரணங்களை அணிவதும், அவ்விதப் பாத்திரங்களில் உண்பதும், குடிப்பதும் அவர்கள் செய்யத்தகாத காரியங்களாக வேண்டும். இந்த விதி அவர்களைப் பாதுகாக்கும். அவர்கள் ராஜ்யத்தைப் பாதுகாப்பார்கள். இதற்குமாறாக வீடுகள், நிலங்கள், நிதிகள் முதலிய சொத்துக்களை அவர்கள் பெற்றால், காவலர்களாக இருக்கமாட்டார்கள். பிரஜைகளைத் துன்புறுத்தும் கொடியவர்களாகிவிடுவார்கள். †பிறரைப் பகைத்தும், மற்றவர்களின் பகைக்கு ஆளாகியும், தாங்கள் சூழ்ச்சி செய்தும், எதிரிகள் சூழ்ச்சிக்கு இலக்காகியும், உள்நாட்டு வெளிநாட்டு விரோதிகளின் பயத்தில் என்றும் மூழ்கிக் கிடப்பர். அப்பொழுது அவர்களுக்கும் அவர்களுடைய ராஜ்யத்துக்கும் நாசகாலம் நெருங்கிவிடும். இந்தக் காரணங்களால், நமது ராஜ்யமும் அதன் காவலர்களும் மேற்கூறிய நியமங்களுக்குட்பட்டிருக்க வேண்டியது அத்தியாவசியமாகும்.

க்ள: சந்தேகமில்லை.

ஆதி: அதெல்லாம் சரிதான்! சோக்ரதரே, இந்தக் காவலர்களின் வாழ்க்கையைத் துன்பமயமாக்கி விடுகிறீர் என்று ஆட்சேபிக்கலாமல்லவா? *ராஜ்யம் அவர்கள் ஆதிக்கத்திலிருந்தும், தங்களைத் தவிர மற்றவர்களே பரந்த நிலங்களையும் பெரிய அழகிய மாளிகைகளையும் பெற்று, மகத்தான யாகங்கள் செய்து, விருந்தினர்களை உபசரிப்பதைப் பார்த்திருக்க வேண்டும். தங்கமும் வெள்ளியும் மற்றவர்க்கே. நமது காவலர்கள் நகரத்தில் ஓயாமல் காவல் புரியும் கூலிச் சிப்பாய்கள் போல் ஆகி விடுவார்களே.

சோக்: அது முற்றிலும் உண்மை. நீ மேலும் கூறலாம். சாதாரணச் சிப்பாய்களாவது உணவோடு சம்பளமும் பெறுகிறார்கள். அதுகூடக் காவலர்களுக்கு இல்லை. ஆதலால் ஓய்வெடுத்துக்கொண்டு சுகமாக யாத்திரை செய்ய இயலாது. காதலிகளுக்குப் பணம் கிடையாது. இதர உல்லாச வாழ்க்கைக்கும் வழி இல்லை. உலகத்தார் விரும்பும் சுகம் அவர்களுக்கு இல்லை என்று குறை கூறலாம்.

ஆதி: அந்தக் குற்றச்சாட்டுக்குப் பதில் என்ன?

சோக்: அவர்கள் காவலர்கள் பதவி வகிப்பதாலேயே மற்றவர்களைவிட உயர்ந்த சுக வாழ்க்கை பெற்றவர்களென்று வாதிக்கலாம். ஆனால் நாம் ஆதர்ச ராஜ்யத்தை அமைப்பதன் லட்சியம் ஓர் வகுப்பாரின் மிதமிஞ்சிய சுகத்துக்கல்ல. சமூகமனைத்தும் சாத்தியமானவரையில் பூர்ண சுகம் பெறவேண்டுமென்பதே. அவ்வித ராஜ்யத்திலேதான் நீதியை நாம் காண முடியும். அதற்கு மாறான ராஜ்யத்தில் அநீதியே தாண்டவமாடும். இவ்விரண்டையும் சீர்தூக்கிப் பார்த்து எந்த ராஜ்யத்தில் சுகம் அதிகமென்று முடிவு செய்யலாம். இதுவரையில் ஓர் சிலருக்கு இல்லாமல், அனைவருக்கும் நலமான ஓர் ராஜ்யத்தை அமைத்து வந்தோம். நாம் ஓர் ஓவியம் வரையும் பொழுது, மிகவும் அழகான வர்ணங்களை ஏன் உடலின் சில பாகங்களில் தீட்டுகிறீர்கள் என்றும், கண்களில் ஊதா வர்ணத்தை விடுத்து, ஏன் கறுப்பு வர்ணம் தீட்டியிருக்கிறீர்கள் என்றும், குறை கூறினால் நாம் என்ன

---

† அறம்நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும்
பெறலரும் திருப்பெற்றபின் சிந்தனை பிறிதாம்
- கம்பர்

* "மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பமல்லது தொழுதக வில்லென"
என்ற சிலப்பதிகார வரி இதனையே கூறுகிறது.

---

✿ சென்னை சங்கீத வித்வத் சபை கலை நிகழ்ச்சி வரிசையில் சென்ற ஜனவரி முதல் தேதி யன்று குமாரி பிரியம்வதாவின் பரதநாட்டியம் மிகச் சிறப்பாக நடந்தது. இந்தச் சிறுமி ஸம்ஸ்கிருதப் பேராசிரியர் டாக்டர் வே. ராகவன் அவர்களின் புதல்வி; சங்கீத நாடக அகாடமியின் ஆதரவில் புதுடில்லியில் நடந்த நடன நிகழ்ச்சிகளில் ஏற்கனவே பங்கெடுத்துக் கொண்டிருக்கிறாள். ஸ்ரீமதி பாலசரஸ்வதியிடம் பரதநாட்டியம் பயின்று கொண்டிருக்கும் குமாரி பிரியம்வதாவின் கலை ஆர்வமும் உற்சாகமும் அன்றைய நிகழ்ச்சியில் ஓரளவுக்கு வெளிப்பட்டன. இந்தச் சிறுமியின் கலை மேன்மேலும் வருங்காலத்தில் வளர்பிறை போல் விருத்தி யடையுமாக.





திருச்சி சேஷசாயி பிரதர்ஸ் கம்பெனியின் காரியதரிசி திரு பி. பி. வெங்கடசுப்பிரமணியம் அவர்களின் புதல்விகளும் காலஞ்சென்ற ஆர். சேஷசாயி அவர்களின் பேத்திகளுமான பேபி கிதா, பேபி மாலா ஆகியவர்களின் பரத நாட்டியம் திருச்சியில் ஜனவரி 21ந் தேதி நடைபெற்றது.

பதில் சொல்லுவோம்? நீங்கள் கூறுவது போல் கண்களில் ஊதா வர்ணமிட்டால் அவை கண்களாகமாட்டா. புருஷன் அழகாகவிருப்பதற்கேற்ப அங்கங்களுக்கு வர்ணம் தீட்டுவதே சரியான ஓவிய முறை என்போம். ஆதலால் காவலர்கள் தங்கள் கடமையைச் செய்யும் ஆற்றலை இழக்கச் செய்யும் சுகங்களை அவர்களுக்கு அளிக்கலாகாது. அப்படிச் செய்வதானல், குடியானவர்களுக்கும் பட்டாடை உடுத்தி, தங்க முடி சூட்டி உங்களுடைய விருப்பப்படி உழுது பயிரிடுங்கள் என்று விதிக்கலாம். குயவர்களை மெத்தைகளில் படுக்க வைத்து, விருந்தளித்து, மதுவருந்தச்செய்து சாவகாசம் கிடைத்தகாலத்தில் பானை செய்யச் சொல்லலாம். இவ்விதமே ஒவ்வொரு வகுப்பாரையும் நீ கூறிய விதம் சுகவாசிகளாக்கி, ராஜ்யத்தைச் சுகமயமாக்கலாம். ஆனல், இது பேராபத்தாக முடியும். குடியானவன் விவசாயம் செய்யமாட்டான்; குயவன் பானை செய்யான், எவனும் தன் தொழில் புரியான். சக்கிலியரைப் போல் கீழ்த்தரத் தொழிலாளிகள் மட்டும் இவ்விதமாக நிலை கெட்டுவிட்டால் அவ்வளவு கெடுதி ஏற்படாது. ராஜ்யத்தைப் பாதுகாத்துச் சட்டங்களை அமுல் செய்வோரே தமது நிலை தவறிவிட்டால், ராஜ்யம் கவிழ்ந்து விடும். காவலர் ராஜ்யத்தின் உண்மையான ரக்ஷகர்களாக இருக்க வேண்டுமென்பது நமது உத்தேசம். நம்மைக் குற்றம் கூறுவோர் அவர்களைத் திருவிழாவில் கூத்துப் பார்க்கும் குடியானவனுகச் செய்துவிட விரும்புகின்றனர். அவர்களுக்கு ராஜ்யத்தைப் பற்றிச் சிந்தனையில்லை. நமது காவலரை நியமிப்பதில் தனி நபர்களின் சுகத்தைக் கவனிப்பதா, சமூகத்தின் பொது நலத்தை நாடுவதா என்பதை நாம் கவனிக்கவேண்டும். சமூக நலமே லட்சியமாக இருப்பின் காவலர்களும், உதவிக் காவலர்களும், மற்றவர்களும் தமது பணிகளைத் திறமையுடன் செய்யுமாறு நயத்தாலோ, பயத்தாலோ கட்டாயப்படுத்தப்படவேண்டும். அப்பொழுதுதான் ராஜ்யம் உயரிய தன்மையில் கம்பீரமாக ஓங்கி வளரும். எல்லா வகுப்பினரும் தமக்குரிய சுகங்களை இயற்கையின் சுவுப்படி பெறுவார்கள்.

ஆதி: நீங்கள் கூறுவது முற்றிலும் சரி.

சோக்: நான் வேருெரு கருத்தும் கூற விரும்புகிறேன். உனக்குப் பிடிக்குமோ என்பது சந்தேகம்.

ஆதி: அதென்ன ?

சோக்: கலைகள் குறைவதற்கு இரு காரணங்கள் உண்டு.

ஆதி: அவை யாவை ?

சோக்: செல்வமும், வறுமையும்.

ஆதி: அவற்றின் பலன்கள் என்ன?

சோக்: ஓர் குயவன் பணக்காரனுகிவிட்டால், முன்போல் பிரயாசையுடன் வேலை செய்வானு?

ஆதி: மாட்டான்.

சோக்: சோம்பேறியாகிவிடுவான். அவனது பானைத் தொழிலும் சிதைந்துவிடும். இதற்குமாருக, அவன் வறுமை மிகுந்து தக்க கருவிகளும் சாதனங்களும் இல்லாமல் வருந்தினல் தன் வேலைகளை நன்ருகச் செய்ய முடியாது. தனது பிள்ளைகளுக்குக் கற்பிக்கச் சாத்தியப்படாது. ஆதலால் செல்வம், வறுமை இரண்டுமே கலைகளின் எதிரிகள்.

ஆதி: சந்தேகமில்லை.

சோக்: செல்வம் சோம்பலுக்கும், சுக வாழ்க்கைக்கும் தாயாகும். வறுமையோ நீசத்தனத்துக்கும் அதிருப்திக்கும் அன்னையாகும்.

ஆதி: நீங்கள் கூறுவது உண்மையே. ஆனல் செல்வம் இல்லாத நமது ராஜ்யம் செல்வம் மிகுந்து வலுப் பெற்ற எதிரிகளுடன் எவ்வாறு போர் புரியும்?

சோக்: நம்மைத் தவிர எதிரி ராஜ்யம் ஒன்றே இருந்தால், சிறிது கஷ்டம்தான். ஆனல் பல ராஜ்யங்கள் இருப்பதால், நமக்குப் பயமில்லை.

ஆதி: அது எப்படி ?

சோக்: நமது கட்சியில் பயிற்சி பெற்ற போர்வீரர்களும் இருப்பதே நமக்கு முதல் நலம். போருக்கு முன், நாம் மற்ற ராஜ்யங்களுக்குப் பின்வரும் செய்தியை அனுப்புவோம். 'எங்களிடம் தங்கம், வெள்ளி கிடையாது. அவைகளை வைத்துக் கொள்ளலாகாது என்பது எங்கள் விதி. ஆனல் உங்களுக்கு அவ்விலக்கு இல்லை. எங்களுக்கு உதவி புரிந்து, நீங்கள் எதிரியின் செல்வத்தைச் சூறையாடுங்கள்.' இந்தச் செய்தி கேட்டவர்கள் வறுமையுள்ள நம்மை எதிர்த்துச் செல்வமுள்ள எதிரியோடு சேர்ந்து கொள்வார்களா? மற்ருேர் விதியும் செய்வோம். நமது ராஜ்யம் மிகவும் சிறியதாகவோ, மிதமிஞ்சிப் பெரியதாகவோ இருக்கலாகாது. தனது தேவைகளையெல்லாம் தானே பூர்த்தி செய்யும் அளவோடு திருப்தி யடைவோம்.

# செவ்வாய் கிரஹத்திலிருந்து.....

அண்டை வெளிக்கு செல்லும் விமானமானது செவ்வாய் கிரகத்திலிருந்து இன்னும் 15 நிமிடத்தில் மேற்றளம் 4-ல் வந்து சேரும். வந்தனம்.

இதைக் கேட்பதற்கு நம்பத்தகாத கற்பனையாக தோன்றவில்லையா? இருந்தபோதிலும் விஞ்ஞானத்தின் துரிதமான முன்னேற்றத்தின் காரணமாக, இன்று இம்மாதிரியான பிரயாணங்கள் நிச்சயமாக நிகழக்கூடியவைதாம் என நம்பப்படுகிறது.

வருங்காலத்தில் ஒவ்வொரு கிரகங்களுக்கு பூமிக்குமிடையே உள்ள அண்டை வெளியில் விமானநிலயங்கள் கட்டப்படும். இவ்வகையாக விமானநிலையங்களைக் கட்டுவதற்கு பூமியிலிருந்து இயந்திர கருவிகளும் சாதனங்களும் அனுப்பப்படும்—இவைகளை அண்டை வெளியில் ஒன்றாக இணைத்து விமானநிலையத்தைக் கட்டி முடிப்பதற்கு உதவப்போகின்றது.

பூமியிலிருந்து வெகுதூரம் வியாபித்து இந்த அண்டை வெளியின் மேற்றளமானது பூமியைச்சுற்றிச் சுழலும். இந்த மேற்றளங்கள் மனிதன் கிரகங்களை அடைவதற்கு மேற்கொள்ளும் பிரயாணத்தில் முதல் தங்குமிடம்.

துரிதமாக விஞ்ஞானம் வளர்ந்து கொண்டிருக்கும் இக்காலத்திலும் புதுப்புது முறையில் பலவாக சிந்தித்து கொண்டிருக்கும் இவ்வுலகில்கூட அன்றாட வாழ்க்கைக்கு சில பொருள்கள் ஒரேமாதிரியான உற்சாகத்தை தொடர்ந்து அளிக்கின்றன—உதாரணமாக வில்ஸ் நேவிகட் சிகரெட்டுகள்—புகை பிடிப்பதிலுள்ள இன்பம் பூராவையும் கொடுப்பதற்கு மிகவும் நேர்த்தியாக அமைந்திருக்கிறது. இந்த இன்பத்தை எல்லோராலும் வெகு எளிதில் அடையலாம்.



**வில்ஸ் என்றாலே**
**சிறந்த சிகரெட்டுகள்**

NC/152. *Issued by The Imperial Tobacco Company of India Limited.*

# திருமணத் தொண்டு



சேதுபதி அரசர்களின் சிறப்பை அறியாதவர்கள் தமிழ் நாட்டில் இருக்க முடியாது. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இராமநாதபுரம் சீமையை முத்துராமலிங்க சேதுபதி என்ற மன்னர் ஆண்டு வந்தார். அவர் கலையுள்ளமும் புதுமை ஆர்வமும் கொண்டவர். புலவர்களுக்கும், இசைக் கலைஞர்களுக்கும் பொருளுதவி செய்து அவர்கள் கலையின் தரம் சீரழிந்து விடாமல் பாதுகாப்பதில் பெருமைப்படுகிறவர். பொதுவாகவே, எல்லாச் சேதுபதி மன்னர்களிடமும் அந்தப் பெருந்தன்மை இருந்தது.

சேதுபதிகள் செழிப்பாக வாழ்ந்த காலத்தில் இராமநாதபுரம் பகுதியில் தான் எவ்வளவு நல்ல காரியங்கள் நடைபெற்றிருக்கின்றன? இராமநாதபுரம் என்ற ஊருக்குப் பெருமை ஏற்பட்டதே சேதுபதிகள் அங்கு வாழ்ந்ததனால்தான். இராமேசுவரத்துக்கு வழிபாடு செய்ய யார் எந்த நாட்டிலிருந்து வந்தாலும் திரும்பும்போது இராமநாதபுரம் வந்து சேதுபதியைக் கண்டு செல்லாவிட்டால் அந்தப் புண்ணிய யாத்திரையின் பயனை நிறைவெய்தாது என்று பழைய காளிலிருந்து ஒரு வழக்கம் இருக்கிறது. அவ்வளவு பெருமை அந்த அரச மரபுக்கு உண்டு.

சேதுபதிகள் எத்தனை எத்தனை கோவில்களைக் கட்டினார்கள்? சத்திரங்கள் கட்டினார்கள்? தமிழ்ச் சங்கங்களை அமைத்தார்கள்? இராமநாதபுரம் அரண்மனையில் இராமலிங்க விலாச மண்டபத்திலும், இராசராசேசுவரி கோவிலிலும், எவ்வளவு தமிழ்ப் புலவர்களின் குரல் ஒலித்திருக்கும்? அது ஒரு காலம்! தமிழுக்கும், தென்னாட்டுக்கும் பொற்காலம். குடும்பச் சொத்துக்களைப் போல் எண்ணிக் கொண்டு தமிழையும், சமயத்தையும், அறங்களையும் காப்பாற்றுவதற்கு இனிமேல் அப்படி அரசர்கள் பிறக்கவா போகிறார்கள்? இன்று நினைத்தால் எல்லாம் வெறும் கனவுகளாகத் தோன்றுகின்றன. யானைகளின் மணியோசையும், கவிஞர்களின் பாட்டோசையும், இசை ஒலியும், கலந்து ஒலி மயமாகத் தோன்றிய இராமநாதபுரம் அரண்மனை இன்று ஊருக்குப் பெரிய கட்டடமாக இருளில் உறங்கிக் கொண்டிருக்கிறது. எந்த உண்மையும் பழையதாகி விட்டால் அதைப் பார்த்து யாருக்கும் வியக்கத் தோன்றாது போலிருக்கிறது.

போகட்டும், இப்போதிருக்கும் இராமநாதபுரத்தை நாம் போய்ப் பார்க்க வேண்டாம். காலவேகத்தைக் கடந்து பின்னோக்கி நடந்து முத்துராமலிங்க சேதுபதி காலத்து இராமநாதபுரத்துக்கு நாம் செல்லலாம்.

முத்துராமலிங்க சேதுபதி ஆண்ட காலத்தில் முத்திருளப்ப பிள்ளை என்பவர் அவருக்கு அமைச்சராக இருந்தார். இந்த முத்திருளப்ப பிள்ளை ஒரு அற்புதமான மனிதர். வாழ்க்கையிலுள்ள இன்ப துன்பங்களைக் கூர்ந்து கவனிப்பவர். துறுதுறுப்பான இயல்பு உள்ளவர். ஏதாவதொரு புதுமையான நல்ல காரியத்தைத் திடீரென்று செய்து மற்றவர்களை வியப்பில் ஆழ்த்துவது அவருடைய வழக்கம். இப்போதுள்ள இராமேசுவரம் கோவிலின் மூன்றாவது பிராகாரத்தைக் கட்டியது இந்த முத்திருளப்ப பிள்ளையின் மேற்பார்வையில்தான்.

அந்தக் காலத்தில் போர், பூசல், என்றெதுவும் இராமநாதபுரம் சீமையில் கிடையாது. கோவில்களைப் புதுப்பித்தல், குளங்கள் வெட்டுதல் என்று தேடித் தேடி ஒவ்வொரு நன்மையாகச் செய்து கொண்டிருந்தார் முத்திருளப்ப பிள்ளை. திடீரென்று உலகத்தில் நன்மைகளுக்குப் பஞ்சம் ஏற்பட்டு விட்டது போல் ஆகிவிட்டது. முத்திருளப்ப பிள்ளை தேடிக் கண்டுபிடித்துச் செய்கின்றாற்போல ஒரு நன்மையும் செய்யப்படாமல் மீதம் இருக்கவில்லை.

புதிதாக என்ன நன்மையைச் செய்யலாமென்று சிந்தித்தார். வாழ்க்கையின் மேடு பள்ளங்களைக் கூர்ந்து பார்க்கும் முத்திருளப்ப பிள்ளைக்கு மறவர் சீமையின் ஆயிரக்கணக்கான நடுத்தரக் குடும்பங்களில் எந்தத் துன்பம் பெரிதாக உறுத்திக் கொண்டிருக்கிறது என்பது தெரிந்தது. திடீரென்று அரண்மனைக் கணக்கர்களைக் கூப்பிட்டு அவர்கள் திகைப்பும், வியப்பும் அடையும்படியான ஒரு உத்தரவைப் போட்டார் முத்திருளப்ப பிள்ளை.

"இந்தச் சீமையிலுள்ள ஒவ்வொரு ஏழைக் குடும்பத்திலும் திருமணமாகாமல் எத்தனை பெண்கள் கன்னிகைகளாகவே இருக்கிறார்களென்று ஒரு கணக்கு எடுத்துக் கொண்டு வாருங்கள். உங்களுடைய பட்டியல்



விரைவில் எனக்குக் கிடைக்கவேண்டும்'' என்பதுதான் அவர் இட்ட கட்டளை. கன்னிப் பெண்களின் பட்டியலைத் தயார் செய்யச் சொல்லும் அவருடைய நோக்கம் என்னவாக இருக்குமென்று கணக்கர்களுக்குத் தெரியவில்லை. சொன்னபடி பட்டியல்தயார்செய்யத்தொடங்கினார்கள்.

அந்தப் பட்டியலைத் தயார் செய்யும் போது அவர்களுக்குப் பல தொல்லைகள் ஏற்பட்டன. சில வீடுகளில் கேட்ட வுடன் பதில் கூறினார்கள்; சில வீடுகளில் என்னவோ, ஏதோ, என்றெண்ணிப் பதில் சொல்லத் தயங்கினார்கள். இன்னும் சில வீடுகளில், "எங்கள் வீடுகளில் எத்தனை கன்னிப் பெண்கள் இருந்தால் உங்களுக்கு என்ன? இதில் நீங்கள் ஏன் அக்கறை காட்ட வேண்டும்? திருமணம் செய்கிறோம், அல்லது செய்யாமல் போகிறோம், பெண்களைப் பெற்றவர்கள் படவேண்டிய கவலை உங்களுக்கு ஏன்?" என்று கடுமையாக எதிர்க் கேள்வி கேட்டு மடக்கினார்கள். ஆனாலும் அரண்மனைக் கணக்கர்கள் அயர்ந்து விடவில்லை. நயத்திலும், பயத்திலும், அரட்டி, மிரட்டிக் கன்னிப் பெண்களின் பட்டியலைத் தயார் செய்து கொண்டு போய் முத்திருளப்ப பிள்ளையிடத்தில் கொடுத்து விட்டார்கள். கணக்கர்கள் வீடு வீடாகப் படியேறி விசாரித்ததனால் அந்தச் செய்தி ஊர்முழுதும் பரபரப்பை உண்டாக்கியது.

"போயும், போயும், முத்திருளப்ப பிள்ளைக்கு இந்த வயதான காலத்தில் இப்படிப் புத்தி தடுமாறியிருக்க வேண்டாம்" என்றார்கள் சிலர். "ஏன் திருமணம் செய்யாமல் வைத்துக் கொண்டிருக்கிறீர்களென்று பெற்றோர்களைக் கண்டித்து ஏதாவது புது வரி விதிக்கப் போகிறாரோ?" என்று பேசிக் கொண்டார்கள் வேறு சிலர். மறுநாள் இன்னொரு ஆச்சரியம் நடந்தது. திருமணமாகாத இளைஞர்கள் பட்டியலொன்றும் தயாரிக்கப் புறப்பட்டார்கள் கணக்கர்கள். இரண்டு பட்டியல்களும் தயாரான பின் திருமணமாகாத ஆண், பெண்களின் பெற்றோர்களை வரவழைத்துக் கலந்து பேசினார் முத்திருளப்பபிள்ளை. சில ஏற்பாடுகள் அந்தரங்கமாக நடந்தன.

"என்ன முத்திருளப்ப பிள்ளை! ஊரிலுள்ள கன்னிப் பெண்களையும் வாலிபர்களையும் கணக்கெடுக்கிறீராமே? அவர்களை வைத்துக் கொண்டு ஏதாவது போருக்குப் படையெடுக்கப் போகிறீர்களா, நீங்கள்?" என்று சேதுபதி ஒருநாள் அவரிடம் வேடிக்கையாகக் கேட்டார்.

"அதெல்லாமில்லை! அவர்கள் இப்போது போராடிக் கொண்டிருக்கும் கொடுமையான போரிலிருந்து அவர்களை மீட்கப் போகிறேன்."

"என்ன? அவர்கள் இப்போது போராடிக் கொண்டிருக்கிறார்களா? யாரோடு போராடிக் கொண்டிருக்கிறார்கள்?"

"மன்மதனோடு!" குறும்புச் சிரிப்போடு சுருக்கமாகப் பதில் சொன்னார் முத்திருளப்ப பிள்ளை. அவருடைய பதிலைக் கேட்டுப் பலமாகச் சிரித்தார் சேதுபதி.

"அரசே! வயிற்றோடு போராடிக் கொண்டு பசியுடன் இருப்பவர்களைக் கூட உடனே கவனித்து ஆக வேண்டிய தில்லை. ஆனால் இந்தப் போராட்டத்தை உடனே கவனித்தாக வேண்டும். இல்லையானால் பையன்களும், பெண்களும் ஊரைக் குட்டிச் சுவராக்கி விடுவார்கள். ஆலமரம் போல் வேரூன்றி விட்ட இந்த நாட்டின் அறத்தையும், ஒழுக்கத்தையும் ஒரு நாளில் குலைத்து விடுகிற போராட்டம் இது."

முத்திருளப்ப பிள்ளையின் இந்த வார்த்தைகளைக் கேட்டபோது சேதுபதிக்கு மெய் சிலிர்த்தது. மறுநாள், "உங்களுடைய பெண்களுக்குத் தக்க இளைஞனைத் தேடி அரண்மனைச் செலவில் திருமணம் செய்து வைக்கப்படும்" என்று ஒவ்வொரு ஏழைப் பெற்றோருக்கும் வீடு தேடித் தகவல் வந்தபோது அத்தனை பெற்றோர்களும் வியப்பில் ஆழ்ந்து போனார்கள். இவ்வளவு பெரிய நன்மையை அவர்கள்தான் எதிர்பார்க்கவே யில்லையே? எந்தப் பெற்றோர்களுடைய பெண்களுக்கெல்லாம் முத்திருளப்ப பிள்ளை அரண்மனைச் செலவில் இலவசமாகத் திருமணம் செய்து வைத்தாரோ, அந்தப் பெற்றோர்களில் ஒரு ஏழைத் தமிழ்ப் புலவனும் இருந்தான் போலிருக்கிறது. அவன் தன் உள்ளத்தில் ஏற்பட்ட அளவற்ற நன்றிப் பெருக்கை ஒரு பாட்டாகப் பாடி வைத்து விட்டுப் போயிருக்கிறான். அவனுடைய அந்தப் பாட்டு மட்டும் இல்லையானால் முத்திருளப்ப பிள்ளை இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னால் செய்த இந்த அற்புதமான நல்ல காரியத்தைத் தெரிந்து கொள்ள நமக்கு வாய்ப்பில்லாமலே போயிருக்கும்!

"அமரிக்கையாளன் முத்துராமலிங்க
சேதுபதி யவனிக் கெல்லாம்
சுமுகப்ரதாபன் எங்கள் முத்திருளப்
பேந்த்ர மந்த்ரி துலங்குநாளிற்
சமருக்கென் றெதிர்மன்னர் தரையிலிலே
மதனொருவன் தவிர மின்னார்
குமரிக்குள் கன்னியா குமரியல்லால்
மற்றில்லைப் பெண்குமரி தானே?"

(பெருந்தொகை 1302)

[அமரிக்கை - அடக்கம்; சுமுகப் பிரதாபன் - முகமலர்ச்சியோடு புகழ்பெற்றவன்; சமர் - சண்டை; மதன் - மன்மதன்]

கெடுதல்களைத் தேடித் தேடிக் கண்டுபிடித்துச் செய்கின்றவர்கள் இன்று உலகெங்கும் இருக்கிறார்கள். நல்லதைத் தேடிச் செய்ய எங்காவது சிலரே இருக்கிறார்கள். இன்றைக்கும் நாட்டில் ஒவ்வொரு ஏழைக் குடும்பத்திலும் பெண்களின் கலியாணம் ஒரு பெரிய பிரச்னைதான். ஆனால் அந்தப் பிரச்னையை அற்புதமாகத் தீர்த்து வைக்கும் முத்திருளப்ப பிள்ளைகள் நாட்டில் இல்லையே? —வளவன்



ப்ரௌன் அன்டு போல்ஸன் கார்ன்ப்ளவர்
பேட்டன்ட் ஆக அங்கீகரிக்கப்பட்டது.
இதன் பரிசுத்தத் தன்மைக்கு
இப்பரிசைஷயைச் செய்து பாருங்கள் :-

இரண்டு மேஜைக் கரண்டியளவு ப்ரௌன் அன்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவரை கொதித்து ஆற வைத்து குளிர்ந்த ஜலத்தில் நன்றாகக் கலக்குங்கள். 24 மணி நேரம் இவ்விதம் வைத்த பிற்பாடும்கூட கெட்ட வாசனை உண்டாகாமல், மாசற்றதாகவும், பெக்டீரியா முதலிய அசுத்த அணுக்களால் சேதப்படாமலும் இருப்பதைக் காண்பீர்கள். மற்ற ப்ரௌன் அன்டு போல்ஸனின் உயர்தர சாதனங்கள் என்னவென்றால்: ரெய்ஸ்லி, கஸ்டர்ட் பௌடர், ப்ளேவர்ட் கார்ன்ப்ளவர்.

# பட்டர்ஸ்காட்ச் புட்டிங்

## சாப்பிட்டுப் பாருங்கள்

¾ கப் காரோ ஸிரப், ¼ தேக்கரண்டியளவு உப்பு, 5 மேஜைக் கரண்டி ப்ரௌன் அன்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவர், 2½ கப் பால், 6 துளி வனில்லா எஸன்ஸ், ½ மேஜை கரண்டியளவு ரெக்ஸ் ஸலட் ஆயில்.

பாலையும் ஸிரப்பையும் சேர்த்து சற்று கொதிக்க வைக்கவும். ரெக்ஸ் ஸலட் ஆயிலைச் சேர்த்து உப்பும், ப்ரௌன் அன்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவரையும் கொஞ்சம் பச்சைப் பாலில் நன்றாகக் கரைக்கவும். அடுப்பில் வைத்து குழம்பாகும் வரை விடாமல் குறைந்தது 20 நிமிட நேரம் கிளறிக்கொண்டிருக்கவும். பின் வனில்லா எஸன்ஸை சேர்த்து, வார்ப்பில் (Mould) ஊற்றி நன்றாக குளிர்ந்த பின்பு, செர்ரியும் (Cherries) தித்திப்பான க்ரீமும் சேர்த்து பரிமாறவும்.



இங்கிலீஷ், ஹிந்தி, அல்லது தமிழ் பாஷைகளில் பிரசுரிக்கப்பட்ட அபூர்வமான சமையல் புஸ்தகம் இலவசமாக வேண்டுவோர் இங்குள்ள கூப்பனை பூர்த்தி செய்து அனுப்பவும். (வேண்டாத பாஷையை அடித்து விடவும்)

தபால் செலவிற்காக 15 நயா பைசா விலையுள்ள தபால் ஸ்டாம்பு நான் இதோடு அனுப்புகிறேன்.

ஸ்ரீ/ஸ்ரீமதி/செல்வி..........................................

..........................................................

விலாசம்.................................................

டிப்பார்ட்மெண்ட் : K K 11

கார்ன் ப்ராடெக்ட்ஸ் கோ.
(இந்தியா) ப்ரைவேட் லிமிடெட்
தபால் பெட்டி : 994, பம்பாய் 1



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ(இந்தியா)ப்ரைவேட் லிட்.

இந்தியாவில் ஏஜெண்டுகள் : பாரி அன்டு கோ. லிட்.



# மஞ்சள் மகிமை

இந்தப் படத்தின் பெயர் "மாங்கல்ய பாக்கியம்" என்று இருக்க வேண்டும். அல்லது "சுமங்கலி" என்று இருக்க வேண்டும். ஆனால் ஏற்கனவே அந்தப் பெயர்களில் இரண்டு படங்கள் வெளி வந்து 'பணால்' ஆகிவிட்டன.

பழைமையும் இன்றிப் புதுமையும் இன்றி—வெய்யிலும் இல்லாமல் மழையும் இல்லாமல் வானம் மந்தாரமாயிருப்பது போல்—ஆனபடம் 'மாங்கல்ய பாக்கியம்' ஆகவே, அது வெற்றியும் இன்றித் தோல்வியும் இன்றி வந்த வேகத்திலேயே மறைந்து போய் விட்டது.

குழப்பமான திரைக்கதையும், குட்டிச் சுவராய்ப்போன எடிட்டிங்கும் சேர்ந்து கொண்டு "சுமங்கலி"ப் படத்தை ஒரே அடியாய்க் காலை வாரி விட்டு விட்டன. எந்தப் படத்திலும் கதாநாயகன் கதாநாயகர்களுக்குத்தான் மகத்துவம் அதிகமாயிருக்கும். விளம்பரப் படங்களில் கூட அவர்களுடைய உருவங்களைத்தான் பெரிய அளவில் போடுவார்கள். தியேட்டர் வாசல்களிலுங்கூட அவர்களுக்குத்தான் அலங்காரம் பிரமாதமாயிருக்கும். ஆனால் "சுமங்கலி" படத்தில் கதாநாயகனையும் கதாநாயகியையும் ஒருபுறமாக ஒதுக்கித் தள்ளி விட்டு, திரைக் கதையில் அதிகமாகச் சம்பந்தப்படாமல் ஒதுங்கி நிற்கும் சோணையன் என்ற வில்லன் பாத்திரத்துக்குத்தான் மகத்துவம் அதிகமாகக் கொடுக்கப் பட்டிருந்தது.

படம் பார்ப்பவர்கள் படம் தயாரிப்பவர்களை விட என்றுமே மிகவும் கெட்டிக்காரர்கள். அவர்களுக்குத் தாங்கள் பார்க்கும் படங்களில் எவைகளை ஒதுக்க வேண்டும், எவைகளைக் கொள்ள வேண்டும் என்பது நன்றாய்த் தெரியும். ஆகவே, "சுமங்கலி"க்கு "மாங்கல்ய பாக்கியம்" கிட்டி விட்டது ('பணால்' ஆகிவிட்டது!)

மேற்கூறிய படங்களின் வரிசையில் தான் சமீபத்தில் வெளியாகி மறைந்து போன "மாதவி" யையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

சம்பூர்ண ராமாயணத்தைத் தயாரித்துச் சமர்த்தாக நல்ல பெயர் வாங்கிக் கொண்ட எம். ஏ. வி. பிக்சர்ஸார்தான் மறைந்துபோன "மாதவி" யையும் தயாரித்தனர். பல்லாண்டுகளுக்கு முன்பு தயாரிக்கப்பட்ட காலஞ் சென்ற பழைய படங்களையெல்லாம் விட இவ்வளவு மோசமாக ஒரு படத்தை அவர்களால் எப்படித் தயாரிக்க முடிந்தது என்பதுதான் அதிசயிக்கத் தகுந்த விஷயம். ஆனால் "மாதவி" என்று ஒரு படம் வந்ததாகவே நினைக்காமல், படம் பார்ப்பவர்கள் அதைக் கண்டு கொள்ளாமலே இருந்து விட்டதில் அதிசயம் ஒன்றும் இல்லை.

இப்படிப் பல படங்கள் வெளிவந்து அதி சீக்கிரத்தில் மறைந்து விடுவதனால், இந்தியாவிலேயே தமிழ்ப் படங்கள் தான் நிறைய வருகின்றன என்ற தனிப் பெரும் புகழ் நமக்குக் கிடைக்கலாம்!

## நாந்தன்

அன்னபூர்ணா பிக்சர்ஸாரின் தயாரிப்பான "மஞ்சள் மகிமை"யில் புதிதாக, அதிசயிக்கத் தகுந்த விதத்தில் ஒன்றும் இல்லை. பால்ய விவாகத்தை அடிப்படையாகக் கொண்ட பழைய கதைதான்.

கிராமத்திலே மகள் சீதா, பட்டணத்திலே மகன் மார்த்தாண்டம்; பிரிந்து நிற்கும் இந்த இரண்டு குடும்பங்களையும் ஒன்று சேர்க்க வேண்டும் எனத் துடிக்கும் தாயார் பார்வதியம்மாள், சீதாவின் மகனான சேகருக்கும் மார்த்தாண்டத்தின் மகளான சரோஜாவுக்கும் திருமணம் செய்து வைத்து விடுகிறாள். மார்த்தாண்டம் இந்த விவாகத்தை எதிர்க்கிறார்; உயர் நீதிமன்றம் வரையில் வழக்காடி விவாகரத்து பெறப்படுகிறது. பால்ய மணமக்கள் பிற்காலத்தில், ஒருவரையொருவர் அறியாமல் காதலித்து ஒன்றுபடுகின்றனர்.

படத்தின் ஆரம்பத்தில் நடக்கும் பொம்மைக் கல்யாணக் கோலாகலமும், குழந்தைகளின் அபிநயமும் மிகவும் நன்றாயிருக்கின்றன. அப்பொழுது பாடப்படும், "அன்பினால் நீங்கள் என்றும் ஒன்றாய் வாழணும்" என்ற உடுமலை நாராயண கவியின் பாட்டும் நன்றாயிருக்கிறது.

"மஞ்சள் மகிமை"யில் சாவித்திரிதான் பிரதான நடிகை. அவர் நடிப்பும் பிரதானமாகக் கூறும்படியிருக்கிறது. சேகரைச் சந்தித்து அவனிடம் மனத்தைப் பறிகொடுத்தது, அவனும் தன்னிடம் அன்பாயிருக்கிறான் என்பதை அறிந்தது, அண்ணன் மூலம் தன் பால்ய விவாக சங்கதியைத் தெரிந்துகொண்டதும் துடித்தது ஆகிய கட்டங்களில் சாவித்திரியின் நடிப்பு தரம் உயர்ந்து விளங்குகிறது.

சேகராக வருபவர் ஏ. நாகேசுவரராவ். பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார்.

"மஞ்சள் மகிமை"யை எல்லோருக்கும் தெரியப் பண்ணிய மகிமை கண்ணாம்பாவைச் சேர்ந்தது. மார்த்தாண்டத்தின் தாய் பார்வதியம்மாள் மட்டும் இல்லையென்றால் சேகருக்கும் சரோஜாவுக்கும் திருமணமே நடந்திருக்காது. அப்படியே நடந்திருந்தாலும் கடைசியில் மீண்டும் அவர்கள் ஒன்றுசேர்ந்திருக்கவே முடியாது. அதனால் தான் அவள் துப்பாக்கி குண்டுக்குக் கூடத் தப்பிப் படத்தைச் சுபமாக முடிக்கிறாள்!

ராஜசுலோசனா-தங்கவேலுவின் பாகம் படத்தில் மிகவும் களையான பாகம். அவர்கள் காதல் ஆரம்பத்திலிருந்தே களை கட்டி விடுகிறது. தங்கவேலு மிக நன்றாய் நடித்திருக்கிறார். இயல்பான ஹாஸ்யங்கள் நிறையக் கிடைக்கின்றன.

மார்த்தாண்டமாக வரும் எஸ். வி. ரங்காராவ் கையில் வேட்டைத் துப்பாக்கியோடு வந்து படத்தை முடித்து விடப் பார்த்தும் படம் முடியவில்லை!

மார்த்தாண்டத்தின் தங்கை சீதாவாக வருபவர் ஜி. வரலக்ஷ்மி. திரைக்கதையின் சங்கடங்களுக்கும், 'சஸ்பென்ஸ்'க்கும் அவர்தான் அடிப்படைக் காரணம்.

மார்த்தாண்டத்தின் மனைவி கமலம், பதிக்கடங்காத பத்தினி. அவள் இல்லையென்றால், சேகர் - சரோஜாவின் பால்ய விவாகம் நடந்தேயிருக்காது. அப்படி நடந்திருந்தாலும் அதன் காரணமாக அவ்வளவு சிரமங்களும் ஏற்பட்டிருக்கமாட்டா. கமலமாக நடித்த சுந்தரிபாய் நன்றாய் நடித்திருக்கிறார்.

ராகினி—குமாரி நடனம் கவர்ச்சி அளிக்கிறது.

வடநாட்டிலிருந்து தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வரும் அளவுக்கு "மஞ்சள் மகிமை"யில் அப்படி என்ன மகிமை இருக்கிறது என்று எனக்குப் புரியவில்லை. கதை மிகப் பழையது. நடிகர்களின் திறமையான நடிப்பால் சுவைபெற்று விளங்குகிறது.

"ஆகாய வீதியில் அழகான வெண்ணிலா" என்று சேகரும் சரோஜாவும் பாடும் பாட்டு மிகவும் சுவை நிறைந்ததாயிருக்கிறது. பி. சுசீலாவும், கண்டசாலாவும் பாட்டை நன்றாய்ப் பாடியிருக்கிறார்கள். பாட்டு செவியில் ஒலித்த வண்ணம் இருக்கிறது.

படத்தில் நன்றாய் நடித்திருப்பவர்களின் வரிசையில், வான வீதியில் மேகத் திரையில் மறைந்து மறைந்து தோன்றிய வெண்ணிலாவையும், நந்தவனத்தில் வந்து காதலர்களை அச்சுறுத்திய பாம்பையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

திருப்பதி மலைப்பாதையின் உயர்வு, நெளிவுகளையும், சாய்வு சரிவுகளையும் நன்றாகப் படமாக்கியிருக்கிறார்கள். ஒரு தமிழ்ப் படத்தில் இவ்வளவு தாராளமாகப் புறக்காட்சிகளைச் சேர்த்திருக்கிறார்களே என்று நான் மிகவும் சந்தோஷப் பட்டேன்.

ஸ்ரீதர் திரைக்கதைவசனத்தை அழகாக அமைத்திருக்கிறார்.



# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 91. பேன்

"அண்ணே! நீ என்னமோ விளையாடுகிறாய்! பொருந்தியிருந்தால் இருப்பேன்..."

"என்னடா, தம்பி! மிரட்டுகிறாய்? இருப்பேன், நிற்பேன், படுப்பேன், தின்பேன், குடிப்பேன், மறுபடியும் படுப்பேன். இதுதானேடா?"

இப்படியாக ஒரு சுப்பிரபாதம் நமது புத்திரகாமேஷ்டிகள்!

"அட அட அட! காலையில் எழுந்தால் உங்களோடு பெரிய போராட்டம். ஒரு நாள் தப்புவதில்லை. உங்கள் தொல்லை சகிக்க முடியவில்லை...." என்று அலுத்துக் கொள்ளும் "ஸோ அண்ட் ஸோ" அதுதான் இந்தப் புத்திர காமேஷ்டிகளைப் பெற்று என்னையும் என் பிதிருக்களையும் 'புத்' என்னும் நரகத்தில் விழாமல் காப்பாற்றிய (பர) தேவதை.

'பேஷ்! பேஷ்! பிள்ளைகள் இரண்டும் 'பேன்பேன்' என்று குடுமியைப் பிய்த்துக் கொள்கின்றனர். தாயார் இத் தொல்லை சகிக்க முடியவில்லை என்று அலுத்துக் கொள்கிறாள்! ரொம்ப பேஷ்! தலை முடியைச் சுத்தமாக வைத்துக் கொள்ளத் திறமையில்லை. பேன் என்றும் ஈர் என்றும் தொல்லை யென்றும் சகிக்க முடியவில்லை என்றும் அலுத்துக்கொண்டு என்ன பிரயோசனம்?' (இது அடியேனுற்றிய சொற்பொழிவு!)

உடனே ஒரு நிசப்தம். பிள்ளைகளும் தாயாரும் ஒருவர் முகத்தை ஒருவர் மாறிப் பார்த்துக் கொண்டனர். (மிருகக் காட்சிச் சாலையில்......பார்ப்பது போல்.) தொடர்ந்து எல்லோருமாக ஏகோபித்து ஒரு சிரிப்பு. (எப்படியோ! ரகளை தீர்ந்ததில் எனக்கொரு திருப்தி. சண்டை தீர்ந்து சிரிப்பும் ஏற்பட்டதில் ஒரு சந்தோஷம்!)

"தென்னை மரத்தில் தேள் கொட்டித்தாம். தெருத்திண்ணைக்கு நெரி கட்டித்தாம்னு நீங்க சொல்கிறது நன்றாத்தான் இருக்கிறது." (இது மேற்சொன்ன "ஸோ அண்ட் ஸோ")

"என் பேச்சு நன்றாயிருக்கிறதென்று நீ ரசிப்பதில் எனக்குப் பரமசந்தோஷம்." (இதற்குள் தாயார், பிள்ளைகள் யாவரும் மாடியிலிருந்து கீழே இறங்கி விட்டனர்.) குடும்பத்தில் ஏற்படும் பல்வேறு சம்பவங்களைச் சமாளித்துச் சுமுக நிலையை ஏற்படுத்த மேற்சொன்னது போன்ற உபாயங்களை அடிக்கடி கையாள வேண்டி வருகிறது. இவ்விதமாகக் கணக்கற்ற உபாயங்களைச் சமய சந்தர்ப்பத்துக் கேற்ப சிருஷ்டித்துக் கொண்டு வரும் எனது கற்பனைத் திறனை நேயர்கள் மெச்ச வேண்டியதாகும்.

• • •

பேனும் ஈரும் தொல்லை கொடுப்பது முடியைச் சுத்தமாக வைத்துக் கொள்ள மாட்டாத காரணத்தால் தான் என்பதை விளக்கியாயிற்று.

போதுமான காற்றோட்டமில்லாத இடங்களில் வாசம்....இரவில் கிடந்து உறங்குவதும் அவ்விதமேதான். தலை வியர்க்கிறது. முடி சீவிக் கொள்ளத் தடவிய எண்ணெயும் வியர்வையும் சேர்ந்து, விஞ்ஞானத்துக்கும் விளங்காத ஒரு பொருளாக மாறி, இப் பொருள் முடிகளை யெல்லாம் ஒன்றாய்த் திரட்டிப் பழம் புளிபோல் அடையடையாய் ஜடையாக்கும். இதனால் தலையில் சொறி முதல் பொட்டு பொடுகுகள் என்று பல வித உபாதைகள் ஏற்படும். தொடர்ந்து முன்னேற்றம் பெற்று வரும் இந்தச் சீர்கேட்டின் திட்டத்தில் ஒரு நிலையில், உபபொருளாக விளைவதுதான் இந்த ஈரும் பேனும்.

ஒரு உதாரணம் சொன்னால் விஷயம் விளங்கி விடும். போதுமான வெளிச்சமும் காற்றோட்டமும் இல்லாத ஒரு மூலையில் குப்பையும் கூளமும் சேர்கின்றன. அல்லது நாமே சிறிது வைக்கோலைத் தெளித்து வைக்கிறோம். (அதுவும் வரகு வைக்கோலாகுமானால்..........! அயம் விசேஷ:) இதன்மேல் சிறிது ஜலத்தைத் தெளிக்கிறோம். (சாணங் கரைத்த ஜலமானால் மேலும் விசேஷம்) பிறகு அந்த அறையின் ஜன்னலை அடைத்துக் கதவை மூடிக் கொண்டு வருகிறோம். இரண்டு மூன்று நாட்கள் கழித்து அறையைத் திறந்து உள்ளே சென்று பார்ப்போமானால்......! செல், எறும்பு முதல் கட்டெறும்பு, கரப்பாம்பூச்சி, தவளை, எட்டுக்காலி, பல்லி, தேள் என்று பல தரப்பட்ட ஜீவராசிகள் கூடை கூடையாக அங்கு குடிபுகுந்திருக்கக் காணலாம். சுத்தமாக வைத்துக் கொள்ளாத முடி விஷயத்திலும் இப்படித்தான் ஏற்படுகிறது.

ஆமணக்கெண்ணெய் போல் கொழு கொழுப்பான எண்ணெய், மயக்கம்

போடும் தரத்தில் உள்ள மூக்கைத் துளைக்கும் வாசனை (?) இவை மேற்சொன்ன முடிவைப் பெற விசேஷ காரணங்களாக அமைவதுண்டு.

தலையிலுள்ள ஜிட்டு ஜிகிடுகள் தலையணைக்கு ஏறி அதற்கொரு புதிய நிறத்தைக் கொடுத்து, பஞ்சுத் தலையணையைக் களிமண் தலையணையாக மாற்றி, பிழிந்தால் எண்ணெய் சொட்டுமோ என்ற நிலைமையையும் ஒரு நாற்றத்தையும் உண்டாக்கி, மாளாத எறும்பும், தீராத மூட்டைப்பூச்சியும் நிரந்தர வாசம் புரியும் நிலைக்குக் கொண்டு வரும். இதனால் சுத்தமான முடிகளும் அழுக்குப் பெற வாய்ப்புண்டாகும். இப்படித் தலையிலிருந்து தலையணைக்கும், தலையணையிலிருந்து தலைக்குமாக மாறி மாறி ஓயாத ஒழியாத அழுக்குக்கு உறைவிடம், மாளாத பேனுக்கும், மடியாத ஈருக்கும் நாத்தங்கால் என்று முடியும்.

ஒழுங்காகவும், மேலோடும் இந்த அழகான முடியைச் சீவி, போதாக்குறைக்குப் பொன்னியம்மன் அருள் என்பது போல் கள்ள முடியையும் சேர்த்துப் பின்னி ஜடைபோட்டு 'டாப்பாக'த் தலையைப்போல் இரண்டு பங்கு, கொண்டை போட்டு பூவையும் ஒரு சுமை அதன் மேல் ஏற்ற.....!'

"ஒய்யாரக் கொண்டையும், தாழம் பூவும் (அதன் உள்ளே இருப்பது ஈரும், பேனும்" என்ற பழமொழிக்கு உதாரணமான) அலங்காரத்தைச் செய்தால் மட்டும் போதுமா ? தலையிலிருந்து பேன்களெல்லாம் ஜாரிஜாரியாய்க் கழுத்துப் படிவழியே இறங்கிவர நேரிடுமே!

"இது பேனுண்ணிப் பெண்" என்று குறிப்பிட்ட குழந்தையை 'டீச்சர்' 'ஜோனலில்' தனி பெஞ்சியில் உட்காரச் சொல்வாள். குழந்தையின் பிஞ்சு மனசு என்ன பாடுபடும் !

வீட்டில் வந்தாலோ—இந்தக் குழந்தையின் முடியைச் சீவிய சீப்பினால் மற்றையக் குழந்தைகளின் முடிகளைச் சீவக்கூடாதென்று "வேறு சீப்பு கொண்டுவா" என்பார். அந்தப் பேனுண்ணிக் குழந்தை என்ன செய்யும் ? "எங்கேயோ பள்ளிக்கூடத்திலிருந்து பேனைத் தொத்திக் கொண்டு வந்து நிற்கிறது இந்த ஜடம்" என்பாள் தாயார். உண்மை வேறுவிதம் என்பது தாயாருக்குத் தெரியுமோ, தெரியாதோ...யார் கண்டது?

இதெல்லாம் ஒருபுறம் இப்படியிருக்க, 'பேனுண்ணி'க் குழந்தையிடம் வேறு சில விசேஷங்களும் ஏற்படுகின்றன. நன்றாய்ப் பசிக்கும்; குழந்தை நன்றாகச் சாப்பிடவுஞ் செய்யும். ஆனால் உடல் வளர்ச்சி பெறாது: நோஞ்சானாகவே இருக்கும்.

தலை மட்டும் தனியாகப் பருத்து விட்டது போலவும், கழுத்து மிகவும் மெலிந்து விட்டது போலவும் தோன்றும். விலாவெலும்பெல்லாம் எண்ணி விடலாம். அப்படித் தெரியும். வயிறும் கன்னங்களும் சுரைக்காய் வடிவத்தில் பருத்திருக்கும். வாயில் அளவுக்கு மீறிய பற்கள். குழந்தை கலகலப்பாக இல்லாமல் சிணுங்கிச் சிணுங்கி ஒதுங்கி நிற்கும்.

பள்ளிப் பிள்ளைகளுக்குப் பகற் போஜனம் கொடுத்துதவ......இத்தனை ரூபாய் பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்டுள்ளது என்று படிக்கிறோம். நெல்லுக்குஇறைத்த நீர்......என்ற வகையில்தான் பணம் செலவாகும். இதைத் தவிர்க்கமுடியாது. வாய்க்கால் வழியோடும்போது—நண்டு வளை, எலிப்பாழிகளில் நிரம்பாமல் ஓரளவு பார்த்துக் கொள்ளலாம். ஆனால் புல்லுக்குப் பாய்வதைத் தவிர்க்க முடியுமா ? போகட்டும். பால்பௌடர்; அதை வெந்நீரில் கரைத்துப் பள்ளிப் பிள்ளைகளுக்குக் கொடுக்கவேணும் என்ற ஒரு அன்புத் திருப்பணி. இதில் ஈடுபடுபவர்களின் புகைப்படங்கள் பத்திரிகையில் வருகிறது. வெந்நீரில் கரைக்கும்போது, கரைத்ததை ஆற்றும்போது ஆற்றுவதைக் குழந்தையின் குவளையில் ஊற்றும்போது என்றெல்லாம் புகைப் படங்கள். ஆச்சரியம் என்ன தெரியுமா? பௌடர் கட்டி கட்டாமல் கரைய வேணுமே என்ற கவலை எப்படியோ போகட்டும் 'கரைத்துக் கொண்டிருக்கும் நான் புகைப் படத்தில் விழுகிறேனா ?' என்ற கவலையோடு காமிராவையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருக்கும் நபரையும், கரைத்த பாலைக் குழந்தையின் குவளையில் ஊற்றும்போதும் இப்படியே காமிராவை முறைப்பதால் பாதிப் பால் குழந்தையின் குவளையிலும், பாதி வெளியிலுமாகச் சிந்திப்போகும் கண்ணராவியையும் பார்க்கும்போது, இந்தப் புகைப் படம் செய்தியா, அல்லது விளம்பரமா? விளம்பரமானால் யாருக்கு? பாலை வழங்கும் நிலையத்துக்கா...அல்லது பாத்திரத்தில் ஊற்றும்......க்கா? என்ற சந்தேகம் எழும். இவ்விதம் தொண்டு செய்வோர்—வாரத்தில் ஒருநாளாவது மேற்சொன்ன வகையைச் சேர்ந்த பேனுண்ணிக்கு ஏதாவது செய்யக் கூடாதா ? தண்ணீரில் முழுகிக் குளித்தது போல் எண்ணெய் தேய்த்துச் சிறிது கழிந்ததும் சீப்பினால் முடியைச்சீவினால் கூரையிலிருந்து மழை ஜலம் ஒழுகுவது போல் முடிகள் வழியாக எண்ணெய் வழியும். அத்துடன் பேனும் குவியல் குவியலாகத் திரண்டு வந்து விழும்.




அரவிந்த் மில்ஸ் லிட்., அஹமதாபாத்

*Registered User of the Trade Mark 'SANFORIZED'*

அமாவாசை கோபத்தில் பரபரக்க நடந்தான். படித்தவர்கள் சொல்லும் கான்சரும், டி. பி.யும், அல்சரும் புரிந்தும் புரியாத வகையில் மனக்கண் முன்னால் தோன்றின.

மாலையில் டாக்டரிடம் சென்றான். மனத் தைரியத்தைக் குறைத்து விட்ட சோனியின் மேல் கோபம் வந்தாலும், சமயத்தில் கூறினானே என்ற நன்றியும் பிறந்தது. 'அவன் சொல்லியிருக்காவிட்டால் நான் பயந்திருக்க மாட்டேன்' என்று அவன் நினைத்தான்.



# கேள்வியின் எதிரொலி

பி. வி. ஆர்

உள்ளே பிறந்துவிட்ட வியாதியின் பாரம் வளர வளர உடம்பின் பாரம் குறைந்து வருவதை அவன் உணர்ந்தான். கடந்த ஆறு மாத காலமாக உடம்பு உடம்பாக இல்லை என்று உள் உணர்வு கூற, அவன் எல்லாம் மனப் பிராந்தி என்று தன்னைத்தானே தேற்றிக் கொள்ள முயன்றான். அவனுக்குச் சோற்றிலும் தூக்கத்திலும் என்ன குறைவு? சட்டியில் சமைத்த சோற்றைப் பழசாக்கி, அதிகாலையில் தாயார் போட்ட வயிறார உண்டு விட்டு வேலைக்குப் போய்க்கொண்டிருந்தான்.

பகல் பன்னிரண்டு மணிக்கு அவளே கொண்டு வரும் குழம்புச் சாதமும் கீரையும் தென்பை ஊட்டுகின்றன. மூன்று அல்லது நான்கு மணிக்குச் சாப்பிடும் மசால் வடையும் டீயும் உடம்பைக் கெடுக்கலாம். ஆனால் இப்படி இளைக்கும் படியாகவா கெடுக்கும்?

தன்னைத் தானே தேற்றிக் கொள்ளுவதில் அவன் ஏதோ வெற்றி கண்டாலும் எப்போதோ பார்த்த சோனி கேட்ட கேள்வி வெற்றியைக் குழி தோண்டிப் புதைத்து விட்டது.

"ஏண்டா! அமாசை! ஆள் துரும்பு கணக்கா போயிட்டியே. புதுசு புதுசா சீக்கெல்லாம் கௌம்புதே! எதுனாச்சியும் கண்டுடிச்சா உனக்கு?"

"ஏண்டா, என்னைப் பார்த்தா அப்படிக் கேக்கறே?"

"ஆமாண்டா ஆமாம். அமாசையைப் பார்த்துத்தான் கேக்கறேன். புளிய மரமா இருந்தியே. இப்போ அவுத்திக் கீரை வாடின மாதிரி..."

"சரித்தான் போடா, சோம்பேறி!"

"எங்கே வேலை செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார் டாக்டர்.

"துறைமுகத்திலே!"

"பளு சுமக்கிற வேலையா?"

"ஆமாங்க."

"கொஞ்ச நாளைக்கு அந்த வேலையை விட்டுவிடு."

"பொழைப்பு?"

"அட கொஞ்ச நாளைக்கு வேறு வேலை பாரு ஐயா! பளு தூக்காத வேலையா பட்டணத்திலே இல்லே?"

அமாவாசை யோசித்தான். 'ஏழெட்டு வருஷங்கள் தமாஷுக்கா படிச்சிட்டிருப்பார் டாக்டர்? அவருக்குத் தெரியாமலா சொல்லுவார்.'

"சரிங்க."

"தெனம் தெனம் பழங்கள் சாப்பிடு."

"என்ன பழமுங்க? பச்சைப் பழமுங்களா?" என்று கேட்டான்.

"பச்சை வாழப் பழத்திலே என்ன இருக்கு? புழுதான் இருக்கு. ஒரு சாத்துக்குடியும் முடிஞ்சா ஒரு ஆப்பிள் பழமும் தின்ன வேணும்!"

"நான் ஏழைங்க. பணக்காரங்க துன்னறதை நான் எப்படிச் சாமி துன்ன முடியும்?" என்றான் கவலையுடன்.

"இதைப் பாரு. நான் தெரியாமல் சொல்லல்லே. உன் ஜீரண சக்தி ரொம்பக் குறைஞ்சிருக்கு. இப்படியே போனா என்ன ஆகும்னு என் வாயாலே சொல்ல எனக்கு மனசு வரல்லே. ஒரு நாளைக்கு எட்டணா செலவு செய். ஒரு மாதம் பொறுத்து வா, சொல்லுகிறேன்."

துறைமுகத்து வேலையில் தினக்கூலி இரண்டரை ரூபாய். அதிலிருந்து வந்தால் எட்டணா பழம் அவனுக்குத் தண்ணீர் பட்டபாடு. ஆனால் டாக்டர் கண்டிப்பாக அது கூடாது என்று சொல்லி விட்டார். வேலையை விடவேண்டும். எட்டணாவுக்குப் பழமும் தின்றாக வேணும். அவன் என்ன சீமானா? உடம்பை அப்படிப் பழத்தைத் தின்று காப்பாற்றி என்ன காணப் போகிறான்?

ஆனால் டாக்டரின் எச்சரிக்கை, அவனை அச்சுறுத்தி உள்ளத்தில் எழுந்த வேதாந்த வெறுப்பை உடனேயே அகற்றித் தள்ளி விட்டது.

தாயாரிடம் சொல்ல அவனுக்கு விருப்பம் இல்லை. துறைமுக அதிகாரியிடம் மட்டும் விஷயத்தைச் சொல்லி வேறு இலேசான வேலை தரும்படி கெஞ்சிக் கேட்டான்.

"உட்கார்ந்து தூங்குகிறது தான் வேறு வேலை. அதை வேணும்னா செய். கூலி மட்டும்தான் இல்லே!"

எகத்தாளமாகப் பேசுபவரிடம் வீண் வாதம் செய்ய மனத்தில் தெம்பு இல்லை. அமாவாசை கால் கடுதாசி இல்லாமலே அங்கிருந்து வெளியேறி விட்டான்.

* * *

ராயப்பேட்டை பழக் கடையில் கையிலிருந்த சில்லறையில் இரண்டு நாட்களுக்கு ஆப்பிளையும் சாத்துக்குடியையும் வாங்கிச் சாப்பிட்டான். பழக்கமில்லாத நாக்குக்கு அவை ஒட்டவில்லை.

மூன்றும் நாள்.

கடைக்காரர் பப்பாளிப் பழம் போல் இருந்தார்.

"சாமி! நேத்து மாதிரிக் கொடுங்க" என்றான் அமாவாசை.

அவர் அமாவாசையிடம் பழங்களைக் கொடுத்துக் கொண்டே கடையிலே இருந்த நண்பர் ஒருவரிடம், "அந்தப் பயலை ரெண்டு நாட்களாகக் காணோம். முப்பது ரூபாய் பணத்தையும் அடிச்சிக்கிட்டு எங்கேயோ போயிட்டான்" என்று சொன்னார்.

கடைக்கு முன்னாலே நின்றுகொண்டே ஆப்பிளை 'நறுக்கு நறுக்'கென்று கடித்துத் தின்ற அமாவாசையைப் பார்த்த கடைக்காரனுக்கு ஒன்றும் புரியவில்லை. அநாகரிகமாகப் பட்டது. ஆனால் வாய் விட்டு ஒன்றும் கேட்கவும் இல்லை.

நண்பர் போய் விட்டார். சாத்துக்குடியின் தோலை நகத்தால் உரிக்கக் கஷ்டப்பட்ட அமாவாசையிடம், 'இப்படிக் கொண்டா' என்றுகடைக்காரர்வாங்கிக் கத்தியால் கீறு போட்டுக் கொடுத்தார்.

அமாவாசைக்கு அந்தக் கணம் திடீரென்று ஒரு எண்ணம் உதயமாகியது. நண்பரிடம் கடைக்காரர் பேசிக் கொண்டிருந்ததை அவன் காது கொடுத்துக் கேட்டிரா விட்டாலும், விஷயம் இலேசாகப் புரிந்திருந்தது.

சாத்துக்குடியின் கீறல்களில் உரித்துக் கொண்டே, "சாமி! உங்க கடையிலே எதினாச்சியும் வேலை இருக்குமா?" என்று மெதுவாகக் கேட்டான்.

"என்ன வேலை செய்துக்கிட்டிருந்தே இத்தனை நாளா?"

"துறைமுகக் கிடங்கிலே பாரம் தூக்கிக்கிட்டிருந்தேன், யசமான்!"

"ஏன் வுட்டுட்டே?"

"டாக்டர் கூடாதுன்னுட்டாருங்க. சோறு சரிக்குதில்லேயாம். ஒரு மாசத்துக்குத் தினம் தினம் பழம் தின்னுட்டு வா, லேசான வேலை எதினாச்சியும் செய்து வரணும்னு சொன்னாரு..."

கடைக்காரர் யோசித்தார்.

"சின்னக் கை வண்டி இளுப்பியா? இரண்டு நாளுக்கு ஒரு வாட்டி எழும்பூர், சென்டிரல் ஸ்டேஷன்களிலிருந்து பழம் இழுத்து வரணும். அப்புறம் கடையிலே எல்லாத்தியும் அடுக்கி வைக்கணும்."

"சரிங்க, எசமான்!"

"என்ன கூலி கேட்கிறே?"

"இஷ்டமானதைக் கொடுங்க."

"நாளுக்கு ஒண்ணே கால் ரூபா கொடுப்பேன். வெள்ளிக்கு வெள்ளி ஒரு ரூபாய் அதிகம் கிடைக்கும்."

"சரிங்க" என்றான் அமாவாசை உடனேயே. அதற்குள் கடைக்காரர் எண்ணத்தை மாற்றி விட்டால்?...

"ஒழுங்கா இருக்கணும். நம்பிக்கையா இருந்தா, நான் இல்லாத சமயங்களிலே கடையைக்கூட பார்த்துக்கும்படியாக இருக்கும்" என்றார்.

"நல்லதுங்க!"

* * *

அமாவாசைக்கு அதிர்ஷ்டம் அடிக்க ஆரம்பித்தது. ஓட்டல்களில் சாப்பிடும்போதெல்லாம், ஓட்டல்களையும் அவற்றில் வேலை செய்யும் ஆட்களையும் கண்டு பொறாமைப்பட்டிருக்கிறான். எதை வேணுமானாலும் எப்போது வேணுமானாலும், காசு கொடுக்காமல் சாப்பிடலாமே? அது போல் அவன் பழக்கடையில் வேலை செய்தால்?...

'பச்சை வாழைப் பழத்தில்தான் புழு இருக்காமே. அதைத் தவிர எல்லாம் சாப்பிடலாம். ஆனால் டாக்டர் ஆப்பிளையும் சாத்துக்குடியையும் தான் சொன்னார். திராட்சையும்மாதுளையும் உடம்பை இன்னும் கெடுத்திடுமோ என்னவோ! தனக்கு ஏன் அதைப் பற்றிக் கவலை? ஒரு மாசத்துக்குப் பிறகு டாக்டர் என்ன சொல்லப் போகிறாரோ?'














அன்றைக்கே, வேலையில் சேர்ந்த அன்றே, உடம்பு சரியாகி விட்டது போன்ற பிரமை உதித்தது அவனுடைய உள்ளத்தில்.

அன்று மாலையில் கடைக்காரர் ஒன்றே கால் ரூபாயை எண்ணிக் கொடுத்து விட்டு, நன்றாகப் பழுத்த பச்சைப் பழங்கள் இரண்டையும் அவன் பக்கம் நீட்டினார்.

'புழு இருக்கும்' என்று தன்னுள் முணுமுணுத்துக் கொண்டே, "சாமி! டாக்டர் சொன்னபடி தின்னப் பழம் தாரீங்களா? துட்டை எடுத்துக்குங்க" என்று சொன்னான் அமாசை.

கடைக்காரர் யோசித்தார். நேற்று வரை அவன் வாடிக்கைக்காரன். இன்று? அவரிடம் வேலை பார்க்கும் ஆள்.

பெரிய ஆப்பிள் ஒன்றும், நல்ல சாத்துக்குடியுமாக அவனிடம் கொடுத்தார். அவன் விழித்துக் கொண்டே ஒன்பது அணாவை நீட்டினான்.

"எட்டணா கொடு, போதும்"

* * *

நாட்கள் வேகமாகச் சென்றன.

தன் உடம்பு தேறி வருவதை அவனே உணர்ந்தான். வேலையில் சேர்ந்தபோது எதை வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் ஓட்டல் பையன்களைப் போல் சாப்பிடக் கிடைக்கும் என்று நினைத்த நினைப்பு மறைந்தது. கூலியுடன் இரண்டு

வாழைப்பழம் கிடைக்கும். ஆப்பிளையும் ஆரஞ்சையும் எந்த முதலாளி கொடுப்பார்?

குறித்த நாளில் டாக்டர் வீட்டுக்குச் சென்றான் அவன்.

"ஐயா, வரச் சொன்னீங்களே!"

"எதுக்கு?" ஆயிரமாயிரம் நோயாளிகளில் யாரை என்று அவர் நினைவில் வைத்துக் கொள்ள முடியும்?

அமாவாசை டாக்டர் முன்பு கூறியதை ஞாபகப்படுத்தினான்.

உடனேயே டாக்டர் கண் முன் பழைய அமாவாசை தோன்றினான்.

"அன்னிக்கு எடை பார்த்தமே, எத்தனை இருந்திச்சு?"

"நாத்தி ரெண்டு எசமான்."

"இன்னிக்குப் பாரு."

பார்த்து விட்டு வந்த அவன், "நாத்தியேழுங்க" என்றான்.

"பலே! ஒரு மாசத்திலே அஞ்சு பவுண்டு ஏறிடுத்தே! நான் சொன்னபடிதானே செய்துக்கிட்டிருக்கே?"

"ஆமாமுங்க."

"அதுதான் குணம் காணுது. அடுத்த மாசம் வந்து பாரு."

இரண்டாம் மாசம் சென்றது.

மூன்றாவது மாசமும் பறந்துவிட்டது.

எடை ஏறியது: மனத்தில் தெம்பும் ஏறியது. கூலி ஒன்றேகால் ரூபாயிலிருந்து ஒன்றரையாகி ஒரு மாதமாயிற்று.

பழத்துக்கு எட்டணா பிடித்துக்கொண்டும் பாக்கிக் கூலி ஒரு ரூபாயைக் கடைக்காரர் நீட்டிய போது, அமாவாசை, "நாளையிலிருந்து பழம் வேணும்னு டாக்டர் சொல்லிட்டாரு" என்றான்.

கடைக்காரர் உடனே எட்டணாவையும் கொடுத்து, "இன்னிக்கு மட்டும் என் கணக்கிலே சாப்பிடு!" என்றார்.

* * *

மறு நாள்.

இரண்டாம் நாள்.

மூன்றும் நாள்.....

முதலாளி அவன் மீது வைத்து விட்ட நம்பிக்கையை அமாவாசை தனக்கு லாபமாக்கிக் கொண்டான்.

நூற்றுக்கணக்கில் சாத்துக்குடியும் ஆப்பிளும் கூடை கூடையாகப் பெட்டி பெட்டியாக இருக்கையில், நாள் முழுவதும் கடையில் உழைக்கும் அவன் காசு கொடுத்தா தின்ன வேணும்?

ஒரு மாதம் கழிந்தது.

சென்ற மாதம் நூற்றுப் பதினைலாக இருந்த உடம்பின் கனம் நூற்றுப் பன்னிரண்டாக மாறி விட்டது.

"ஏனுங்க குறைஞ்சிடுத்து?"

"பயப்படாதே! எல்லாம் சரியாகப் போய் விடும்."

மனத்தில் ஏற்கனவே இனம் அறியாத கவலை. இப்போது உடம்பு மீண்டும் இளைக்கிறதோ என்ற பயம்.

ஒரு ஆப்பிள் ஒரு சாத்துக்குடியாக இருந்தது. ஒரு ஆப்பிள் இரண்டு சாத்துக்குடியாக மாறியது. மனத்தில் உடம்பைப் பற்றிய கவலையும் பயமும் அதிகரித்த போது இரண்டு ஆப்பிள்கள் கூட உள்ளே சென்றன. நல்ல வேளை, இதுவரையில் முதலாளி கண்டு பிடிக்கவில்லை. ஆனால் உடம்பு மட்டும் தேறுவதாகத் தோன்றவில்லை.

* * *

டாக்டரை மறுபடியும் சந்தித்தான்.

"இன்னும் ஒரு மாசம் சாப்பிட்டு வா, பார்க்கலாம்."

"நாத்தியேழுக்கு இறங்கிடிச்சே!"

"நான் சொன்னபடி கேளு."

அவன் கேட்டான். சொன்னபடி கேட்டான். முதலாளியின் நஷ்டத்தைப் பற்றிச் சிந்திக்க அவனுடைய உடம்பின் நிலை அனுமதித்தால்தானே?

முதலாளிக்கு மூன்று மாதங்களாக அவனால் லாபத்தில் நஷ்டம்.

நான்காம் மாதம்.

'இத்தனை பழம் தின்னும் ஏன் பயவில்லை? சீமானுல்கூட இப்படித் தின்ன முடியாதே? உடம்பிலே வேறு எதிலுச்சியும் கோளாறு? இல்லே மனசிலே தான் அப்படித் தோணுதா?'

அவன் மாடிப்படி ஏறி, டாக்டர் அறையை அடைந்தான். ஏற்கெனவே பலர் குழுமியிருக்கவே, ஒரு மூலையில் போய் நின்றான். பலரிடம் பல கேள்விகள். டாக்டர் ஒருவனிடம், "என்னடா, ஓட்டலிலேதானே நீ வேலை பார்க்கிறே? ஏதாவது திருடித் தின்னிருப்பே! ஏன்டா! திருடித்தின்னா அது மனசிலேயும் வவுத்திலேயும் ஒட்டுமா?" என்றார் சிரித்துக் கொண்டே.

தான் செய்து வருவதை அவர் அறிந்துதான், அம்மாதிரிக் கேள்வியைக் கேட்டு விட்டாரா? திருடித் தின்றால் உடம்பிலே ஜரிக்காதா? மூன்று மாதங்களாக அவன் முதலாளியை ஏமாற்றித் தின்றானே, அது எப்படி உடம்பிலே ஒட்டும்? அந்தக்கணமே, இனம் அறியாத பயம் ஒன்று மனத்தை அரித்து வந்ததும் அவனுக்கு நினைவு வந்தது. "உடம்பு வலி மாதிரி, மனசு எங்கேயோ வலிக்குதே. இதுதான் காரணமா?"

"திருடித் தின்னா மனசிலேயும் வவுத்திலேயும் ஒட்டுமா?" - டாக்டருடைய இந்தக் கேள்வி அவன் மனத்தின் பரப்பெல்லாம் ஓயாமல் எதிரொலித்தது.

அமாவாசை டாக்டரிடம் ஒன்றும் கேட்காமலே கடைக்குத் திரும்பினான்!

# குடும்ப பாரம்

சீராமன்



## காட்சி 1

கிருஷ்ணவேணி: என்ன? உங்களைத் தானே!

முருகேசன்: என்ன?

கிருஷ்ணா: இன்று மத்தியானம் காப்பிக்குச் சர்க்கரை இல்லை.

முரு: பேஷாகப் போயிற்று! சர்க்கரை இல்லா விட்டால் என்ன? எனக்கு அக்கறையில்லை. என் கட்டிச் சர்க்கரையாச்சே நீ? உன்னைப் பார்த்துக் கொண்டே — இல்லை, இல்லை, கண்ணைக் கெட்டியாக மூடிக்கொண்டே, குடித்து விடுகிறேன்!

கிருஷ்ணா: போதுமே, ஹாஸ்யம்! இத்தனை குழந்தைகளுக்குத் தந்தையாகியும் உங்கள் கேலிப் பேச்சுக்கு ஒரு குறையும் இல்லை. இருக்கிற இருப்பைச் சொன்னால்.....

முரு: ஆமாம். இரண்டு வீசை வாங்கி இன்னும் நாலு நாட்கள்கூட ஆகவில்லையே! அதற்குள் எப்படித் தீர்ந்து போய் விட்டது?

கிருஷ்ணா: நான் சிக்கனமாய்த்தான் உபயோகிக்கிறேன். வீட்டிலுள்ள நபர்களை எண்ணிப் பார்க்க வேண்டாமா? நாளைக் காலை விறகு வந்தால் தான் அடுப்புப் புகையும்.

முரு: பொழுது விடிந்தால், பொழுது போனால் இந்த இல்லைப் பாட்டுத்தானா?

கிருஷ்ணா: உள்ளதைச் சொன்னால் எதற்காக இப்படி எரிந்து விழுகிறீர்கள்? உங்களோடு மல்லுக்கு நிற்க என்னால் ஆகாது.

முரு: வேண்டாமே!

கிருஷ்: டாக்டர் 'பில்'லுக்குப் பணம் கொடுக்க வேண்டுமே! அவர் ஆள் அனுப்பி விட்டாரே!

முரு (ஆத்திரத்துடன்): என்ன? டாக்டர் 'பில்'லுக்குப் பத்து ரூபாய் அன்று கொடுத்தேனே! அதை என்ன செய்தாய்?

கிருஷ்: ஆமாம், கொடுத்தீர்கள். யார் இல்லை என்று சொன்னார்கள்? அழகுக்குப் பாவாடை சட்டை கிழிந்துவிட்டது. ஆகவே அந்தப் பணத்தைப் போட்டுத் துணி வாங்கி விட்டேன்.

முரு: அழகுதான், போ! இம்மாதிரித் தொல்லைகள் இனிஎன்னால்படமுடியாது.

கிருஷ்: உங்களை யார் படச் சொன்னார்கள்? நான் சொல்கிற யோசனையைக் கேளுங்கள். மாதம் சம்பளம் வாங்கினவுடன், என்னிடம் குடும்பச் செலவுக்காக, இருநூறு ரூபாய் கொடுத்து விடுங்கள். இடையில் உங்களைத் தொந்தரவு செய்கிறேனா, பாருங்கள். அவ்வப்போது எனக்கும் உங்களைப் பிச்சை கேட்பது போலச் செலவுக்குப் பணம் கேட்பது கஷ்டமாகத்தான் இருக்கிறது. அடுத்த வீட்டு அம்புஜத்தின் கணவர் சம்பளம் வாங்கினதும் அம்புஜத்தினிடம் நூற்றைம்பதுரூபாய் கொடுத்துவிடுகிறாராம்.

முரு: அம்புஜத்துக்கு இருக்கிற சமர்த்து உனக்கு ஏது? உன்னிடம் கொடுத்தால் ஒரே நாளில் அத்தனை பணத்தையும் சூறையாடி விட்டு ஆலாய்ப் பறப்பாய்? ஆள் பிராணனை அடியோடு வாங்கி விடுவாய்!

கிரு: பெரிதாகக் குறை சொல்ல வந்து விட்டீர்களே, ஒரு மாதம் கொடுத்துத்தான் பாருங்களேன்?

## காட்சி 2

முருகேசன் (தனக்குள்): இப்போது எனக்கு நிம்மதியாகத்தான் இருக்கிறது. ஏதோ மாதம் முதல் தேதியன்று பணத்தை அவளிடம் கொடுத்து விடுகிறேன். அவள் பார்த்துக் கொள்கிறாள். இடையில் முன்பு போல் என்னை நச்சரிப்பதில்லை. குடும்பப் பொறுப்பை அவள் கவனித்துக் கொள்வது எனக்கு எவ்வளவோ சௌகரியமாகத்தான் இருக்கிறது. என்ன இருந்தாலும் என் கிருஷ்ணவேணி கெட்டிக்காரிதான்!

(தந்தை சரவணன் இருமுகிறார்)

முரு (அப்பாவிடம் விரைந்து): அப்பா! ஏன் இருமுகிறீர்கள்? உங்களுக்கு உடம்பு சரியில்லையா?

சரவணன்: ஒன்றுமில்லையடா, முருகேசா! வயசாகி விட்டதல்லவா?

மீனாட்சியம்மாள் (சுற்றிலும் ஒருதரம் பார்த்து விட்டு): உன் அப்பாவுக்கு ஒரு வாரமாய் இரவில் பால் கிடையாது.

முரு (ஆத்திரத்துடன்): என்ன! அப்பாவுக்குப் பால் கிடையாதா?

மீனு: கூச்சல் போடாதே! இப்போது குடும்பச் செலவு அதிகமாகி விட்டதாம். நீ கொடுக்கும் ரூபாயைக் கொண்டு மாதம் முழுதும் ஓட்டியாக வேண்டுமாம். அதனால் பசும் பாலைக் குறைத்தாகி விட்டதாம்!

(அழகு அங்கு வருகிறாள்)

அழகு: ஆமாம், அப்பா! எனக்கும் கூடப் பால் தபால்தான் இப்போது.

(முருகேசன் ஆத்திரமடைகிறான்!)

முரு: அப்படியா! ஏய், கிருஷ்ணவேணி!

மீனு: முருகேசா! நீ அவளைக் கோபிக்காதே! ஏதோ நீ கொடுக்கும் பணத்தைக் கொண்டு தானே மாதம் முழுதும் அவள் ஓட்ட வேண்டியிருக்கிறது!

முரு: அதற்காக வீட்டிலிருப்பவர்களை வெளியே ஓட்ட வேண்டுமா என்ன?

சர: முருகேசா! எனக்கு ஏதோ சொற்பப் பென்ஷன்தான் கிடைக்கிறது. அதைக்கொண்டு நானும் உன் தாயாரும் எங்களுக்குத் தேவையானவற்றை வாங்கிக் கொள்கிறோம். கிருஷ்ணவேணி எப்படியாவது செட்டாய்க் குடித்தனம் செய்தால் போதும்!

## காட்சி 3

முருகேசன்: கமலா! அம்மா எங்கே?

கமலா: கடைக்குப் போயிருக்கிறாள்.

முரு: என்ன வாங்குவதற்கு?

கமலா: அடுத்த வீட்டு அம்புஜம்மாள் ஏதோ வாங்குவதற்கு அம்மாவை அழைத்துக் கொண்டு போனாள்.

ராஜசேகரன்: அப்பா! ஒரு பெட்டிஷன்!

முரு: என்னடா பெட்டிஷன்?

ராஜ: முன்பெல்லாம் எனக்குத் தேவையானவைகளை நீ வாங்கித் தந்து கொண்டிருந்தாய்; நான் கவலையில்லாமல் இருந்தேன். இப்போதெல்லாம் அம்மாவுக்கு அதிகாரம் வழங்கி விட்டாய். தேளுக்கு அதிகாரம் வழங்கினால் விநாடிக்கு விநாடி கொட்டுமாம். அது போல் அம்மா 'நறுக் நறுக்'கென்று குட்டுகிறாள். அம்மாவிடமிருந்து ஒரு நயா பைசா பெயர மாட்டேன் என்கிறது.

கமலா: அம்மாவிடமிருந்து நயா பைசா பெயராவிட்டால் என்ன? உன் மண்டைதான் பெயர்ந்து போகிறதே!

ராஜ: பெரிய அத்தைக் கிழவி மாதிரி பேச வந்துட்டியே என்னைப் பரிகாசம் கிரிகாசம் பண்ணினே, உழக்கு ரத்தம் வரும்படியாகக் குட்டி விடுவேன்.

முரு: டேய், என்னடா அவளைப் போய் மிரட்டுகிறாய்?

ராஜ: என்ன அப்பா கோவிச்சுக்கிறியே, உன்னைக் கேட்டாலும், 'மொத்தமாய் அம்மாவிடம் கொடுத்து விட்டேன், என்னைத் தொந்தரவு செய்யாதே' என்று கூறி விடுகிறாய். ஏன் அப்பா! எத்தனை நாட்களாக நீ இப்படி அம்மாவுக்குப் பயப்பட ஆரம்பித்தாய்?

முரு: போடா, போ! இதுதான் பயப்படுகிறதோ! குடும்பத்தைச் சிக்கனமாக நடத்துவதற்காகச் செய்த வழி இது!

ராஜ: அதற்காக இப்படி வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டிப் பணத்தை மிச்சப்படுத்தி என்ன அப்பா செய்யப் போகிறீர்கள்?

கமலா: வீடு கட்டப் போகிறார். அம்மா கூட அன்று அடுத்த வீட்டு அம்புஜம் மாமியிடம் சொல்லிண்டிருந்தாள்.

ராஜ: அப்படியானால் அம்மாவும் அப்பாவும் சேர்ந்து போட்டிருக்கும் திட்டமா இது? இனிமேல் கருமித்தனத்துக்கு இருவரும் சிகரமாகவே விளங்குவார்கள், பக்கத்து ஊர் சம்பந்தம் தம்பதிகள் மாதிரி.

கமலா: அதென்ன கதை அது?

ராஜ: அதுவா? சம்பந்தம் கருமியென்றால் அவன் மனைவி பங்கஜம் ஒரு படி மேல். எப்படியோ மனம் வந்து புது வீடு கட்டிப் பாத்திரம் பண்டங்களும் புதிதாக வாங்கிப் புதிதாகக் குடித்தனம் நடத்தினார்கள். ஒரு நாள் இரவு எட்டு மணிக்கு மேல் சம்பந்தம் ஏதோ அவசர காரியமாக வெளியே போகவேண்டியிருந்தது. காலில் புதுச் செருப்பை மாட்டிக் கொண்டு புறப்பட்டான். கொஞ்ச தூரம் சென்ற பிறகு தன் அறை மின்சார விளக்கை அணைத்தோமோ இல்லையோ என்ற சந்தேகம் அவனுக்கு வந்து விட்டது. உடனே வீட்டுக்குத் திரும்பி வந்தான். வாசலில் நின்று மனைவியைக் கூப்பிட்டான். கதவைத் திறக்க வந்தவளிடம், 'கதவைத் திறக்காதே. கீல் தேய்ந்து விடப் போகிறது. என் அறை விளக்கை அணைத்துவிட்டேனா என்பதை மட்டும் பார்த்துச் சொல்' என்றான். 'நன்றாயிருக்கிறது! நான் என்ன அவ்வளவு அசடா, கதவைத் திறக்க? நீங்கள் அந்தண்டை போன கையோடு விளக்கையும் அணைத்து விட்டேனே! இதற்காக இப்படி ஒருவர் புதுச் செருப்பு தேயத் திரும்பி வருவார்களோ?' என்றாள். 'சே! என்னைத் தவறாக எடை போட்டு

விட்டாயே! செருப்புத் தேய நான் நடந்து வருவேனா? செருப்பைக் கழற்றிக் கையில் எடுத்துக் கொண்டல்லவா வந்திருக்கிறேன்!' என்றான் சம்பந்தம்!

**கமலா** (கைகொட்டிச் சிரித்து): பிரமாதமான கதை! அம்மாவும் அப்பாவும் அப்படித்தான் ஆகிவிடப் போகிறார்கள். கல்லூரியில் உல்லாசப்பிரயாணம் போகிறார்கள். அதற்கு முப்பது ரூபாய் வேண்டும் என்று நீ அம்மாவைக் கேட்டாயே! கொடுத்தாளா? கையை விரித்து விட்டாள் அல்லவா?

**ராஜு**: அதைச் சொல்ல வந்து விட்டாயே! டிபனுக்கு ஏதாவது பணம் கேட்டாலும் இப்பொழுது கிடைப்பதில்லை. சோற்று மூட்டை கட்டித் தருகிறாள். மற்ற மாணாக்கர்கள் என்னைப் பரிகாசம் செய்கிறார்கள்.

**கமலா**: ஏன் தரவில்லை, தெரியுமா?

**ராஜு**: எனக்கு என்ன தெரியும்?

**முரு**: உனக்குத் தெரிந்தால் நீ தான் சொல்லேன், கமலா!

**கமலா**: ஐயோ! நான் சொல்ல மாட்டேன். எனக்குப் பயமாக இருக்கிறது.

**ராஜு**: அப்படியானால் நான் சொல்லி விட்டுமா?

**கமலா** (அண்ணன் வாயைப் பொத்தியபடியே): சொல்லாதே, அண்ணா! அம்மா நம்மைச் சும்மா விடமாட்டாள்.

**முரு** (துடிப்புடன்): சொல்லுங்கள், சீக்கிரம்! நான் உங்களைக் காட்டிக் கொடுக்க மாட்டேன்.

**கமலா**: அப்பா! அம்மாவின் பெட்டியில் நிறைய ரூபாய் நோட்டுகள் வைத்திருக்கிறாள். நான் அன்றொருநாள் அவள் அதை எண்ணுவதைப் பார்த்து விட்டேன். என்னைக் கண்டு சட்டென்று பெட்டியை அவள் மூடி விட்டாள். என்னைக் காண்பித்துக் கொடுத்து விடாதே. என் முதுகுத்தோலை உரித்து விடுவாள்!

**ராஜசேகரன்**: அப்பா! அம்மா வருவதற்குள் அவள் பெட்டியைத் திறந்து பார். நீ மாதா மாதம் கொடுக்கும் பணத்திலிருந்து பெரும் பகுதியை மிச்சப்படுத்தி இரகசியமாய் வைத்திருக்கிறாள் என்று தெரிகிறது. எங்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து தராமல், தான் சேர்த்து வைத்துக் கொள்கிறாள், கல் நெஞ்சக்கார அம்மா!

**முரு** (ஆத்திரத்துடன்): ஆ! அப்படியா? (ஓடிச் சென்று கிருஷ்ணவேணியின் பெட்டியைத் திறந்து குடைகிறார்) ஆ!

மூந்நூறு ரூபாய் ! எனக்குத் தெரியாமல் இவ்வளவு பெரிய தொகையை மிச்சப் படுத்தி யிருக்கிறாள். (தனக்குள்) என் பெற்றோர்க்கும் உதவாமல், குழந்தைகளையும் கவனியாமல், தனக்கென்று பணமா? அடி துரோகி! நீ ஒரு பெண்ணா?

மகனும் மகளும் (கவலையும் பயமும் கொண்டு): அப்பா! அதோ அம்மா வந்து விட்டாள் ! பெட்டியை மூடு !

முரு (கோபத்துடன்): வரட்டும் !

(கிருஷ்ணவேணி நுழைகிறாள்.)

கிருஷ் : என்ன இது ! என் பெட்டியை ஏன் திறந்தீர்கள் ?

(பாய்ந்து பெட்டியை மூடுகிறாள்)

முரு : ஏன் ? உன் திருட்டுத்தனத்தை வெளிப்படுத்தத்தான் ! இதற்குத்தானா என்னிடம் மாதா மாதம் பணம் பெறுகிறாய் ? என் பெற்றோரையும் குழந்தைகளையும் துரோகம் செய்து உனக்குத் தனியாய்ப் பணம் சேர்த்துக் கொள்கிறாயா ? பேயே !

கிருஷ் (ஆத்திரத்துடன் கமலியை நோக்கி): ஏ மூதேவி! இது உன்வேலையா? நீதான் இதை உன் அப்பாவிடம். சொல்லியிருக்க வேண்டும்,

கமலா : நான்....நான்....இல்லை !

முரு : சீ ! குழந்தையை ஏன் கடிந்து கொள்கிறாய் ? உன் திருட்டுத்தனத்தை எத்தனை நாட்கள் மறைக்க முடியும் என்று எண்ணிக் கொண்டாய்? மூந்நூறு ரூபாய் உனக்கு ஏது ?

கிருஷ் : ...............?

முரு : சொல்லப் போகிறாயா. இல்லையா ?

கிருஷ் (கண்ணீர் பெருக்கியபடியே): இது நீங்கள் மாதா மாதம் கொடுக்கும் பணத்திலிருந்து மிச்சம் பிடித்ததுதான்.

முரு : எனக்குத் தெரியாமல் நீ பணம் வைத்திருக்கலாமா? நான் கொடுத்த தொகையில் மிச்சம் இருந்தால், என்னிடம் திருப்பியல்லவா தந்துவிட வேண்டும் ?

கிருஷ் : உங்களிடம் சொன்னால் அந்தப் பணம் கரைந்து போய்விடும் என்றுதான் சொல்லவில்லை.

முரு : பணம் என்ன, கற்பூரமோ ! கரைவதற்கு?

கிருஷ் : உங்கள் கையில் அகப்படுகிற காசு கற்பூரம் இல்லை, கரி !

முரு : எதற்காக என்னைக் கரிக்கிறே? இந்தப் பணத்தைச் சேர்த்துப் போகிற இடத்துக்கா எடுத்துண்டு போகப் போகிறோம்?

கிருஷ் : அதைத்தான் நானும் சொல்கிறேன். ஒன்று மட்டும் நிச்சயமாக நம்புங்கள். நான் என் சுயநலத்துக்காகச் சேர்க்கவில்லை.

முரு : சுயநலத்துக்காக இல்லையென்றால் பொது நலத்துக்காகச் சேர்க்கிறாயோ ? என்ன புதிர் போடுகிறாய் ?

கிருஷ் : நான் புதிர் போடவில்லை. இந்தத் தொகையை உங்களுக்குத் தெரியாமல் சேமித்து வைத்தது, எனக்காகவோ அல்லது என் குழந்தைகளுக்காகவோ அல்ல.

முரு : பின் யாருக்காக ?...

கிருஷ் : வயது முதிர்ந்த பெற்றோர்க்காகத்தான்.

முரு : அவர்களுக்கு வாய்க்கு ருசியாக வயிற்றுக்குக் கொடுக்காமல் சாக அடிக்கப் பார்க்கிறாயே. அவர்களுக்காகச் சேர்க்கிறேன் என்று வேறு பீற்றிக் கொள்கிறாயோ ?

கிருஷ் : ஐயையோ ! இதென்ன ! அபாண்டம் சுமத்துகிறீர்கள் ? அவர்கள் பசிக்கு நான் இல்லையென்று என்றைக்காவது சொல்லியிருக்கிறேனா ? உங்கள் கை ஓட்டைக் கை. கையில் ஒரு காசு சேர்த்து வைத்துக் கொள்ளவில்லை. அவர்களோ தள்ளாதவர்கள். திடீரென்று உங்கள் பெற்றோரில் யாருக்காவது ஏதாவது நேர்ந்து விட்டால், பணத்துக்கு யாரைப் போய்க் கேட்பது? யார் கொடுப்பார்கள் ? குடும்பத்தில் கல்யாணச் செலவைத் தள்ளிப் போடலாம். ஆனால் துக்கச் சம்பவம் நிகழ்ந்து விட்டால் ஏற்படும் செலவைத் தள்ளிப் போட முடியுமா ?

முரு : பேஷ், பேஷ் ! செய்வதையும் செய்து விட்டுக் குல்லாவுக் கேற்றதலை என்பது போலச் செய்வதற்குப் பார்க்கிறாயோ ?

கிருஷ் : அட, ஆண்டவனே! நல்லது செய்யப் போய் இப்படிக் கெட்ட பெயர் வாங்கிக் கட்டிக் கொள்ளவா என்னைப் படைத்தாய் ?

முரு : உயிரை வைத்துக் கொல்லுவது உன் அகராதியில் நல்ல காரியமோ? உனக்கெல்லாம் இடம் கொடுத்துத் துளிர்க்க விட்டேனே, நான் ஒரு மடையன் !

சரவணன் : (பிரவேசித்து) சந்தேகம் என்ன ? நீ மடையன்தான். செட்டும் கட்டுமாகக் குடித்தனம் நடத்திக் குடித்தனத்தைக் குடித்தனமாகச் செய்யப் பார்க்கிறாளே, ஒரு குணவதி. அவளிடம் கோபித்துக் கொண்டும் நீ ஒரு மடையன் இல்லாமல் என்னவா யிருக்க முடியும் ?

முரு : உங்களுக்காகப் பரிந்து பேசப் போய் உங்களிடமே மடையன் என்று பெயர் வாங்கினேனே, நான் ஒரு....

ராஜு : ...மடையனாகத்தான் இருக்க வேண்டும் என்கிறீர்களா, அப்பா !

(எல்லோரும் சிரிக்கிறார்கள்)

# ஸாண்டோஸ்

# காப் ஸிரப்

## இருமலுக்கு இதமளிக்கிறது

இருமல்—ஜலதோஷ நிவாரணமாக, இயற்கையன்னை அளித்தருளிய வைத்திய மூலிகைகளுள் மிகவும் கைகண்ட மூன்று மூலிகைகளில் இருக்கும் அதே சத்துக்கள், விஞ்ஞான முறையில் ஒன்றுசேர்ந்த நவீன மருந்தே ஸாண்டோஸ் காப் ஸிரப்.

தொண்டையிலுள்ள இரணவீக்கத்தை சட்டென்று கண்டித்து இதமளிப்பதற்கான மூலிகை பாபாவேர ஸோம்னிபேரோம்; கட்டிப்போன கபத்தைக் கரைத்து, வெளியேற்றிவிட உதவுவதற்கான மூலிகை ஸெபைலிஸ் இபெகாகுவான்ஹா; மூச்சடைப்பு வேதனையை அதிவிரைவில் தணித்துவிடுவது எபேத்ரா என்ற 'இளைப்பாற்றும்' சக்தியுள்ள மூலிகை;—ஆகிய மூன்று சத்துக்களும் இதில் இணைந்துள்ளன.

அதனுல்தான் ஸாண்டோஸ் காப் ஸிரப், டாக்டர்கள் குறித்துக் கொடுக்கும் மருந்தாக விளங்குகிறது. மேலும், செர்ரிப் பழம் போன்ற அதன் இனிப்பை குழந்தைகள் பெரிதும் விரும்புகின்றனர்.

ஸ்விஸர்லந்து நாட்டு ஸாண்டோஸ் ஆராய்ச்சி சாலையின் மருந்துச் சரக்கு.







லைசென்ஸ் பெற்று, ஸாண்டோஸ்ப்ராடக்ட்ஸ்ப்ரைவேட் லிமிடெட் கம்பெனியினுல் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

SCS.P. 2-50 TM.

## 6. மற்றுமொரு சாகுந்தலம்

கைலாசநாதன் வந்த பிறகு, சதாசுகருக்கு மனம் ஒரு நிலையில் இல்லை. 'பற்றற்று வாழவந்த நமக்குப் பற்றுக் கோடாய் வந்த சாருமதியைப் பிரித்துப் போக இந்தப் பாவி வந்து சேர்ந்தானே!' என்று பொருமுவார் ஒரு சமயம். 'நமக்குக் கிடைத்துள்ள இன்பத்தைத் தட்டிப் பறிக்க இவன் யார்?' என்று எரிச்சல் எரிச்சலாக வரும் இன்னொரு சமயம். 'சாருவும் ராமுவும் இந்தக் கைலாசநாதனுடன் விடைபெற்றுச் சென்று விட்டால், இவ்வளவு நாட்களும் கோலாகலமாக இருந்த இந்தக் குடிசை வெறிச்சோடி விடுமே! அப்புறம் நான் இங்கே எப்படித் தனித்திருக்க முடியும்? சாருவை உன்னோடு அனுப்ப முடியாது என்று நிர்மானமாகக் கூறிவிட்டால் என்ன?' என்று எண்ணுவார் வேறொரு சமயம். 'சே! பெண் என்று பிறந்து விட்டால், புருஷனுடன் இருப்பதுதானே உகந்தது! கணவனையும் மனைவியையும் பிரித்து வைத்து நாம் என்ன சுகத்தைக் காணப் போகிறோம்?' என்று தம் எண்ணத்துக்குத் தாமே மறுப்புக் கூறிக் கொள்ளுவார், பிறிதொரு சமயம். இப்படியாக இல்லாததெல்லாம் எண்ணி அவர் மனம் அலைபாய்ந்து கொண்டிருந்தது.

இரவு தூங்கினாலும் சாருவின் கனவு, கண் விழித்தாலும் சாருவின் நினைவு. சாருவோடு சிறுவன் ராமுவும் வந்து அவரது கனவையும் நினைவையும் கலக்கிக் கொண்டிருந்தான். இப்படியே சரியான தூக்கம் இல்லாமல் இரண்டு மூன்று நாட்களை ஓட்டி விட்டார் சதாசுகர். அன்று இரவு கனவிலே விழித்தெழுந்த சதாசுகருக்கு அப்புறம் தூக்கமே பிடிக்கவில்லை. மெதுவாக எழுந்து சிறிதாக எரிந்து கொண்டிருந்த கை விளக்கைத் தூண்டி விட்டார்—ஏதாவது புத்தகத்தை எடுத்துப் படிக்கலாம் என்ற உத்தேசத்துடன். பிறையில் கை வைத்துப் புத்தகத்தை எடுத்தவருக்கு மகாகவி காளிதாஸனின் சாகுந்தலம் தானா கையில் வரவேண்டும்? புத்தகத்தைப் பிரிக்கத்தான் பிரித்தாரே, மகரிஷி கண்வர் தமது வளர்ப்புப் பெண் சகுந்தலைக்கு விடை கொடுத்துக் கணவன் வீட்டுக்கு அனுப்பி வைக்கும் காட்சிதான் காணக் கிடைக்க வேண்டுமா?

நிறை கர்ப்பிணியான சகுந்தலையைத் தம் இரு சீடர்களுடனும் கௌதமியுடனும் ஹஸ்தினாபுரத்துக்கு அனுப்பி வைக்கும் கட்டத்தில் மகரிஷி கண்வர் கண்



# தாமரை

கலங்குகிறார். 'ஹஸ்தினாபுரத்துக்குப் போனதும் தனது அரச பரிவாரத்தை அனுப்பி அழைத்துப் போகிறேன்' என்ற துஷ்யந்த மன்னன் அவளை அழைத்துப் போகவில்லை. கண்வர் தாமாகவே வழிய அனுப்புகிறார். வளர்ப்புப் பெண்ணை அனுப்பும் பொழுது உண்டான தமது பாச உணர்வை எண்ணிப் பார்த்த பொழுது கண்வரது கண்களிலே நீர் திரையிடுகிறது. 'வெறும் வளர்ப்புத் தந்தையான நாமே இத்தனை வருத்தப்படும்பொழுது உண்



மையான சொந்தத் தாய் தந்தையர் தமது பெண்ணைப் புகுந்த வீட்டுக்கு அனுப்பும்பொழுது எத்தனை மனக் கஷ்டப்படுவார்கள் ?' என்பதையும் மனக் கண்முன் கொண்டு வந்து நிறுத்திச் சிந்தனை செய்து பார்க்கிறார்.

உடலும் உள்ளமும் துடிதுடிக்க, உயிரும் உணர்வும் தழுதழுக்கக் கண்வர் சகுந்தலைக்கு விடையளிக்கும் அந்தக் காட்சி சதாசுகரின் கண் முன்னே விரிகிறது. தாமே கண்வ ராக மாறி விட்டது போன்ற பிரமையில் ஒருமுறை தமது உடலைச் சிலிர்த்து விட்டுக் கொள்கிறார்.

அவர் உள் மனம் கூறுகிறது. "நீயும் ஒரு கண்வர் தானே, அப்பா!"

"என்ன, நானும் கண்வரா? அத் தகைய தவவலிமை எனக்கு ஏது?"

"உனக்குச் சாருமதி கிடைத்தது போலவே, கண்வருக்குச் சகுந்தலை கிடைத்திருந்தாள் அல்லவா?"

"எனக்குச் சாருமதி கிடைத்தது போலவா? இல்லை, இல்லை. அவருக் குச் சகுந்தலை பச்சிளம் பாலிகையாக அல்லவா கிடைத்தாள்! எனக்குச் சாரு மதி அப்படிக் கிடைக்கவில்லையே!"

"எப்படிக் கிடைத்தால் என்ன? உள்ளத்தில் ஊறும் அன்பு ஒரே தன்மையானது தானே? நீயும் சாருவை விடை கொடுத்து அனுப்பச் சிரமப்படுகிறாய். பெரிய மகரிஷியான கண்வரும் பாசத்தை வெல்ல முடியா மல் அவஸ்தைப் பட்டார்!"

"நானோ சிறிய மனிதன். குறைவு களும் நிறைவுகளும் கொண்டவன். பலவீனங்கள் பல படைத்தவன். பாசத்தை வளர்த்துவிட்ட பின், பிரிவைச் சகித்துக் கொள்வது சிரம மாகத் தோன்றுகிறது!"

"ஆனைப்பட்டவருக்கே அது சிர மம்தான். சிறுவயதிலிருந்து வளர்த்து ஆளாக்கிவிட்ட சகுந்தலையைப் பிரியும் பொழுது, பாச உணர்ச்சி காரண மாகக் கண்வரின் கண்களிலே நீர் குளம் கட்ட வில்லையா? 'நிறைகுவியை வந்து அழைத்துப் போகாத கணவன் வீட்டுக்கு நாம் அனுப்பி வைக்கி றோமே! என்ன நடக்குமோ, கணவன் எப்படி அவளை வரவேற்பானோ, வீட்டில் வைத்துக் கொள்ளுவானோ, மாட்டானோ?' என்றெல்லாம் அவர் கலங்கினார். ஆனால் நீ அந்த நிலையில் இல்லை. கணவனே வந்து அவளை அழைக்கிறான். அன்பாக வைத்துக் கொள்வதாகக் கூறுகிறான். நீ அனுப் புவதும் கர்ப்பிணியை அல்ல; தாயை யும் சேயையும் அனுப்புகிறாய். மனத் திலே வருத்தத்தை வளர்த்துக்கொள் ளாமல் நிறை மனத்துடன் குழந் தையை அனுப்பி வை!"

"நிறை மனத்துடன் அனுப்புவதா? குழந்தையின் இந்தக் குறும்பை மறந்து வாழ்வதா? முடியாது; என் னால் ஒரு கணமும் முடியாது!"

"பாசத்தை வென்று புவிக்கு உப காரியாக இருக்கும் எண்ணத்துடன் தானே இந்த வைஜநாத்தில் நீ அடி யெடுத்து வைத்தாய்? பாசத்தை வென்றாயா என்று பரிசோதிக்க ஒரு சோதனை குறுக்கிட்டதும், பாசத்தில் விழுந்து உழலத் தொடங்கி விட் டாயே! யோசிக்காதே. கண்வ ரைப் போலப் பாசத்தை வென்று உள்ள நிறைவுடன் உன் சாருமதிக்கு விடை கொடுத்து அனுப்பு!"

"இதோ பார் சாகுந்தல நாட கத்தை! கண்வராலேயே தமது உள் ளத்து உணர்ச்சிகளை வெல்ல முடிய வில்லை என்பதற்குச் சான்றாக நிற் கிறது. தெய்வத்திரு விளையாடல் புரியும் குழந்தை பிறந்து, அதை ஆறு வயது வரை வளர்த்திருந்தாரானால் அவராலே கூடச் சகுந்தலைக்கு விடை கொடுத்து அனுப்பியிருக்க முடியாது. தெய்வத்தைக் காட்டும் இந்த ராமு வையும், அன்னையின் பெருமையைப் பளிங்கெனக் காட்டும் இந்தச் சாரு மதியையும் பிரிவதென்றால் என் மனத்தை என்னவோதான் செய்கி றது. இருந்தாலும், பெண்ணாகப் பிறந்து விட்டவளுக்குப் புருஷன் தான் கண்கண்ட தெய்வம் என்னும் பாரதியப் பண்பாட்டைப் பேணி வளர்க்கும் முறையிலே, எப்படியும் அவளுக்கு நான் நிறை மனத்துடன் விடை கொடுத்து அனுப்ப முயல் வேன். கண்களிலே நீர் சோர விட மாட்டேன். பாசத்தை வெல்லும் ஆற்றல் எனக்கு இருப்பதாக மார் தட்டிக் கொள்ளவோ பறைசாற்றிக் கொள்ளவோ விரும்பவில்லை. குழந்தை சாரு சுகமா யிருந்தால் அதுவே என் சுகம் என்ற நினைப்பில் – தன்னல நினைப்பில்தான்–அவளை அவளுடைய புருஷனோடு அனுப்பப் போகிறேன்!"

"உனது அந்தத் தன்னலத்திலேயே பிற நலன் தொனிக்கிறது. உன் முகத் தில் வாட்டத்தைக் கண்டு குழந்தை சாரு வருத்தப்படக் கூடாது. எனவே, மனத்தை அடக்கி அவளுக்கு விடை கொடு! என்ன, புரிந்ததா?"

"சரி, அப்படியே செய்கிறேன்!"

சதாசுகரின் கையிலிருந்த சாகுந் தலம் மெதுவாக நழுவிக் கீழே விழுந்

# இந்திய ரயில்வேக்கள் தேசீய சொத்து என்பதை நினைவு படுத்துகிறோம்!

சாப்பிட்ட பின் மிகுதியுள்ள உணவுப் பண்டங்களையும் பழத் தோல்களையும் பிளாட்பாரத்திலும், வண்டிக்குள்ளே யும் தயவு செய்து போடாதீர்கள். ரயில்வேக்கள் தனது இடங்களைச் சுத்தமாக வைத்திருக்க உதவுங்கள்.

கண்ட இடங்களில் தயவுசெய்து துப்பாதீர்கள். துப்பும் தொட்டிகள் ரெயில்வே பிளாட்பாரங்களில் வைக்கப்பட்டுள்ளன. தயவு செய்து அவைகளை உபயோகப்படுத்துங்கள்.

தீயுடன் இருக்கும் சிகரெட் துண்டுகளை ரயில் பெட்டிக் குள் தயவு செய்து விட்டெறியாதீர்கள். அதனால் தீ விபத்துக்கள் நேரிட ஏதுவாகும்.

ரயில்வே சொத்தை திருடுபவர்களோ அல்லது அதற்கு நாசம் விளைவிப்பவர்களோ தேசிய முன்னேற்றத்துக்கு இடையூறு விளைவித்தவர்களாவார்கள். தேசச் சொத்தான ரயில்வேயைப் பத்திரமாகப் பாதுகாத்து அவர்கள் மேலும் சிறந்த முறையில் பணிபுரிவதற்கு உதவி செய்யுங்கள்.

**சென்ட்ரல் ரெயில்வே**

## சிறு குழந்தையும் அறிந்த உண்மை...

# ரின்ஸோ வெளுப்பது அதிவெண்மை

விவேகமுள்ள தாய்மார்கள் சலவைக்கு உபயோகிப்பது ரின்ஸோ. வெள்ளைத் துணிகளை அதிவெண்மையாகவும் வர்ணத் துணிகளை அதிகப் பிரகாசமாகவும் வெளுக்கும் சோப் பவுடர் அதுதான். சக்தி வாய்ந்த ரின்ஸோவின் நுரை, மறைந்துள்ள அழுக்குகளையும் அறவே அகற்றிவிடுகிறது. ரின்ஸோ சலவை யென்றால் உங்களுக்கு வேலையும் இலகுவானதோடு நேரமும் மிச்சம். குடும்பத்தின் சகல துணிகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்.




உங்கள் வேலையை இலகுவாக்குவதற்கென்றே

தயாரிக்கப்பட்ட அற்புத சோப் பவுடர்

R. 18-50 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு.

தது. அவர் அப்படியே மோன நித்திரையில் ஆழ்ந்தார். முகத்திலே ஒரு முடிவுக்கு வந்துவிட்ட நிம்மதி நிலவி நிழலாடிக் கொண்டிருந்தது.

அன்று முதல் அவர் தமது முகத்திலே மகிழ்ச்சியை வருவித்துக் கொண்டு சுமுகமாகப் பழக முயன்றார். உள்ளொன்று, புறமொன்று என்னும் நிலை இருந்தபொழுதிலும், அவர் முகம் உள்ளத்தின் உண்மையான நிலையைச் சிறிதும் எடுத்துக் காட்டவில்லை.



ஜனவரி 22-ந் தேதி மயிலாப்பூர் உட்லண்ட்ஸ் ஓட்டலில் பிரத்தியேகமாக அளிக்கப்பட்ட விருந்துபசாரத்திற்குப் பிறகு மக்ளின் டுத்பேஸ்ட் தயாரிப்பாளர்களான க்ரூப் பைரட்டேரின் நடத்திய போட்டியின் பரிசு பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. இக்கம்பெனியின் ஜெனரல் மானேஜர் திரு பி. பி. க்லிஸ்டர் முதல் பரிசை வழங்குகிறார்.

நான்கைந்து நாட்களுக்குப் பிறகு அவர்கள் ஊருக்குப் புறப்படும் தினம் வந்த பொழுது சதாசுகர் முகத்தில் வருத்தத்தின் சுவடே இல்லை என்பதுபோல் நடந்துகொண்டார். ஆனால் சாருமதியின் கண்கள் மட்டும் அழுது அழுது வீங்கிப் போயிருந்தன. முதல் நாள் இரவு ஒரு கணநேரமாவது அவள் அழுகை ஓய்ந்தால்தானே?

"அப்பா! என்னை அனுப்பாதீர்கள். என் மனம் அங்கே இருப்புக் கொள்ளாது. இந்தக் குடிசைதான் எனக்கு அரண்மனை. அரண்மனையா? அரண்மனையைக் காட்டிலும் ஒரு படி மேல். எல்லாப் பாவங்களும் துயரங்களும் தொலைய வேண்டும் என்று கங்கையிலும் யமுனையிலும் போய்த் தலை முழுகுகிறார்கள். கங்கை – யமுனை இரண்டும் கலக்கும் பிரயாகையிலே போய் நீராடுகிறார்கள். என் துயரத்தைத் தீர்த்த பிரயாகை இதுதான் என்று நான் ஒரொரு சமயம் எண்ணுவது உண்டு. ஏனெனில் இங்கே வந்த பின்னர்தானே உலகத்துத் துயரங்கள் அனைத்திலிருந்தும் நான் விடுபட்டேன்! அமைதி நிறைந்த கவலை அற்ற இந்த வாழ்வு எனக்கு வேறு எங்கே கிடைக்கும்?" என்றெல்லாம் கூறிச் சாருமதி அடிக்கடி பலம்பினள்.

மோட்டாரில் உட்காரும் பொழுது கூட அவள் கண்களில் நீர் கோத்திருந்தது. ஒருபுறம் அவள் அழுது கொண்டிருந்தாள். இன்னொரு புறம் ராமு அழுது கொண்டிருந்தான். சதாசுகர் காரில் ஏறி உட்காராமல் கீழே நிற்கவே, ராமு அழுகையுடனும் பிடிவாதத்துடனும், "தாத்தா! ஏறிக் கொள்ளேன்!" என்றான். "ஏறிக் கொள்ளுகிறேண்டா, கண்ணு!" என்று சொல்லி விட்டுச் சதாசுகர் பேசாமலே நின்று கொண்டிருந்தார். "ஏறிக்கொள், தாத்தா! நீயும் எங்களோடு வந்துதான் ஆகவேண்டும்! ஏன் நிற்கிறாய்? ஏறிக்கொள்!" என்று அவசரப்படுத்தினான் ராமு. "இல்லையடா, கண்ணு! இன்றைக்கு நீ போ! நாளைக்கு நான் வருகிறேன்!" என்றார் சதாசுகர். 'ஏறிக் கொண்டால்தான் ஆயிற்று!' என்ற பிடிவாதத்துடன் அவனுடைய அழுகை உச்ச ஸ்தாயியை அடைந்து விட்டது.

"நீங்களும் வந்து விடுங்கள். உங்களுக்கு ஒருவிதக் கஷ்டமும் ஏற்படாமல் நாங்கள் கவனித்துக் கொள்ளுகிறோம்" என்றான் கைலாசநாதன்.

"அதற்கில்லை..." என்று இழுத்தார் சதாசுகர்.

"நாங்கள் கவனித்துக் கொள்ள மாட்டோமா? எங்கள்மீது உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லையா? பின் ஏன் இப்படி மீனமேஷம் பார்க்கிறீர்கள்?" என்று உரிமையுடன் கேட்டான் கைலாசநாதன்.

"நம்பிக்கை இல்லாமல் இல்லை; ஆனால் நான் சாருமதியை என் சொந்தப் பெண்ணாகவே பாவிக்கிறேன். நான் எப்படிப் பெண் வீட்டுக்கு வருவது? அப்படியே வந்து விட்டாலும் இந்த உலகத்தின் வாயில் நான் புகுந்து புறப்பட்டாக வேண்டுமே! இந்த உலகம் என்னை ஒரு நிமிஷம் நிம்மதியாக இருக்க விடுமா, நீயே சொல்!" என்றார் சதாசுகர்.



ஆலப்புழை சநாதன தர்ம வித்தியாசாலையின் ஆசிரியராயிருந்த திரு கே. வி. கோபாலய்யர் அவர்களின் சதாபிஷேக மகோத்ஸவம் சென்னையில் விமரிசையாக நடந்தேறியது.

"உலகம் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டு போகட்டும். அதை நீங்கள் எதற்காகப் பொருட்படுத்த வேண்டும்? உலகத்தின் உளறல்களுக்குச் செவி சாய்க்காமல் எங்களுடன் வந்து விடுங்கள்! யோசிக்காதீர்கள்" என்றான் கைலாசநாதன்.

"ஆனால் என் மனமும் கேட்கவில்லையே!" என்றார் சதாசுகர்.

"இதோ பாருங்கள்! இரண்டுபேரும் பிழியப் பிழிய அழுது கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்காகவாவது...?"

"நீ எப்படியாவது இவர்களைச் சமாதானப்படுத்து. பெண்ணாகப் பிறந்து விட்டால் கணவன் வீட்டுக்குப் போய்த்தானே ஆகவேண்டும்? இன்றைக்கு என் பெண்ணை அவள் கணவன் வீட்டுக்கு வழி அனுப்பும் பொழுது எனக்கு எவ்வளவு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது. தெரியுமா? கடவுள் ஒரு குறைவும் வராமல் இவளைக் காப்பாற்றுவார். அப்பா, கைலாசநாதா! இவள் விலைமதிக்க முடியாத மாணிக்கம். இவளுடைய உள்ளத்தில் கபடுசூது கிடையாது; பொய் – புனைசுருட்டுக் கிடையாது; வஞ்சனை கிடையாது. ஸ்படிகம் போன்ற நிர்மலமான மனசு இவளுக்கு. இவளுடைய மனம் நோகும்படியாக நடந்துகொள்ளக் கூடாது என்று நான் உன்னைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இதைவிட நான் வேறு என்ன சொல்ல முடியும்?" என்றார் சதாசுகர்.

"இதைப்பற்றிச் சிறிதும் நீங்கள் கவலைப்படாதீர்கள்! இவள் மனம் நோகும்படி நடந்து கொள்ளவே மாட்டேன். இவள் திருப்தியே என் திருப்தி என்று வாழ்வேன். உங்களைத் தனியே விட்டுச் செல்லத்தான் எங்களுக்கு மனம் இல்லை. நாங்கள் எவ்வளவு சொன்னாலும் நீங்கள்தான் பிடிவாதமாக மறுக்கிறீர்கள். அடிக்கடி கடிதமாவது எழுதிக் கொண்டிருங்கள்!" என்றான் கைலாசநாதன்.

"நீயும் கடிதம் போடு. கோடைக்கு எல்லோரும் இங்கே வந்து விடுங்கள். கோடைக்கு லக்ஷ்மணபுரியில் இந்த மாதிரி 'ஜிலுஜிலு' வென்று குளுமையான காற்று காசு கொடுத்தாலும் கிடைக்காது!" என்றார் சதாசுகர்.

சாருமதி தன் புடவைத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டு, "கட்டாயம் வருவோம். நீங்கள் கூப்பிடாவிட்டாலும் நாங்கள் வரத்தான் வருவோம்!" என்றாள்.

"இது உன் வீடு. உன்னை ஒருவர் கூப்பிட்டுத்தான் நீ வர வேண்டுமா? உனக்கு எப்பொழுது இஷ்டமோ, அப்பொழுது வாயேன்! உன் வீட்டுக்கு வரும்பொழுது உன்னை யார் இங்கே தடுக்கப் போகிறார்கள்?" என்றார் சதாசுகர்.

கடைசியில் ஒருவாறு எல்லோரும் பிரியா விடை பெற்றுக் கொண்டு பிரிந்தனர். மோட்டார் புறப்பட்டது. ராமு. "தாத்தா! தாத்தா!" என்று கதறினான். கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே கார் கன வேகமாக முன்னேறி விட்டது. சதாசுகர் கார் போகும் திசையையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றார். காருக்குள்ளிருந்து இரண்டு தலைகள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தன. கண்களுக்கெட்டிய தூரம் வரை சென்று கார் மறைந்து விடவே, சதாசுகர் தம் வசம் இழந்து கேவிக் கேவி அழத் தொடங்கி விட்டார். மேடும் பள்ளமும் நிறைந்த மலைப்பாங்கான பாதையில் கார் கிளப்பி விட்டுப் போன புழுதிகூட அடங்கிவிட்டது. சதாசுகரின் அழுகை தான் அடங்கவில்லை. அவரது காதுகளில் ராமுவின் அழுகைச் சத்தம் ஒலித்துக் கொண்டே இருந்தது. 'தாத்தா, தாத்தா!' என்று கூப்பிட்டு அவன் அலறும் சத்தம் அவர் மனத்தைப் பேதலிக்கச் செய்து விட்டது. அவருக்கு ஒரு வேலையும் ஓடவில்லை. வீடு வெறிச்சென்று ஆகி விடவே, பிரமை பிடித்தவர்போல் அசையாமல் வருத்தமே உருவாக உட்கார்ந்து விட்டார். (தொடரும்)


தூய உடைகளும்
உள்ளத்தின் நிறைவும்!
சிறுவரின் மனதில் தன்னம்பிக்கை யூட்ட தூய உடைகளைவிட சிறந்தது எதுவுமில்லை! வெள்ளை ஆடைகளை மேலும் வெண்மையாகவும், வர்ண ஆடைகளை மேலும் பிரகாச முடையதாகவும் செய்வது காவேரி பார் சோப். அவற்றின் உழைப்பையும் நீடிக்கச் செய்கின்றது.
CAUVERY BAR
காவேரி பார்
எனக் குறிப்பிட்டுக் கேளுங்கள்.
தயாரிப்பவர் :
மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை :: சேலம் ஜில்லா
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்
MC 394 Ta

உங்களுக்கு விருப்ப
மான பாம்

# நோபெயின்

பெயரை

# நோபின்

என்று மாற்றப்
பட்டிருக்கிறது



# A NOPIN

நோபினின் ஊடுருவிச் செல்லும் தன்மை தேய்த்த உடனேயே சருமத்திலுள் நுழைந்து பட்டிருக்கும் இடங்களில் ரத்த ஓட்டம் கொடுத்து ஆற்றலைச் செய்து வலியை தணிக்கிறது.







நோபின் குடும்பத்தின் உபயோகத்திற்கு சிக்கனமானது.




நோபின் எப்பொழுதும் சக்தி வாய்ந்ததும் இனிமையான வாசனையுள்ளதும் ஆகும. ஏனெனில் அதில் அடங்கியிருக்கும் சாதனங்களின் குணம் கெடாமலும் தூய்மை யுடனும் இருக்க சீலிட்ட டியூபுகளில் பாக் செய்யப்பட்டிருக்கிறது.




எப்பொழுதும் ஒரு டியூப் நோபின் தயாராக வைத்திருங்கள்

CMF-5TH6-Ta

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட் கல்கத்தா-29

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

---

# மில்க் ஆப் மக்னீஷ்யா

மக்னீஷ்யா மக்மா U. S. P

சிறு குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் வயது வந்தவர்களுக்கும் பத்திரமும் பயனளிப்பதும்

அமிலத்தைத் தடுக்கவும் பேதிக்கும்

நிச்சயமாக இதையே கேளுங்கள்....




M & H பிராண்ட்

இந்த தனிப்பட்ட பாக்கிங் பார்த்து வாங்குங்கள்




MANUFACTURED IN INDIA BY
**MARTIN & HARRIS (PRIVATE) LTD.**
18, ASHUTOSH MUKHERJEE ROAD, CALCUTTA 20

## 6. சித்தியின் சீற்றம்!

மாமுண்டி எதற்காகத் தன்னை அவர் கடைக்குக் கூப்பிடுகிறார் என்பது விளங்காமல் உலகநாதன் வீரமுத்துவைப் பார்த்து விழித்தான். "இந்த மாமுண்டியா பிள்ளையின் பலசரக்குக் கடையில் வேலைக்குச் சேர விருப்பம் இருந்தால், சேர்ந்து கொள்ளு, தம்பி! அதற்காகத்தான் இவர் கூப்பிடுகிறார்!" என்று விஷயத்தை விளக்கினான் வீரமுத்து.

பசு மடத்து மண்டபம், காற்று, சாப்பாடு எல்லாம் பிடித்தமாக இருக்கவே, "தாத்தா! நீங்கள் சொல்லுகிறபடி கேட்கிறேன். எனக்கும் வேலை செய்யவே ஆசை. ஆனால் என்னை அடிக்க மட்டும் கூடாது. அடித்தால் தங்க மாட்டேன், ஓடி விடுவேன்!" என்றான் உலகநாதன்.



# திருச்சி உலகநாதன்

"உன்னை எதற்காக நான் அடிக்க வேண்டும்?" என்றார் மாமுண்டி.

"என்னை எங்கள் சித்தி அடித்ததால்தான் ஓடிவந்து விட்டேன். அதனால் யார் அடித்தாலும் என்னால் பொறுக்க முடியாது. ஓடிவிடுவேன்."

"பாருங்க, முதலாளி! அடிக்கப் படாதாம். 'கண்டிஷன்' போடுகிறான். சின்னப் பயலாக இருந்தாலும் கெட்டிக்காரப் பயல். ஒரு வாரம் பத்து நாள் கடையில் வைத்துப் பாருங்கள். ஒத்துப் போனால் இருக்கட்டும், இல்லாது போனால், விரட்டி விடலாம்."

"ஆகட்டும். வாடா பின்னாலே. என் மனைவியிடமும் ஒரு வார்த்தை கேட்டு விடுகிறேன்" என்று கூறிக் கொண்டே எழுந்தார் மாமுண்டி.

"தாத்தா! உங்கள்கூட மேலே மலைக்கு வருகிறேன். பிறகு அவர் கடைக்குப் போகிறேன்" என்றான் உலகநாதன்.

பையன் போக்குப்படி விட்டுப் பிடிக்க எண்ணம் கொண்ட மாமுண்டியா பிள்ளை மண்டபத்தை விட்டு வெளியே போய் விட்டார்.

மணி மூன்றரைக்கு மேலே, பசு மடத்து மண்டபத்தை விட்டு இருவரும் வெளியேறினார்கள். படிகள் மேலே போனார்கள். அப்போதும் வீரமுத்து காலணா வாங்கிக் கொண்டு மேலே ஜாக்கிரதையாகப் போகும்படி சொன்னான். ஒருதரம் ஓடிச் செதுக்குப் படியில் விழுந்த அனுபவம் இருந்ததால் உலகநாதன் கவனமாக மேலே ஏறினான்.

உச்சிப் பிள்ளையார் கோவில் பிராகாரத்து வளைவிலே நின்று திருச்சியைப் பார்த்தான். மேற்கே நின்று பார்த்தால் அகண்ட காவேரி; வடக்குப் பிராகாரத்தில் ஸ்ரீரங்கத்துக் கோபுரம்; திருவானைக் கோவில் கோபுரம்; எங்கும் சோலை, இரண்டு நதிகள் மட்டும் ஊடாகக் கிழித்துக் கொண்டு போவதைப் பார்த்தான். தொலைவிலே ஈரோட்டு ரயில் மெதுவாகச் சின்ன அட்டைப் பூச்சி போல் சிவப்பாக ஓடிக் கொண்டிருந்தது. சிவப்பு அட்டைப் பூச்சிக்குக் கறுப்புத் தலை மாதிரி என்ஜின் 'குப் குப்' பென்று புகை விட்டுக் கொண்டு போயிற்று.

சுகி

வெய்யில் பட்டுக் காவிரியாற்றின் நீர் பளபளவென்று மின்னியது. தென் புறத்துப் பெரிய கடைவீதி ஒத்தடித் தடமாகத் தெரிந்தது. வீடுகள் யாவும் குழந்தைகள் கட்டிய பொம்மை வீட்டைப்போல் சிறிதாகத் தெரிந்தன. மனிதர்கள் பெரியகடை வீதியில் குள்ளர்கள் போல் நாலு அங்குலம் இரண்டு அங்குலம்தெரிந்தார்கள். ஒரு பக்கம் சிரிப்பு; ஒரு பக்கம் திகைப்பு.

அந்தச் சமயம், ஒரு சின்னப் பையன் யாரோ ஒருவருடைய கையைப் பிடித்துக் கொண்டு செதுக்குப் படியில் ஏறி வந்துகொண்டிருந்தான். உலகநாதன் படிக்கும் வகுப்பில் படிக்கிற பையன். பெயர் சின்னத்துரை.

“ஏன், உலகநாதா! நேற்றும் இன்றைக்கும் பள்ளிக்கூடம் வரவில்லை? வாத்தியார் கேட்டார். நீ ஏன் வரவில்லை? இங்கே யாருடன் வந்தாய்? ஏன் கிழிசல் சட்டை போட்டிருக்கிறாய்?–மாமா, மாமா! எங்கள் வகுப்பிலே இவன்தான் நன்றாகப் படிக்கிறவன். இவனுக்குச் சம்பளம் வேண்டாம் என்று சர்க்கார் உத்தரவு வந்துவிட்டது!” என்றான் சின்னத்துரை.

சின்னத்துரையின் மாமா உலகநாதனை முறைத்துப் பார்த்தார். அவர்தான் அவனுக்குக் காலையில் கூலியும் தந்து ஓட்டலில் இனாம் இட்டிலியும் போட்டவர். சின்னத்துரையின் மூலம், தன் காரியம் அனைத்தும் வீட்டுக்குத் தெரிந்து விடுமோ என்று பயந்த உலகநாதன், திரும்பிப் பார்க்காமல் ‘விடு விடு’ வென்று வேகமாகக் கீழே இறங்கினான். அதைக்கண்ட காவலாளி வீரமுத்து கத்தினான். அப்போதுதான் மீண்டும் உலகநாதனுக்குப் புத்தி வந்தது. மெதுவாக இறங்கலானான்.

உலகநாதன் அருகில் வந்ததும் வீரமுத்து. “நேரே நீ கீழே இறங்கி யானை கட்டியிருக்கும் படிவரைபோய், பசுமடத்து வழியாக வந்தோமே, அதற்கு மேல் பக்கம் பத்தடி போனால், ஒரு பலசரக்குக்கடை இருக்கிறது. உனக்கும் படிக்கத் தெரியுமல்லவா? அதிலே மாமுண்டி பலசரக்கு ஸ்டோர்ஸ் என்ற விலாசம் இருக்கும். இரவில் பசும் பால் சூடாகக் கிடைக்கும் என்றும் போர்டு போட்டிருக்கும். அங்கே நீ போனால் உனக்கு வேலை கிடைக்கும். காலையிலும் மாலையிலும் அவர் சோறு போடுவார். மத்தியானம் என்னோடு பட்டைச்சாதம் கிடைக்கும். உனக்கு வேலை செய்ய விருப்பமில்லை—யென்றால் இப்போதே படி இறங்கிப் போய் விடு!” என்றான்.

“தாத்தா! மாமுண்டியார்கடைக்கே போகிறேன். அவர் நல்லவர்தானா?” என்று கேட்டான் உலகநாதன்.



"நல்லவர்தான். நீயும் நல்லவனாக இருக்க வேண்டும்" என்றான் வீரமுத்து.

கடைக்கு வந்த உலகநாதனைக் கடைக்குள் ஏற்றுவதற்கு முன்பாக மாமுண்டியா பிள்ளை சோதனை போட்டார். அவனிடமுள்ள பொக்கிஷமான ஒண்ணேகாலணாவில் காலணாப் போக எஞ்சியிருந்த நாலு காலணாவை எடுத்துக்கொண்ட பின்னரே பட்டறையில் இடம் கொடுத்தார். தன்னிடமுள்ள பணத்தைப் பறிகொடுத்த பின்னர் யாரும் அந்த இடத்தைவிட்டு ஓட மாட்டார்கள் என்ற எண்ணம் போலும்!

* * *

சின்னத் துரைக்கு மலைமேல் பார்த்த காட்சிகளைவிட, உலகநாதனைக் கண்டதில் வியப்பு அதிகம். அதிலும் அவன் கூலி தூக்கியதை எப்படியாவது மறு நாள் சொல்ல வேண்டும் என்ற எண்ணம். பள்ளிக்கூடம் வந்ததும், பொன்னுரங்கத்தைத் தேடினான். சீனுப் பயலையும் பார்த்தான். பள்ளிக்கூடம் மணியடித்ததும் மாணக்கர்கள் ஒவ்வொருவரையும் பெயர் சொல்லிக் கூப்பிட்டார்கள்.

"உலகநாதன்!" என்றார் வகுப்பு ஆசிரியர்.

சின்னத்துரை எழுந்து நின்றான். காரணம்கேட்டபோது, "மலைக்கோட்டையில் மூட்டை தூக்குகிறான், சார். வீட்டை விட்டு ஓடிப்போய்விட்டான். கோட்டை 'ரயில்வே ஸ்டேஷனில் டிக்கெட்டு எடுக்காமல் வந்ததற்கு அடிபட்டானும். ஹோட்டலுக்கு வருகிறவர்களிடம் ஓசி டிபன் கேட்டுக் கொண்டிருக்கிறானும்" என்று அடுக்கிக் கொண்டே போனான்.

சின்னத் துரை சொல்லச் சொல்ல மாணவர்கள் சிரித்தார்கள். மாணவர்கள் சிரிப்பை ஆசிரியர் தடுத்தார். அவருக்கு உலகநாதனிடம் பற்று உண்டு. நல்லவன், நன்கு படிப்பவன் என்பதுதான் காரணம்.

"அவனுக்குத்தான் 'ஸ்காலர்ஷிப்' வந்துவிட்டதே, எதற்காக ஓடினான்?"

"அவனுடைய சித்தி கொடுமைப் படுத்தினளாம். அரிவாள் மணையால் கழுத்தைச் சீவ வந்தாளாம்!"

கடைசிப் பெஞ்சிலிருந்து யாரோ ஒரு பையன், "கலிகால ராட்சசிபோல் இருக்குதுடோய்!" என்று கத்தினன். மெதுவாக ராட்சசி என்ற சொல் பெரிதாகிக் கொண்டு வந்தது. இந்த எக்கச்சக்கமான கட்டத்தில்பொன்னுரங்கம் வகுப்புக்குள் நுழைந்தான். எல்லோரும் அவனைப் பார்த்து ராட்சசி மகன் என்று கத்தினர்கள்.

"எங்கேடா வந்தாய்?" என்று கேட்டார் ஆசிரியர்.

"இங்கே சின்னத் துரையாம். என்னுடைய தம்பியைப் பார்த்தானும். யாரோ சொன்னர்கள். அவனிடம் விவரம் கேட்க வேண்டும். அவனைக் கொஞ்சம் பேசச் சொல்லுங்கள்" என்று ஆசிரியரிடம் அனுமதி கேட்டான் பொன்னுரங்கம்.

"ஏண்டா, பொன்னு! உலகநாதன் நன்றாகப் படித்தானே. அவனுக்குச் சம்பளம் வேண்டாம் என்றபோது ஏன் ஓடினன்?" என்று கேட்டார் ஆசிரியர்.

பொன்னுரங்கம் படிப்பில்தான் மக்கு; மற்றப்



படி உலகம் தெரிந்தவன். "படித்தால் போதுமா, சார்? கை நீட்டமுள்ள பையனை யார் மதிப்பார்கள்? வீட்டிலிருந்து நூறு ரூபாய் பணத்தை அவன் கிளப்பிக்கொண்டு போய் விட்டான்" என்றான்.

அவன் தாயார் பையன் ஓடிப்போனதற்கு அக்கம்பக்கத்தாருக்குக் கூறிய காரணம் இதுவே. அதையே அவனும் இங்கே சொல்லி வைத்தான். ஆசிரியர் நம்பினால் என்ன, நம்பாவிட்டால் என்ன? வீட்டு விவகாரத்தில் தலையிட விரும்பாமல் சின்னத்துரையை வெளியே அனுப்பி வைத்தார். அப்போது ஒரு பயல் எழுந்து, "ஏன் சார்! நூறு ரூபாய் திருடினால் மூட்டை தூக்குவானா?" என்ற சந்தேகத்தைக் கிளப்பவே, வகுப்பிலே மீண்டும் கைத்தட்டல் உண்டாயிற்று. பொன்னுரங்கத்துக்குக் கோபம் கோபமாக வந்தது.

சின்னத்துரையிடம் வக்கீல் போல் பல குறுக்குக் கேள்விகள் கேட்டு, விவரங்கள் தெரிந்து கொண்டான்.

பிறகு எந்த வகுப்புக்கும் போகாமல் நேரே மலைக்கோட்டைக்குப் போய் உலகநாதன் எங்கு இருக்கிறான் என்பதைத் துப்புத் துலக்கிக்கொண்டு வீட்டுக்கு வந்தான். தாயாரிடம் நடந்த காரியங்களைச் சொன்னான்.

"ஏண்டா, முட்டாள்பயலே! அவன் மலைக்கோட்டையில் நேற்று இருந்தால் இன்றைக்கும் அங்கேயே இருப்பானா?" என்று கேட்டாள்.

"அதை விசாரித்து வந்துவிட்டேன். அவன் இருக்கிற இடமும் தெரியும். மலைக்கோட்டைத் தெரு மலைக் கோவிலைச் சுற்றி இருக்கிறதல்லவா? அதிலே யானை கட்டிய இடத்துக்கு மேற்கே ஒரு கடை இருக்கிறது. அதன் பெயர் மாமுண்டி பலசரக்குக் கடை. அங்கே அவன் கையாளாக இருக்கிறான்."

"நீ பார்த்தாயா?"

"இரண்டு கண்ணாலும் பார்த்தேன். நான் போய்க் கூப்பிட்டால் பயல் தப்பி விடுவான். ஆகவே உன்னிடம் சொல்ல வந்தேன்."

தாயார் விவரங்களைத் தெரிந்து கொண்டு, "பொன்னுரங்கம்! நீ வீட்டைப் பார்த்துக்கொள். தம்பி சீனு வந்தால் ஈயச் சட்டியில் சாதம் பிசைந்து வைத்திருக்கிறேன். சாப்பிடச் சொல்லி அவனைப் பள்ளிக்கு அனுப்பு. நானே போய் உலகநாதன் பயலைக் கண்டு பிடித்து இழுத்து வருகிறேன்!" என்று புறப்பட்டாள்.

ஜானகியம்மாள் எவ்வளவு வல்லமை நிறைந்தவளோ அப்படியே மாமுண்டியா பிள்ளையும் பேச்சிலே வல்லவர். இருவருக்கும் வாக்குவாதம் பலமாக நடைபெற்றது. அவர் பையனை அனுப்ப மறுத்தார்; அவளோ பையனை அங்கே விட்டு வைக்க மறுத்தாள். வியாபாரக் கடையாக இருந்ததால் கூட்டம் கூடி விட்டது. இரு பக்கமும் நாலு பேர்கள் பேசினார்கள். உலகநாதன் என்ன பேசுவது, எப்படி நிலைமையைச் சமாளிப்பது என்று தெரியாமல் திண்டாடினான். அவன் உள்ளத்துள்ளே எப்படியாவது தப்பித்துக் கொண்டால் போதும் என்று பட்டது. அங்கே போலீஸ்காரன் வேறு வந்து விட்டான். தெருவே கூடிவிட்டது.

பையனை ஜானகியம்மாள் ஒப்புக்கொள்வது நியாயமென்றும், இனிமேல் பையனைத் தொல்லைப் படுத்தினால் மாமுண்டியா பிள்ளை தமது கடைக்குக் கொண்டு வந்து வைத்துக் கொள்ளலாம் என்றும் சொன்னார்கள். போலீசும் அப்படியே சொல்லி, ஒரு சோடாவைச் சாப்பிட்டுவிட்டுப் போய்ச் சேர்ந்தார். கடைக்குள் மிளகாய் மூட்டைக்குள் பம்மிக் கிடந்த உலகநாதன் வெளியே வந்தான். கொஞ்சம் களையாகக் கூட இருந்தான். துணிதான் அழுக்காக இருந்தது. அவன் கையை எட்டிப் பிடித்தாள். இரும்புக் கூட்டுக்குள் அகப்பட்டதுபோல் இருந்தது பிடி.

"வீட்டுக்கு வா, உன்னைப் பற்றிப் பேசிக் கொள்கிறேன். பள்ளிக்கூடம் முழுக்க முழுக்க என்னை ராட்சசி என்று சிரிக்கிறதாமே. ஏன் நான் உன்னால் ராட்சசிப் பட்டம் வாங்கியாகணும்! என் பிள்ளைகள் எதற்காகக் கஷ்டப்படணும்? பொன்னுரங்கத்தைப் பலரும் திட்டுகிறார்களாம். அந்தச் சீனுப் பயல், நீ வராமல் சாப்பிட மாட்டானாம். வீட்டை ஒரே அல்லோலகல்லோலம் செய்து விட்டாயே? என்ன வேளையில் எங்கள் குடியைக் கெடுக்க வந்தாயோ?" என்று பிடித்த கையில் காப்புப் போட்டது போன்று நெருக்கி நகத்தால் ரத்தம் வரும்படி செய்து விட்டாள்.

"சித்தி! இனிமேல் நான் உனக்கும் சரி, யாருக்கும் சரி, எவ்விதமான வம்பும் செய்ய மாட்டேன். நீ அடிக்கவே பயந்து ஓடிப் போய்விட்டேன். என்னை ஒன்றும் செய்யாதே!" என்று கெஞ்சினான் உலகநாதன். (தொடரும்)

# பாலுவின் கல்யாணம்

பொழுது விடிந்தால் என் செல்வன், பாலகுருவின் ஆண்டு நிறைவுக் கல்யாணம். வீடு நிறைய மனிதர்கள். என் அம்மா, 'இலைக்குக் குஞ்சாலாடு போடலாமா அல்லது ஜாங்கிரி கற்றுச் சொல்லலாமா?' என்ற பிரச்னையில் குழம்பிக் கொண்டிருந்தாள். என் மனைவி சாந்தியோ, 'தானே எந்தப் புடவையை உடுத்திக் கொள்ளலாம்?' என்ற யோசனையில் ஆழ்ந்து பீரோவுக்கு முன் மலைத்து நின்றிருந்தாள். என் மனமோ என் லட்சியத்தைக் குலைத்து இன்று ஒரு குழந்தைக்குத் தந்தையாகும்படி செய்து விட்ட, பாலுவின் குறும்புத்தனத்தைப் பற்றிய எண்ணங்களிலேயே சுழன்று கொண்டிருந்தது.




"உடனே புறப்பட்டு வரவும்; மற்றவை நேரில்" என்று என் அக்கா புருஷர் கொடுத்திருந்த தந்தியைப் படித்ததும் திகைப்புடன் புறப்பட்டேன் சென்னைக்கு. அங்கு சென்றவன் என் பிரும்மச்சரியத்தை உடைத்தெறியும் முயற்சியில் அவர் தீவிரமாக இறங்கியுள்ளார் என்பதை அறிந்ததும் திடுக்கிட்டுப் போனேன். அவரை மீறி ஒன்றும் செய்ய முடியவில்லை. மெல்லத் தட்டிக் கழித்து விடலாம் என்று தீர்மானித்தேன்.

அன்று மாலையே பெண்ணைப் பெற்ற மனிதர் என்னைப் பார்க்க வந்து விட்டார். மறு தினமே பெண் பார்க்க நாளும் குறித்துக் கொண்டு விட்டார் அவர்.

எனக்குள் ஒரு முடிவு செய்து கொண்டது போல் ஒரு யோசனையும் தோன்றியது.

"நானைக்குப் பெண் பார்க்க முடியாது, அத்திம்பேர்! நாளை என் நண்பன் ஒருவன் வருகிறான். அவனுடன் மாமல்லபுரம் போவதாக ஏற்பாடு செய்துகொண்டு வந்துவிட்டேன்" என்றேன்.

அத்திம்பேருக்குக் கோபம் கோபமாக வந்தது. வந்தவரோ எதையும் தாங்கத் தயாராக வந்திருந்தவர் போல் சாந்தமாக, "பரவாயில்லை! நீங்கள் மாமல்லபுரம் போய் வந்த பின்னரே பெண் பார்ப்பதை வைத்துக் கொள்வோமே!" என்றார்.

அத்திம்பேர் சம்மதிக்கவில்லை. "உங்களுக்குத் தெரியாது, சார்! அவன் பிரும்மச்சாரியாகவே இருக்கத் தீர்மானித்திருக்கிறானும். அதனால் தட்டிக் கழிப்பதற்குப் பார்க்கிறான்!" என்றார் புன்னகையுடன்.

வந்தவர் சளைக்கவில்லை. "என் பெண்ணை ஒரு முறை பார்த்துவிட்டு அப்புறம் உங்கள் உறுதி நிலைக்கிறதா என்பதைப் பாருங்கள். நீங்கள் மாமல்லபுரம் போய்விட்டுத் திருக்கழுக்குன்றம் ஸ்ரீ வேதகிரீசுவரரையும் தரிசனம் செய்து கொண்டு, திரும்பும்போது திருப்போரூர் முருகனையும் பார்த்து விட்டு வாருங்கள். வந்த அலுப்பு தீர்ந்தபின் நான் மறுபடியும் வந்து அழைத்துப் போகிறேன்" என்று நிதானமாகச் சொன்னார்.

அத்திம்பேரோ ஒரேயடியாகக் கோபித்துக் கொண்டார். நாளைக்குப் பெண்ணைப் பார்த்த பிறகு மாமல்லபுரம் போகலாம் என்று வாதாடினார். நான் மசியவில்லை. கடைசியாக, வந்தவரே என் அத்திம்பேரின் கோபத்தையும் தணித்து, என்னிடமும் விடைபெற்றுப் புறப்பட்டார்.

'நண்பன் வருகிறான்' என்று நான் சொன்னது பொய்தான். ஆயிரம்பொய் சொல்லி ஒரு கலியாணத்தைத் தட்டிக் கழிக்க நான் என்னைத் தயார் செய்துகொண்டு விட்டேன். ஆகவே மறுதினம் நான் மட்டும் மாமல்லபுரத்தைப் பார்க்கக் கிளம்பினேன்.

நான் பஸ்ஸை விட்டு இறங்கியபோது காலை வெய்யில் ஏறிக் கொண்டிருந்தது. அச்சமயம் வழிகாட்டி ஒருவரும் காணப்படாததால் எதிரில் வருவோரை விசாரித்தபடி கடற்கரையைப் பார்க்கப் புறப்பட்டேன். நான் பஞ்சபாண்டவர் ரதங்களை அணுகும்போது பக்கத்தில் நின்ற நாவல் மரத்தின் கீழ் இருந்த ஒரு இளைஞன் உயர இருந்து விழும்

கிரஹா

பழங்களை லாகவமாகத் தாவிப் பிடித்தபடி நின்றிருந்தான். என்னைக் கண்டதும் அந்த இளைஞன், "ஸார்! இந்த நாவல் பழத்தைச் சாப்பிட்டுப் பாருங்கள்! ரொம்ப ருசியாக இருக்கும்!" என்றபடி மிக சுவாதீனமாக என்னிடம் நாவல் பழங்களை நீட்டினான்.

நெற்றியில் சுருண்டு புரளும் கிராப்புக் கற்றையும் கண்களில் ஒளிரும் குறும்புத் தனமும் அவ்விளைஞனின் முகத்துக்குத் தனி வசீகரத்தைக் கொடுத்தன.

நான் அவன் கொடுத்த நாவல் பழத்தைச் சுவைத்தபடியே, "இதோ தெரிவதுதான் பஞ்சபாண்டவர் ரதம் என்ற சிற்பங்களா?" என்று கேட்டேன்.

என் கேள்விக்கு அந்தப் பையன் பதில் கூறு வதற்கு முன், மரத்திலிருந்த வழிகாட்டி மளமளவென்று பேசத் தொடங்கி விட்டான்.

"ஆமாம் சார்! இதுதான் பஞ்சபாண்டவர் ரத சிற்பங்கள்! முதலில் இருப்பது துரௌபதி, அர்ஜுனன் ரதம். ஒரே கல்லில் குடைந்து வடித்தது. அடுத்தது பீமசேனர் ரதம். அதற்கடுத்தது தருமபுத்திரருடையது. இவைகளுக்கு முன்னால் நிற்பது நகுல சகாதேவர்களுடையது. அதைத் தாண்டிப் போனால் கடற்கரைக் கோயில் சிற்பம் சார்! மொத்தம் ஏழு கோயில்கள். ஆறு சமுத்திரத்தில் முழுகி விட்டன. இது ஒன்றுதான் பாக்கி! அதுவும் முழுகப் பார்த்தது. சர்க்கார் அணைகட்டித் தடுத்துக் கொண்டிருக்கிறார்கள்! மொத்தம் முப்பத்தேழு சிற்பங்கள் சார்! நான் காட்டுகிறேன் சார்!" என்று ஒப்பித்தபடி மரத்திலிருந்து கீழே குதித்தான். என் அருகில் நின்ற இளைஞனோ, 'கலகல' வென்று சிரித்தான்.

"சார்! இன்று நீங்கள் இவன் பாடத்தைப் பலமுறைகள் கேட்க வேண்டி வரும். ஆகையால் இந்தக் கடற்கரைச் சிற்பங்களை மட்டும் இவன் தொணதொணப்பு இல்லாமல் தனியாகப் பார்த்து விட்டு வாருங்கள். அதற்குள் இவனை வைத்துக்கொண்டு உங்களுக்கும் சேர்த்து நாவல் பழங்கள் பறித்து வருகிறேன். மற்றவைகளைச் சேர்ந்து பார்ப்போம். இப்படியே சிற்பங்களைப் பார்த்தபடி கடற்கரைப் பக்கம் சென்றால் கோயில் சிற்பத்தின் முன்புறம் வரலாம். சிவலிங்கத்தைப் பார்த்துத் திரும்பும்போது, இடது பக்கம் திரும்பினால் உள்ள குகையில் பள்ளி கொண்டுள்ள ஸ்ரீ ரங்கநாதர் சிலையையும் பார்க்கலாம்!" என்று கூறிய இளைஞன் வழிகாட்டியை இழுத்துக் கொண்டு நாவல் மரத்தடிக்குச் சென்று விட்டான்.

அமரர் கல்கி சிருஷ்டித்த சிவகாமியின் நினைவோடு சிற்பங்களைப் பார்த்துத் திரும்பியவன், ஸ்ரீரங்கநாதர் சிற்பத்தைப் பார்ப்பதற்காக அந்தக் குகையுள்ள பக்கம் திரும்பியபோது, திகைத்து நின்று விட்டேன். 'ஆயனரின் மகளைத் தங்கச் சிலையாக வடித்து நிறுத்தி யிருக்கிறார்களா? அப்படி யாரும் சொல்லவில்லையே?' இப்படி என்னைவிட்டுத் தடுமாறியது மனம். காரணம் என் பார்வை திரும்பிய பக்கம், கடல் அலைகளைப்பார்த்தபடியே தங்கச் சிலையொன்று நின்று கொண்டிருந்ததுதான்.

என்னை மெல்லச் சமாளித்துக் கொண்டு, பலவந்தமாக அடியைப் பெயர்த்து வைத்த போது திடுக்கிட்டுத் திரும்பிய அச்சிலையின் முகத்திலே செம்மை படர்ந்தது! என் வியப்பும் திகைப்பும் பன்மடங்காக விரிந்தன. அழகெல்லாம் திரட்டிக்கொண்டு அங்கே நிற்பது சிலை அல்ல, ரத்தமும், சதையும் கொண்ட பெண் என்று அறிந்ததும் என் வியப்பு பெருகாமல் என்ன செய்யும்?

திகைத்து நின்ற அந்தப் பெண்ணும் தன்னைச் சமாளித்துக் கொண்டவுடன், சிறிது நகர்ந்து வழி விட்டாள்.

குகைக்குள் இருந்த சிறுவன் விளக்கைத் தூக்கிப் பிடிக்க ஸ்ரீ ரங்கநாதர் சிலையைப் பார்த்ததாகப் பெயர் பண்ணினேன்.

அக்குகையை விட்டு வெளிவந்த நான் மிக ஆவலோடு தலை நிமிர்ந்தபோது அந்தப்பெண் அங்கேதான் நின்றுகொண்டிருந்தாள். நாணம் அவள் வதனத்தை மேலும் அழகாக்கியது.

'இத்தனை அழகிய பெண் தனியாக...?' என்று நான் என்னுள் கேள்வியைத் தொடுவதற்கு முன் பதில் ஓடி வந்தது!



"சாந்தி! சாந்தி! இதோ பார், நாவல் பழம்! உனக்கு ரொம்பப் பிடிக்குமே!" என்று கூறியவாறே ஓடி வந்தான், நாவல் மரத்தடியில் நின்ற இளைஞன். அவன் கைநிறைய நாவல் பழங்கள் இருந்தன.

ஒன்றாகச் சேர்த்துப் பிடித்துக் கொண்டிருந்த நாவல் பழங்களை இரு பிரிவுகளாக்கிக் கையைப் பிரித்த அவன் வலது கைப் பழத்தை என்னிடமும், இடது கைப் பழத்தை அந்தப் பெண்ணிடமும் நீட்டியபடி, "சார்! இந்தாருங்கள் உங்கள் பங்குப் பழம்!" என்றான்.

அந்தப் பெண் பெரும் வியப்புடன் என்னை ஏறிட்டு நோக்கினாள். என் உடலில் சிறு அதிர்ச்சி. ஆனாலும் நான் அதை அப்போது பொருட்படுத்தவில்லை.

பார்வையைத் திருப்பிய அந்தப் பெண், "என்னடா பாலு! என்னைத் தனியாக நிற்க வைத்துவிட்டு நீ பாட்டுக்குப் போய் விட்டாயே?" என்றாள்.

"அதுதான் துணைக்கு சாரை அனுப்பி வைத்தேனே!" என்று பாலு கள்ளமின்றிச் சொன்னபோது நான் சிரித்தேன். அவளுக்குக் கோபம் பொங்கி வந்தது.

"இந்த சார் யார் தெரியுமா சாந்தி! என் கல்லூரி நண்பன் பாபுவின் மாமாதான்! பாபு அடிக்கடி சொல்லுவான், 'என் மாமா பீஷ்மாச்சாரியின் தம்பியாகப் பார்க்கிறார்!' என்று. அது முடியுமா இவரால்!" என்று சிரித்தான் பாலு.

சாந்தி 'கலகல'வென்று சிரித்தாள். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

கல்லூரியில் படிக்கும் என் அக்கா பிள்ளை பாபுவின் நண்பர்கள் வீட்டுக்கு வருவார்கள். நான் அவர்களை அதிகம் கவனித்ததே யில்லை. அவர்கள் என்னைக் கவனித்ததுடன் என் விரதத்தையும் தெரிந்து கொண்டிருப்பார்கள் என்று நான் நினைக்கவில்லை.

என் விரதத்தைக் குறித்து நான் பலமுறை பெருமைப் பட்டதுண்டு. ஆனால் இன்றோ சாந்தியின் சிரிப்பு என்னை உலுக்கியது. மனம் சிறுமை கொண்டு தவித்து வெட்கியது. என் மீதே எனக்குக் கோபம் வந்தது. 'அசட்டுத்தனமான விரதம்! அவள் என்ன நினைப்பாள்?' இப்படி யொரு எண்ணம் என்னைத் தலை கவிழ வைத்தது.

'சே, சே! இது என்ன பலவீனம்!' என்று உறுதியை ஒன்று சேர்த்துத் தூக்கி நிறுத்த முயன்றேன். ஆனால் சாந்தியின் கண்கள் அடிக்கடி என்னையும், என் கொள்கைகளையும் எடை போடத் தொடங்கவே, என் உறுதி தொய்ந்தது. அவளது அதரங்களில் நெளிந்த குறும்புப் புன்னகை, 'என் உறுதியை அடியோடு வீழ்த்தி விடுமோ?' என்று கூட அஞ்சத் தொடங்கினேன்.

"பாண்டவர் படுக்கை! இதோடு பதினாறு சிற்பங்களைப் பார்த்து விட்டீர்கள் சார்!" என்று வழிகாட்டி சொன்னதும் பாலு தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான்.

"சார்! மணியாகிவிட்டது! இப்போதே புறப்பட்டால்தான் திருக்கழுக்குன்றத்தில் கழுகுகள் வந்து பொங்கல் சாப்பிடுவதைப் பார்க்க முடியும். திரும்பி வந்து மற்ற சிற்பங்களைப் பார்த்து விடலாம்" என்று சொல்லிய பாலு சிற்ப மண்டபத்திலிருந்து இறங்கி வேகமாக நடந்தான்.

"என்ன பாலு, அவரையும் சேர்த்துச் சேர்த்துப் பேசுகிறாயே? அவருக்கு வர விருப்பம் இருக்கிறதோ இல்லையோ?" என்று சாந்தி பாலுவைக் கடிந்தாள்.

"அவருக்கு வர விருப்பம் இல்லை என்றால் நின்று கொள்கிறார்; நீ ஏன் அவருக்காகக் காத்துக் கொண்டு நிற்கிறாய்?" எனப் 'பளிச்' சென்று பாலு கேட்டதும்தான் சாந்தி நிடுக்கிட்டு முகம் சிவக்க முன்னால் நடந்தாள்.

நான் திகைத்தேன். 'சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நின்று விடு' என்று தொய்ந்து நின்ற உறுதி என்னை உதைத்தது. 'உனக்காகக் காத்து நிற்கிறாள் அவள்' என்று அவள்அன்பு மனம் என்னை உலுக்கி இழுத்தது.

"இரு, பாலு! இதோ வந்து விட்டேன்!" என்று நானும் சொல்லிக் கொண்டே அவர்களோடு பரபரப்புடன் புறப்பட்டேன்.

மலைமீது உறையும் ஸ்ரீ வேதகிரீஸ்வரரைத் தரிசனம் செய்து கொண்டு கழுகுகள் வந்து அமரும் பாறைக்கருகில் உள்ள மண்டபத்தை யடைந்தோம். மண்டபத்தில் ஏராளமாக மக்கள் குழுமியிருந்தனர்.





ஒருவர்:—இந்தாப்பா நீ பாடாமல் இருப்பதற்கு இரண்டணா!

பிச்சைக்காரன்:—ஐயா! கொஞ்சம் கூடப் போட்டுக் கொடுங்க; வேறு சிலர் நான் பாடாமல் இருப்பதற்கு எட்டணா வரையிலும் கொடுப்பது வழக்கம்.

---

சிறிது நேரத்துக்கெல்லாம் கழுகைத் தரிசனம் செய்து கொண்டு மறுபடியும் மாமல்லபுரத்துக்குத் திரும்பினோம்.

மாமல்லபுரம் திரும்பிய நாங்கள் வழிகாட்டியின் உதவியுடன் மற்ற சிற்பங்களை ஒவ்வொன்றாகப் பார்க்கத் தொடங்கினோம். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு அந்தப் பழைய காலக் கல் மணிக்கூண்டை அடைந்து ஏறிச் சுற்றி வந்தோம்.

வழிகாட்டியும், பாலுவும் வேகமாகச் சுற்றிக் கொண்டு இறங்கி விட்டனர். நான் மெதுவாக எல்லாவற்றையும் ரசித்துப் பார்த்தபடி வந்து கொண்டிருந்தேன். எனக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த சாந்தி மிகக் குறுகலான மூன்றாவது பக்கம் வந்தபோது கீழேயுள்ள கிடுகிடு பள்ளத்தைப் பார்த்துப் பயந்து விட்டாள். பயத்தால் முன்னேற முடியாமல் தவித்த அவளை அருகில் சென்று அழைத்து வந்திருக்கலாம். ஆனால் 'பீஷ்ம விரதத்தை' மேற்கொண்டுள்ள மனம் முரண்டு செய்யவே சற்றுத் தயங்கி விட்டு மெள்ள அடியை அவள் பக்கம் திருப்பினேன். அதற்குள் சமாளித்துக் கொண்டுவிட்ட சாந்தி, "வேண்டாம்; நீங்கள் எனக்காகச் சிரமப்பட வேண்டாம். நானே வந்து விடுகிறேன்!" என்றபடி முன்னேறத் தொடங்கினாள்.

என் தயக்கத்தைப் புரிந்து கொண்டுவிட்ட சாந்தியின் புத்திகூர்மை என்னை வியக்கச் செய்தது. என்னையும் மீறி என் விழிகள் அவள் வதனத்தைக் கூர்ந்து நோக்கின.

பயத்தாலும், வெட்கத்தாலும் சாந்தியின் முகத்திலே முத்து முத்தாக வியர்வை அரும்பியது. அவளது அழகிய விழிகள் என் மனக் கட்டைத் தளர்த்தித் தடுமாறச் செய்தன.

நான் என்னையும், இடத்தையும் மறந்து கால்களைப் பெயர்த்து வைக்கப் போனபோது, "ஐயோ! நில்லுங்கள்!" என்றபடி என் சட்டையைப் பலமாகப் பற்றியிழுத்து நிறுத்தினாள் சாந்தி. அப்போதுதான் என் நிலை எனக்குப் புரிந்தது. நான் பெயர்த்த அடியை வைத்திருந்தால், பள்ளத்தில் விழுந்து, பாறையில் மோதிச் சிதறி விருப்பேன். "கீழே விழ இருந்தீர்களே! நல்லவேளை! தயங்காமல் இழுத்து நிறுத்தி விட்டேன். இல்லாவிட்டால்...?" என்ற சாந்தி என் முகத்தை ஊடுருவி நோக்கினாள்.

அவள் வார்த்தை என்னும் சாட்டையால் தாக்குண்டு நிமிர்ந்தவன், அவள் பார்வையின் வேகத்தைத் தாள முடியாமல் திரும்பி வேகமாக நடந்தேன். 'எவ்வளவு அழகாக என் மடத்தனத்தைச் சுட்டிக் காட்டிவிட்டாள்!'

என் ஆத்திரமெல்லாம் பாலுவின் மீது பாய்ந்தது. "என்ன, பாலு! கூட இருந்து அழைத்துவர வேண்டாமா?" என்று நான் அதட்டியதும் அவன், "யாரை? உங்களையா, சார்?" என்று திரும்பினான்.

சாந்தி மெல்லச் சிரித்தாள். என்னால் சிரிக்க முடியவில்லை.

சிற்பச் செல்வங்கள் முழுவதையும் பார்த்து விட்டுத் திரும்பிய நாங்கள், ஜலசயனப் பெருமாளையும் நிலமங்கைப் பிராட்டியாரையும் வலம் வந்து பணிந்து விட்டுப் பஸ்ஸைப் பிடித்து ஏறினோம்.

இடையில் இருந்த திருப்போரூரில் இறங்கி முருகவேளையும் வலம் வந்து அர்ச்சனை செய்தோம். அர்ச்சனையை முடித்துப் பிரசாதம் வழங்கிய அர்ச்சகர் என்னையும் சாந்தியையும் தம்பதிகளாக நினைத்துவிட்டாரோ என்னவோ, "சீக்கிரமே பால முருகன் பிறந்து உங்களை மகிழ்விப்பான்!" என்று கூறினார்.

'களுக்'கென்று சிரித்த பாலுவின் முகத்திலே குறும்புத்தனம் பரவியது. வேகமாக நகர்ந்து கொண்ட சாந்தியின் முகத்திலே கோபம் என்னும் கொள்ளுமாக வெடித்தது.

தரிசனத்தை முடித்துக் கொண்டு நாங்கள் பஸ் நிலையத்துக்கு வந்ததும் சாந்தி, "பாலு! வரும் பஸ்ஸில் அவர் போகட்டும். நாம் அடுத்த பஸ்ஸில் போகலாம்" என்றாள்.

"இதுதான் கடைசி பஸ். இதை விட்டால் இரவு வேறு பஸ் கிடையாது. ஆகையால் நாம் வரும் பஸ்ஸில் ஏறிக்கொண்டு விடுவோம். அவர் அதோ அந்தக் குளத்துப் படிக்கட்டில் தங்கி விட்டுக் காலையில் வரட்டும்!" என்றான் பாலு.

"கடைசி பஸ்ஸா! அது தெரியாமல் சொல்லிவிட்டேன்!" என்றவள் மன்னிப்புக் கோரும் முறையில் என்னைப் பார்த்தாள்.

முகத்தைத் திருப்பிக் கொண்ட நான், "பாலு! நான் ஏதாவது ஒரு ஓட்டலில் தங்கி விட்டுக் காலையில் வருகிறேன்" என்றபடி முன்னால் நடக்கத் தொடங்கினேன்.



ஒன்றல்ல — இரண்டு !

# சிங்கப்பூருக்கும் ஜாகர்தாவுக்கும்

## வாரம் இரு முறை சர்வீஸ் !

இப்பொழுது சிங்கப்பூருக்கும் ஜாகர்தாவுக்கும் வாரம் இருமுறை சர்வீஸ் இருக்கிறது. எமது ஸூப்பர் கான்ஸ்டலேஷன் விமானங்களில் சுகமான டூரிஸ்ட் வகுப்பிலோ அல்லது சொகுசான வசதிகளுடன் கூடிய முதல் வகுப்பிலோ பிரயாணம் செய்யுங்கள்.

**பிரதி சனிக்கிழமை** பம்பாய் . மதராஸ் . சிங்கப்பூர் . ஜாகர்தா

**பிரதி திங்கட்கிழமை** பம்பாய் . மதராஸ் . சிங்கப்பூர் . ஜாகர்தா . ஸிட்னி

**ஏயர்-இந்தியா இன்டர்நேஷனல்**

என்னைத் தடுத்து நிறுத்திய பாலு, "சார்! இங்கு தங்கவே இடம் கிடைக்காது. பேசாமல் வாருங்கள்!" என்றான்.

"இல்லே, பாலு! நீ சொன்னபடி இந்தக் குளக்கரையிலேயே.." நான் முடிப்பதற்குமுன் இடைமறித்த பாலு, "சும்மா இருங்கள், சார்! சாந்தி அழுதுவிடப் போகிறாள்!" என்றான். நான் திரும்பினேன். சாந்தியின் கண்களில் நீர் முட்டி நின்றது.

கடைசி பஸ் ஆகையால் கூட்டம் நெரித்தது. முண்டியடித்து ஏறி மூலைக்கு ஒருவராக உட்கார்ந்தோம்.

சென்னை சேர்ந்து பஸ்ஸை விட்டு இறங்கினோம். ஒரு நீண்ட பெருமூச்சுடன் சாந்தியை விழுங்கி விடுவதுபோல் பார்த்து விட்டுக் கிளம்பினேன்.

அக்காவும், அத்திம்பேரும் பெண் பார்ப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார்கள். பெண்ணைப் பெற்ற அந்த மனிதரும் சளைக்கவில்லை. அடிக்கடி வந்து நிர்ப்பந்திக்கத் தொடங்கினார்.

'பூபாரத்தை அதிகரிக்காமல் இருக்க வேண்டும்' என்று சங்கல்பம் செய்துகொண்ட ஒரு நல்ல காரியத்துக்கு எத்தனை இன்னல்கள்! பெண்ணைப் பெற்றவரும், அத்திம்பேரும் என் சங்கல்பத்தின் உறுதியை உடைக்க முயன்று கொண்டிருந்தார்கள். நான் மாமல்லபுரத்தில் கண்ட மங்கை சாந்தியோ அந்தச் சங்கல்பத்தின் மீதே ஏறி நின்று புன்னகை செய்தாள். ஆம்! சாந்தியின் நினைவு என் மனச் சாந்தியையே அபகரித்து விட்டது.

மாமல்லபுரத்திலிருந்து திரும்பிய இந்த ஒரு வாரமாக, யாராவது புது மனிதர் அத்திம்பேரைக் காணவந்தால், 'அவர் பாலுவின் தகப்பனாராக இருக்கக் கூடாதா?' என்று மனம் ஏங்கத் தொடங்கியது! இப்படி என் மனம் மாறிய விந்தையை என்னாலேயே நம்ப முடியவில்லை.

ஒரு வாரத்துக்கு மேலாகியும் பாலுவின் தந்தை வரவில்லை. 'ஒரு சின்னப் பையன் சொன்னதை வைத்துக்கொண்டு.....' என்று என் புத்தியே என்னை இடிக்கத் தொடங்கியது. பெண் பார்க்க வரும்படி அந்த மனிதரும் என் அத்திம்பேரும் துளைத்தெடுத்தார்கள். நான் என்ன மறுத்தும் அவர்கள் கேட்பதாக இல்லை. ஆகவே அன்று திடுதிப்பென்று நான் ஊருக்குக் கிளம்பி விட்டேன். அக்காவும் அத்திம்பேரும் என்னைத் திட்டினார்கள். நான் அதைப் பொருட்படுத்தவில்லை.

ரயில் எழும்பூரை விட்டுப் புறப்படும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. என் மேலுள்ள கோபத்தால் என்னை வழியனுப்ப என் அத்திம்பேர் வரவில்லை. புறப்படும் நேரம் நெருங்க நெருங்க என் மனம் வேதனையால் தவித்தது. அக்கா, அத்திம்பேரின் மன வருத்தம், சாந்தியின் நிலவு முகம் இப்படி என் மனத்தில் பல் வேறு எண்ணங்கள். எண்ணங்களின் எதிரொலி போன்று கூட்டத்தில் பாலுவின் குறும்புக்களை பொருத்திய முகம்!

அவசரமாக என் பெட்டியருகில் ஓடி வந்த பாலு, "என்ன சார், இது! கடையில் காலை வாரி விட்டுவிட்டீர்களே?" என்றான்.



வியப்புடன் அவனைப் பார்த்து, "என்ன சொல்கிறாய், பாலு! நான்தான் ஒரு வாரம் உன் தந்தைக்காகக் காத்திருந்தேனே!" என்றேன் என்னையும் மீறிய ஆத்திரத்தில்.

வண்டி ஊதிவிட்டுக் கிளம்பத் தொடங்கியது. பதறிய பாலு, "சார், சார்! இறங்குங்கள்! ஒரு வாரமாக உங்களைப் பெண் பார்க்க அழைக்கிறாரே, அவர்தான் சாந்தியின் தந்தை. தெரியாதா?"

"என்ன!" என்று வியப்புடன் கூவியவன் எப்படித்தான் பெட்டியுடன் இறங்கினேனோ, நான் அறியேன்.

இறங்கிய வேகத்தில் பெட்டி மூலை பட்டுக் காலில் காயம். ஆனாலும் அப்போது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் அது ஒரு பொருட்டாகப் படவில்லை.

பிறகு பாலுவின் உதவியுடன் ஒருவித முடிவு செய்து கொண்டு அக்காவின் இல்லத்துக்குத் திரும்பினேன்.

"இதோ பாருங்கள், அத்திம்பேர்! உங்கள் அதிருப்தியுடன் புறப்பட்டதால் கல் தடுக்கி விழுந்து விட்டேன். அதனால் உங்களைத் திருப்திப் படுத்துவது என்று தீர்மானித்துத் திரும்பிவிட்டேன். நீங்களும் அக்காவும் சென்று பெண்ணைப் பாருங்கள். திருப்தியாக இருந்தால் கலியாணத்தை நிச்சயித்து விடுங்கள்!" என்றேன்.

அக்கா திகைத்தாள்! அத்திம்பேர் அதிசயித்தார்! ஆனாலும் அத்திம்பேர் துணிந்து காரியத்தில் இறங்கினார். கலியாணம் நிச்சயிக்கப்பட்டு, என் சகோதரர்களுக்கெல்லாம் முறைப்படி அறிவிக்கப்பட்டது.

பெங்களூரிலிருந்து வந்து இறங்கிய என் இரண்டாவது அண்ணாவும், அவன் மனைவியும் அப்பொழுதே பெண் பார்க்கப் புறப்பட்டு விட்டார்கள். 'என் மைத்துனர் அதிர்ஷ்டசாலிதான்' என்ற பீடிகையுடன் பெண்ணின் அழகைப் பிரமாதமாக வர்ணித்த என் சின்ன மன்னி இடையே சிறு பொறியையும் வீசினாள். "....ஆனால் பெண் என்னவோ உற்சாகமாகவே இல்லை. கண்கள்கூடச் செத்தாற்போல இருந்தது" என்றாள். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

'சாந்தி ஏன் அழ வேண்டும்? என்னை மணக்க அவளுக்கு விருப்பமில்லையா? அன்று மாமல்லபுரத்தில் அவள் முகத்தில் கண்ட மகிழ்ச்சி....? பல் நிலையத்தில் அகல விரிந்த அவள் அழகிய விழிகள் அறிவித்த செய்திகள்.? எல்லாமே என் பிரமைதானா....? சே! சே!! இதென்ன தொல்லை, இப்படி என் மனத்திலே வேதனை விரிந்தது. வீட்டில் இருக்கை கொள்ளாமல் வெளியில் கிளம்பினேன்.

சில்லென்று வீசிய கடற்காற்று கூட என் மனப் புழுக்கத்துக்கு இதமாக இல்லை.

"சார்! உங்களை எங்கெல்லாம் தேடுவது!" என்ற பாலுவின் குரல் கேட்டுப் பரபரப்புடன் திரும்பிப்பார்த்தேன்.

"சார்! நான் விளையாட்டாக ஆரம்பித்த விஷயம் விபரீதமாகிவிடும்போல் இருக்கிறது. நீங்கள் வந்துதான் சாந்தியைச் சமாதானம் செய்ய வேண்டும், அப்பா, அம்மாகூடக் கடைக்குச் சென்றிருக்கிறார்கள். நீங்கள் கிளம்புங்கள்" என்று அவன் அவசரப் படுத்தியபோது, எனக்கு 'அப்படியே கடலில் குதித்து உயிரை விட்டுவிடலாமா?' என்று தோன்றியது. இருந்தும் சாந்தியை நேரில் கண்டு விஷயத்தை அறியும் ஆவலுடன் புறப் பட்டேன். இடைவழியில் பாலு முழு விஷ யத்தையும் விவரமாகச் சொல்லக் கேட்டதும் நான் திகைத்தேன்.

வீணையை மீட்டிப் பாடிக் கொண்டிருந்த சாந்தி என்னைக் கண்டதும் திகைத்துப் போய் விட்டாள்.

"உங்களையே நினைந்து உருகும் இவளை மணந்து கொண்டு விடுவதாகத் தைரியம் சொல்லுங்கள், சார்!" என்று பாலு சொன்ன தும், சாந்தியின் முகம் சிவந்து விட்டது.

"போதுமே சமர்த்து! பத்திரிகை கூட அடிக் கக் கொடுத்த பிறகு இதென்ன பேச்சு?"

"என்ன பிரமாதம் சாந்தி, மாங்கல்ய தாரணம் ஆன பிறகு கூட எத்தனையோ கலியாணங்கள் நின்று விடுவதில்லையா?" என்று பாலு சிரிக்காமல் சொன்னபோது நான், "களுக்" கென்று சிரித்து விட்டேன். விஷயம் விளங்காமல் சாந்தி என்னை வியப் புடன் நோக்கினாள்.

"சாந்தி! பாலு வேண்டுமென்றே உன்னை அழ வைக்கிறான். அடிக்கக் கொடுத்திருக்கும் பத்திரிகையில், உன் பெயரோடு இணைந்திருப் பதும் என் பெயர்தான்! அன்று வந்து உன் னைப் பார்த்துப் போனதும் என் அக்கா, அத்திம்பேர்தான்! உன்னைப் பார்த்துவிட்ட தால் அன்று நான் வரவில்லை. அதை வைத் துப் பாலு உண்மையைச் சொல்லாமல் உன்னை ஏமாற்றியிருக்கிறான்" என்று முடித்தேன்.

வியப்பால் விரிந்த கண்களுடன் நின்ற சாந்தி கீழே விழாமல் இருப்பதற்காக மேஜை யின் விளிம்பைப் பற்றிக் கொண்டாள்.

"மாப்பிள்ளை சார்! இதற்குமேல் இன்று அனுமதி கிடையாது, கிளம்பி விடுங்கள்" என்று பாலு எச்சரித்ததும் கடைக்குச் சென்ற வர்கள் திரும்பி வந்து விட்டார்கள் என்பதை உணர்ந்து கொண்டேன்.

பாலுவின் குறும்பு இதோடு நிற்கவில்லை. கலியாணத்தன்று மாலை எல்லாருடைய முன் னிலையிலும் முழு விஷயத்தையும் உடைத்து என் மானத்தையே வாங்கி விட்டான்.

நான் பெண் பார்க்க மறுத்து மாமல்லபுரம் கிளம்புவதைத் தந்தையின் மூலம் அறிந்த பாலு, அப்போதே என் விரதத்தை உடைக்க ஒருதிட்டத்தையும் வகுத்துவிட்டான். தந்தை தவிர மற்ற யாருக்குமே விஷயத்தை அறி விக்காமல் சாந்தியுடன் அவனும் மாமல்ல புரம் கிளம்பி வந்திருக்கிறான்....நடந்த விஷ யங்களை வர்ணனையுடன் பாலு விவரித்த போது அத்தனை பேரும் ஆளுக்கு ஒரு சொல்லால் என்னை உலுக்கி எடுக்கத் தொடங்கி விட்டார்கள்.

'களுக்'கென்ற சிரிப்பொலியால் என் சிந்தனை தடைப்பட நிமிர்ந்தேன். இடையில் எங்கள் செல்வத்தைச் சுமந்த வண்ணம் சாந்தி வந்து கொண்டிருந்தாள்.

"என்ன இப்படி உட்கார்ந்து விட்டீர்கள்? ஸ்டேஷனுக்குப் போகவேண்டாமா? அக்கா, அத்திம்பேர் வரப் போவதை மறந்து விட்டீர் களா?" என்றாள்.

"இதோ கிளம்பி விட்டேனே. பாலு கூட அந்த வண்டியில் வரலாம்" என்று சொல்லிக் கிளம்பியவன், அவள் இடுப்பிலிருந்த அழுதத் தின் கன்னத்தை நிமிண்ட அவன் மீண்டும், 'களுக்' கென்று சிரித்தான்.




நங்கூரம் மார்க்

புதிய தயாரிப்பு

# நவ்-தால்

## நவீன பித்தளை பாட்லாக்

60 ஆண்டுகளாக பலவித ரகமான சிறந்த பூட்டுகள் தயாரித்த முதிர்ந்த அனுபவத்தைக்கொண்டு, கோத்ரெஜ் நவ்-தால் பாட்லாக் தயாரிக்கப்பட்டது. அது உறுதியாகவும், பார்ப்பதற்கு அழகாகவும் இருக்கும். சிறந்த முறையில் அதில் அமைக்கப்பட்டுள்ள இயந்திர நுணுக்கங்கள், இதர சாவிகள் திறப்பதற்கு இடம் கொடுப்பதில்லை—நவ்-தால் பாட்லாக்கை அதற்கென்றே தயாரிக்கப்பட்ட சாவிதான் திறக்கும்.

★ பித்தளை லீவர்களும் கவசமும்

★ உறுதியான தயாரிப்பு

★ ஆணியால் இறுக்கப்படாதது கச்சிதமாக மெஷினால் இணைக்கப் பட்ட உறுதியான ஜாயின்ட்டுகள்

★ துருவைத் தடுக்கும் காட்மியம் கோட்டிங் கொடுக்கப்பட்ட வளையம்




7 லீவர்கள்
சைஸ் : 2¼"
ரூ. 8.50 ந. பை. தான்

கோத்ரெஜ் ஷோரூம்களிலும், ஸ்டாக்கிஸ்ட்களிடமும், இரும்பு சாமான் கடைகளிலும் கிடைக்கும் . . .




பாதுகாப்பு
இஞ்சினீரிங்கில்
முதன்மையானவர்கள்




இரண்டாவது சோழப் பேரரசின் இணையற்ற பொற்காலம். மகாமன்னர் ராஜராஜ சோழரின் தலைமையின் கீழ்த் தமிழகம் தரணி முழுதும் புகழ் பரப்பிக் கொண்டிருந்தது.

வீராதி வீரரும், சவிரக்கம் கொண்டவரும், சகவர பக்தருமான ராஜராஜ சோழர் தம் அருமைத் தமக்கை குந்தவைப் பிராட்டியின் தாண்டுதலின் பேரில் பிருகதீசுவரர் ஆலயத்தை அமைக்கத் திட்டம் வகுத்து முடிவு செய்து விட்டார். வேலை மும்முரமாக ஆரம்பமாயிற்று. ஆயிரக் கணக்கான சிற்பிகளும், சித்திரக்காரர்களும், கொத்தர்களும், சிற்றுட்களும் அல்லும் பகலும் பாடுபட்டனர். சிற்பப் பகுதிக்குக் கந்தப்ப ஸ்தபதி தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார்.

கந்தப்பஸ்தபதி சிற்பக் கலையில் மகா திறமைசாலி! அதி மேதாவி! தமிழ்நாட்டிலேயே அவர்தான் பெரும் சிற்பி. நூற்றுக்கு மேற்பட்ட விருதுகளைப் பெற்றிருந்தார். ராஜராஜ சோழரின் அந்தரங்க அன்பும் அவருக்குக் கிடைத்திருந்தது. அவைக்களத்தில் அவருக்கு ஒரு தனி இடம் உண்டு.

தம் கீழ் வேலை செய்யும் எல்லாச் சிற்பிகளிடமும் அன்போடு நடந்து கொண்டார். ஒவ்வொருவருக்கும் ஒரு வேலையை ஒப்படைத்தார். சந்நிதிக்கு எதிரே வைக்க வேண்டிய நந்திதேவரின் சிற்பத்தை, தாம் உருவாக்க விரும்பினார். அதற்காகப் பல நாட்கள் ஆராய்ச்சி செய்து ஒரு பெரிய கல்லைத் தம் குடிசை வாசலுக்குக் கொண்டு சென்றார். தமது ஒரே மகள் வில்வமாலையின் உதவியைக் கொண்டு மிகுந்த எச்சரிக்கையோடு சிற்பத்தை அமைக்கத் தொடங்கினார்.

கந்தப்ப ஸ்தபதியின் தலைமையின் கீழ் பணி புரிவதை எல்லாச் சிற்பிகளுமே பாக்கியமாகக் கருதினார்கள். ஆனால் கலிங்க நாட்டிலிருந்து தாடியும் மீசையுமாக வந்திருந்த சிற்றுணி மாறன் என்ற சிற்பி மட்டும் அவருடைய தலைமையை விரும்பியதாகத் தெரியவில்லை. அடிக்கடி அவரைப்பற்றி அதிருப்திப்பட்டுக் கொண்டான். இளமைத் துடிப்பும் வாலிப மிடுக்கும் மிகுந்திருந்த அவன் சந்தர்ப்பம் கிடைத்த பொழுதெல்லாம் அவருடைய சிற்பத்தின் அமைப்பிலும், லாவண்யத்திலும் குறைகள் கண்டு பிடித்துக் கூறினான்.

இதனால் கந்தப்ப ஸ்தபதியின் மேல் அளவற்ற பக்தி உள்ள மற்றச் சிற்பிகள் சிற்றுணி மாறனை வெறுக்க ஆரம்பித்தார்கள். இவர்கள் எல்லோரையும் விடக் கந்தப்ப ஆசாரியின் ஏகபுதல்வியான வில்வமாலை தான் அவனை மிகவும் வெறுத்தாள். அவனுடைய தாடியும் மீசையும்சடைபிடித்த தலை முடியும் அவனுக்கு மேலும் வெறுப்பை அளித்தன. எப்பொழுதாவது கந்தப்பரைத் தேடிக் கொண்டு அவன் வந்தால் அவள் கண்ணிலேயே படமாட்டாள். அவன் குடிசையை விட்டுப் புறப்படும் வரையில் அவளுக்கு நிலைகொள்ளாது. ஆனால் கந்தப்ப ஸ்தபதி மட்டும் மௌனமாக இருந்தார். மற்றச் சிற்பிகளை நடத்துவதைப் போலவே சிற்றுணி மாறனையும் நடத்தினார். அவன் தம்மைக் குறை கூறுவதைப் பற்றி அவர் கொஞ்சங்கூடக் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை.

அன்று கந்தப்ப ஆசாரியின் குடிசையும் அதைச் சுற்றி இருந்த அழகான பூந்தோட்டமும் மிகுந்த பாக்கியம் செய்திருக்க வேண்டும். இல்லா விட்டால் அரண்மனைவாசிகளின் பாதங்கள் இந்த அதிகாலைப் பொழுதில் அந்த ஏழைக் கலைஞரின் இருப்பிடத்தை மிதிக்குமா, என்ன?

ஆம்! நேற்றே பூர்த்தியாகிவிட்ட நந்தி தேவரின் அமைப்பைப் பார்ப்பதற்காகத்தான் அவர்கள் வந்திருந்தார்கள். ராஜராஜ சோழரும், குந்தவைப் பிராட்டியும், மற்ற மந்திரி பிரதானிகளும், இன்னும் சில முக்கியஸ்தர்களும் நந்தியைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினார்கள். எல்லோருடைய முகங்களிலும் புன்னகை மின்னியது.

ராஜராஜர் மிகுந்த சந்தோஷத்தோடு, "கந்தப்பரே! உம்முடைய கைத்திறனை யெல்லாம் இதில் காட்டி யிருக்கிறீர் என எண்ணுகிறேன். உம்முடைய நூற்றுக்கணக்கான படைப்புக்களில் இதுதான் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. ஆகா! என்ன அற்புதமான முகபாவம்?..." என்று மேலும் சொல்லி முடிப்பதற்குள், "பொறுங்கள், மகாராஜா!" என்ற குரல் கேட்டு எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். தாடி மீசையோடு வேர்க்க விதிர் விதிர்க்க வேகமாக வந்து கொண்டிருந்தான் சிற்பி சிற்றுணிமாறன்.

அவனை அந்த நிலையில் பார்த்ததும் கந்தப்ப ஸ்தபதி புன்னகை பூத்தார். வில்வமாலை நெருப்பைக் கக்கினாள். மற்றவர்களோ ஆச்சரியப்பட்டார்கள்.

"மகாராஜா! உண்மையை அறியாமல் மகாசிற்பி கந்தப்ப ஸ்தபதியாரை அளவுக்கு அதிகமாகப் புகழ்ந்து விட்டீர்கள். வெளி அழகை மட்டும் பார்த்து மனத்தைப் பறி கொடுத்து விட்டீர்கள். ஆனால் உள் அழகு... ஆமாம், மகாராஜா. அவருடைய சிற்பத்தில் குறை ஏதும் இல்லையேயொழிய அந்தச் சிற்பத்தை உருவாக்க அவர் தேர்ந்தெடுத்த கல்லில்தான் குறை இருக்கிறது."

ராஜராஜர் கந்தப்பரைப் பார்த்து, "கந்தப்பரே! இந்த இளஞ்சிற்பி நீர் தேர்ந்தெடுத்த கல்லில் குறை இருப்பதாகச் சொல்கிறானே? அதைப் பற்றி என்ன நினைக்கிறீர்?" என்றார்.

அதற்குக் கந்தப்பர் "மகாராஜா! ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு நிலைபெற்றிருக்க வேண்டிய ஒரு தெய்வீகச் சிலைக்குக் குறையற்ற கல்லைத் தேர்ந்தெடுப்பது எவ்வளவு அவசியம் என்பதைத் தாங்கள் அறிவீர்கள். எத்தனையோ சோதனைகளுக்குப் பிறகுதான் இதைத் தேர்ந்தெடுத்தேன். இருந்தாலும் என்னை அறியாமலேயே நான் ஏமாந்து போய் இருக்கக் கூடும். என்னால் கண்டுபிடிக்க முடியாத அந்தக் குறையை அவன் அறிந்திருக்கிறான் என்றால் அதற்காக நான் பெருமைப் படுகிறேன். இப்பொழுதே அதை அவன் நிரூபித்துக் காட்டட்டும். அதை நிரூபிக்க முடியாவிட்டால்........"

"நிரூபிக்க முடியாவிட்டால் அவருக்கு நான் நிரந்தர அடிமையாகி விடுகிறேன். நிரூபித்து விட்டால் அவர் வெறும் அபகீர்த்தி அடைவது மட்டும் போதுமா?" என்றான் சிற்றுளி மாறன்.

"நியாயமான கேள்விதான்" என்றார் மன்னர் ராஜராஜர்.

"மகாராஜா! குறையை நிரூபித்துக் காட்டி விட்டால் என்னைவிட அவன் பெரிய சிற்பியாகி விடுகிறான். ஆகவே நான் இது வரையில் பெற்றுள்ள விருதுகளையெல்லாம் இழந்துவிட்டு அவனுக்கு அடிமையாகி விடுகிறேன்" என்றார் கந்தப்பர்.

"அது தவறு, கந்தப்பரே. வயது முதிர்ந்த ஒருவர் ஒரு இளைஞனுக்கு அடிமையாவது என்பது நமது ஆட்சியில் இல்லாதது. எனவே நீர் தோல்வியுற்றால் உம்முடைய மகள் வில்வ மாலையை இவனுக்கு மணம் முடித்து வைத்து விடும். அவன் தோற்றுப் போனால் காலம் முழுவதும் உமக்கு அடங்கிப் பணி புரிவான். என்ன சரிதானே?" என்று இருவரையும் பார்த்துக் கேட்டார் மகா மன்னர் ராஜராஜர்.

சிற்றுளி மாறன் சட்டென்று 'சரி' எனக் கூறினான். ஆனால் கந்தப்பர் சற்றுத் தயங்கிய பிறகுதான் சரி என்று கூறினார்.

பிறகு சிற்றுளிமாறன் ராஜராஜரைப் பார்த்து, "ஒரு சிறிய துணி தைக்கும் ஊசி தேவை" என்றான்.

அடுத்த கணம் ஊசி வந்து சேர்ந்தது. சிற்றுளிமாறன் அதை வாங்கிக் கொண்டு சிற்பத்தின் அருகில் போனான். அதன் இடது கண்ணின் மேல் கோடியில் சிற்றெறும்பு வளையைப் போல் ஒரு சன்னமான துவாரம் தெரிந்தது. நன்றாகக் கூர்ந்து கவனித்த பிறகுதான் அது தெரிந்தது. அதில் ஊசியை நுழைத்து வேகமாகத் தள்ளி விட்டான். பின்னர் மறுபக்கம் வந்து நந்தியின் முன் வலது கால் துடைக்கு அருகில் கட்டிக் காண்பித்தான். எல்லோரும் வியப்போடு அவன் கட்டிக் காட்டிய இடத்தைப் பார்த்தார்கள். அங்கே, இடது கண்ணின் ஓரத்தில் வைத்துத் தள்ளிய அந்த மெல்லிய ஊசி விழுந்து கிடந்தது.

சிற்றுளி மாறன் அந்த ஊசியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு எல்லோரை



யும் பார்த்துக் கம்பீரமாகக் கூறினான்: "இந்தக்கல்லில் கண்ணுக்குத் தெரியாத 'போறை' இருப்பது இவர் கல்லைத் தேர்ந்தெடுத்த அன்றே எனக்குத் தெரியும். இருந்தாலும் வேண்டுமென்றுதான் அவரிடம் தெரிவிக்கவில்லை. இது கண்ணுக்குத் தெரியாத போறைதான். என்றாலும் வெய்யிலாலும் மழையாலும் வெகு சீக்கிரம் பாதிக்கப்பட்டுத் துண்டு துண்டாக இற்று விழுந்து விடும் கோவிலில் பிரதிஷ்டை செய்த ஒரு தெய்வச் சிலை அப்படி வெடித்து விழுந்தால் அதனால் நாட்டுக்கு ஏற்படும் கெடுதிலை எல்லோரும் அறிந்து கொள்வீர்கள்..."

அவன் பேச்சை எல்லோரும் ஏற்றுக் கொண்டார்கள். கந்தப்ப ஸ்தபதி தம் பெருமைக்குப் பங்கம் நேர்ந்ததற்காக அணுவளவு கூட வருந்தவில்லை. மாறாக மிகுந்த மகிழ்ச்சி அடைந்தவரைப் போல் காணப்பட்டார். ஆனால் வில்வமாலையைப் பற்றிய நினைவு அவரை என்னவோ செய்தது.

ராஜராஜர் அதை ஜாடையாகக் கவனித்து விட்டு, "சிற்றுளி மாறன் சிறந்த சிற்பிதான். மிக நுட்பமான குறைகளைக்கூடக் கண்டு பிடித்து விடும் ஆற்றல் சாதாரணமானது அல்ல. ஒரு மகா சிற்பியின் மகளை மணக்க அவனுக்கு முற்றிலும் தகுதி உண்டு. நாளை மறுநாள் அரண்மனையிலேயே திருமணத்துக்கு ஏற்பாடு செய்கிறேன். அதன் பிறகு புதிய நந்தியின் சிற்பத்தை அமைக்கும் பொறுப்பைச் சிற்றுளி மாறனே ஏற்றுக் கொள்ளட்டும். ஆனால் ஒரு சிறு திருத்தம். புதிதாக அமைக்கப் போகும் நந்தி தமிழ்நாட்டு ஆலயங்களிலுள்ள நந்திகளை யெல்லாம் விட அழகிலும், அளவிலும், அமைப்பிலும் ஒப்புயர்வற்றுச் சிறந்திருக்க வேண்டும்" என்று கூறிவிட்டு அரண்மனையை நோக்கிப் புறப்பட்டார். அவரைத் தொடர்ந்து வில்வமாலையைத் தவிர, மற்ற அனைவரும் போய் விட்டார்கள்.

இதுவரை ஒரே சத்தமாக இருந்த அந்தக் குடிசையின் வாசலில் நிசப்தம் சூழ்ந்தது. வில்வமாலை குமுறும் இதயத்துடன் குடிசைச் சுவரில் சாய்ந்திருந்தாள். அவள் கண்களில் 'குபீர் குபீர்' என்று கண்ணீர் பொங்கி வழிந்தது. துவளும் கொடியாள் துயரக் களஞ்சியமாகத் தோற்றம் அளித்தாள்.

அவளுடைய துயரத்துக்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று தன்னிகரில்லாத சிற்பி எனப் புகழப்படும் அவளுடைய தந்தையைக் கலிங்க நாட்டிலிருந்து வந்த ஒரு வாலிபன் அவமானப்படுத்தியது. இரண்டாவது அவளுடைய கருத்தை அறியாமலேயே அந்த இளஞ்சிற்பிக்கு அவளை மணம் முடிக்க மற்றவர்கள் தீர்மானம் செய்தது.

தன் தந்தையைக் குறை சொல்பவர்களைக் கண்டால் வில்வமாலைக்குக் கொஞ்சமும் பிடிக்காது. அவள் தகப்பனாரின் மேல் கரைகாணாத பாசம் வைத்திருந்தாள். இளமையிலேயே தாயை இழந்த அவளுக்கு இன்று வரையில் தாய் இல்லாத குறையே கிடையாது. கந்தப்ப ஸ்தபதி அத்தனை அருமையாகத் தம் புத்திரியை வளர்த்து வந்தார். அவள் விருப்பப்படி யெல்லாம் நடந்தார். ஆனால் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் தம் மகளின் விருப்பத்துக்கு மாறாக அவர் நடக்க வேண்டியதாயிற்று.

* * *

அப்பொழுது வில்வமாலைக்குப் பதினாறு வயது இருக்கும். நல்ல இளம் பருவம்-மார்கழி மாதத்துப் பரங்கிக் கொடியைப் போல் தளதள வென்று காட்சி அளித்தாள். அவளுடைய அங்கங்களின் அமைப்பு கந்தப்பர் வடித்தெடுத்த சிற்பங்களின் அமைப்பை விட அற்புதமாக இருந்தது.

ஒரு நாள் காலை நேரம். கந்தப்பர் அவசர வேலையாக அரண்மனைக்குப் போயிருந்தார்: அவருடைய சிஷ்யன் ஞானப்பிரகாசம் மட்டும் குடிசை வாசலில் இருந்த மகிழமரத்தடியில் உட்கார்ந்து கொண்டு ஒரு பெண்ணின் சிலையை உருவாக்குவதில் முனைந்திருந்தான். அடிக்கொரு தடவை சிந்திப்பதும் பிறகு செதுக்குவதுமாக இருந்தான். வெளிப்படையாகச் சொன்னால் அந்தச் சிற்பத்தை எப்படிப் பூர்த்தி செய்வது என்று தெரியாமல் சிரமப் பட்டுக் கொண்டிருந்தான். இந்த இனிமையான காட்சியை ரசித்துக் கொண்டே குடிசைக்குள் அமர்ந்திருந்தாள் வில்வமாலை: அவள் மனம் அமைதியின்றித் தவித்துக் கொண்டிருந்தது. இன்று பொழுதுக்குள் அந்தச் சிற்பம் பூர்த்தி பெறாவிட்டால்...?

வில்வமாலை குடிசையிலிருந்து வெளிப்பட்டாள். ஞானப்பிரகாசத்துக்குப் பக்கத்தில் போய் நின்றுகொண்டு சந்தன மணம் வீசும் தன் அழகிய கரங்களால் அவன் தோளைப் பற்றினாள். பிறகு, "ஞானு! இன்று நீ இந்தச் சிற்பத்தைக் குறை இல்லாமல் செய்து முடிக்கா விட்டால் என்ன நடக்கும், தெரியுமா?" என்றாள்.

"என்ன நடக்கும், வில்வமாலை? உன் தகப்பனார் தம் சிஷ்யனாவதற்குத் தகுதியில்லை என்று கூறி என்னை விரட்டியடித்து விடுவார். அவ்வளவுதானே?" என்று கேட்டான் ஞானப்பிரகாசம்.

வில்வமாலையின் கண்களில் 'குப்'பென்று கண்ணீர் பொங்கியது. விம்மும் குரலில், "அவ்வளவுதானா? நன்றாக யோசித்துப் பார், ஞானு! நான் ஒருத்தி இருப்பதை மறந்து விட்டாயா?" என்றாள்.

"இல்லை, வில்வமாலை! உன்னை மறக்கவில்லை. என் உயிர் உள்ளவரையில் உன்னை மறக்கவும் முடியாது. ஆனால்..."

"ஆனால்...,என்ன?"

அதற்குள் அரண்மனைக்குப் போயிருந்த கந்தப்ப ஸ்தபதி திரும்பி வரவே அவர்கள் பேச்சு தடைப்பட்டது. ஞானப்பிரகாசம் எப்படியும் சிலையைப் பூர்த்தி செய்து விடுவது என்ற தீர்மானத்தோடு தீவிரமாகச் செதுக்குவதில் ஈடுபட்டான். வில்வமாலை தகப்பனாரிடம் குழைந்து குழைந்து பேச்சுக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

"அப்பா!...அப்போல்..."

"ஏன், குழந்தாய்! என்ன வேண்டும்?"

"ஒன்றுமில்லை, அப்பா! வந்து...ஞானப்பிரகாசத்தை..."

"ஞானப்பிரகாசத்தை நான் என்ன செய்யப் போகிறேன்? இன்று பொழுதுக்குள் சிற்பத்தை உருவாக்கிக் காண்பிக்கா விட்டால்



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

**உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்**

பெப்ஸ் வில்லை ஒன்றை சுவைத்தால் வலியைக் குறைக்கவும், தொண்டைப்புண் பிராங்கைடிஸ், இருமல் அல்லது ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமான கிருமிகளைக் கொல்லவும் செய்யும். அதன் குணமளிக்கும் ஆவியை அனுபவியுங்கள். பெப்ஸ் உடனே நிவாரணம் அளித்து, விரைவில் குணமூட்டுகிறது. அபாயகரமான மருந்துகள் இதில் சேரவில்லை. குழந்தைகளுக்கும் கூட அபாயமின்றி கொடுக்கலாம்.

பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.




PPY.34.TAM

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்

சோல் ஏஜண்டுகள்: தாதா அண்டு கம்பெனி
86, லைனப்ப நாயக் தெரு, சென்னை-3

# better position ?




THE FIVE YEAR PLAN NEEDS QUALIFIED MEN

Let ISEC plan your prosperity. **SUCCESS** guaranteed in **AMIE (Ind) AMIEE, ITelE AMIMechE, AMIChemE BritIRE C & G, AICWA, ACIS, DCom, LCC, Acturial FIA Statistician's Dip (ISI), Madras Govt. Tech & ALL recgd. exams.** Study at home, in spare time under expert National guidance. Free SUCCESSFUL CAREERS (Foreword Sir M. Visvesvaraya) from Secy.

**ISEC, P. B. 1173/K, BOMBAY-1**

(mention examination)







ராமா
கூந்தல் வளர்க்கும் டானிக்



அவன் அபிப்பிராயப்படி எங்கு வேண்டுமானாலும் போகச் சொல்லி விடுவேன்.''

'' அப்பா! ஞானப்பிரகாசத்தைப் பிரிந்து என்னால் உயிர் வாழ முடியாது...!''

'' மகளே! நீ மகிழ்ச்சியோடு வாழவேண்டும் என்பதுதான் எனது விருப்பம். நீ அவனைக் காதலித்ததையோ, அவன் உன்னைக் காதலித்ததையோ நான் குற்றமென்று கூற மாட்டேன். ஆனால் நீ பிறந்த அன்றே கலைத் தெய்வத்தின் காலடியில் உன்னைக் கிடத்தி, 'என்னைவிட மேம்பட்ட ஒரு சிற்பிக்கே என் மகளை மணம் முடித்து வைப்பேன்' என்று சபதம் எடுத்துக் கொண்டுள்ளேன். அந்தச் சபதத்தைப் பொய்யாக்கலாமா? நன்றாக யோசித்துப் பாரம்மா...''

இவ்வாறு கூறி விட்டுக் கந்தப்ப ஸ்தபதி குடிசையை விட்டு வெளியே போய் விட்டார். அவர் போன பிறகு இதுவரையில் தந்தைக்கும் மகளுக்கும் நடந்த சம்பாஷணைகளை ஒன்றுவிடாமல் கேட்டுக் கொண்டிருந்த ஞானப்பிரகாசம் தன் இடத்திலிருந்து விருட்டென எழுந்தான். தன் கையிலிருந்த இரும்புச் சுத்தியலினால் அரைகுறையாக உருவாகியிருந்த சிற்பத்தின் தலையில் ஓங்கி ஒரு போடு போட்டான். அடுத்த கணம் அந்த அரைகுறைச் சிற்பத்தின் தலை நாலாபுறமும் சிதறி விழுந்தது. அதைக் கண்டு வில்வமாலை பதறிப் போய் விட்டாள்.

ஞானப்பிரகாசம் அமைதியாகச் சிரித்தான். அவளுடைய மலர்க் கரங்களைத் தனது இரும்புக் கரங்களால் பற்றினான். பிறகு அவளுடைய எழில் ததும்பும் நயனங்களை நோக்கியபடியே, '' வில்வமாலை! நீ என்னை உண்மையிலேயே நேசிக்கிறாயா? அது உண்மையானால் உடனே எனக்கு விடை கொடு. என்றைக்காவது ஒரு நாள் உன் தகப்பனாரை விடப் பெரிய சிற்பியாகத் திரும்பி வருவேன்!''

அவன் பேச்சு தீர்க்கமாக ஒலித்தது. வில்வமாலைக்கோ விடை கொடுக்கவே மனம் இல்லை. வெகு நேரம் வரையில் அவன் உறுதியான கரங்களைப் பற்றிக் கொண்டு விம்மி விம்மி அழுதாள். கடைசியில் மனதைத் திடப்படுத்திக் கொண்டு, ''ஞானு! வானத்தில் ஒரு சூரியன்தான் உதயமாக முடியும். அதைப் போல் என் வாழ்க்கை வானத்தில் நீ உதயமானாய். சூரியன் மறைந்து விட்டால் வானம் இருண்டுவிடும். நீ என்னை விட்டுப் பிரிந்தால் என் வாழ்க்கை வானமும் இருண்டு விடும். எப்பொழுது நீ திரும்பி வருகிறாயோ, அப்பொழுதுதான் நான் மீண்டும் ஒளி பெறுவேன்...இதோ இந்த வளையலை என் காதல் நினைவாக வைத்துக் கொள்'' என்று கூறித் தன் கையில் கிடந்த தந்த வளையல் ஒன்றைக் கழற்றிக் கொடுத்தாள்.

ஞானப்பிரகாசம் அதை அன்போடு வாங்கிக் கொண்டு, ''வில்வமாலை! உன் உள்ளத்தைப் போலவே உறுதிவாய்ந்த இந்த வளையலை உன் நினைவாக எனக்கு அளித்திருக்கிறாய். என் உயிர் உள்ளவரை இந்த வளையலைப் பத்திரமாக வைத்திருப்பேன்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து அகன்றான்.

• • •

உச்சிப் பொழுதில்தான் கந்தப்பர் குடிசைக்குத் திரும்பினார். அவரைக் கண்டவுடனேயே, ''அப்பா! உங்களை அவமானப் படுத்திய அந்தக் கர்வக்காரனுக்கு என்னை மணம் செய்து கொடுக்கத் துணிந்து விட்டீர்களா?'' என்று கேட்டாள் வில்வமாலை.

'' மகளே! நான் தோற்றுப் போவேன் என்று தெரிந்திருந்தால் மகாராஜா அப்படிக் கூறியதற்கு மறுப்புக் கூறி இருப்பேன். ஆனால் விதி வேறு விதமாகச் சதி செய்து விட்டது. இனி நான் சொன்ன வார்த்தையை மீற முடியுமா? ஊரார் என்ன நினைப்பார்கள்? ராஜ ராஜர்தான் என்ன நினைப்பார்?'' என்றார் கந்தப்ப ஸ்தபதி.

'' அப்படியென்றால்...''

'' நீ அவனை மணந்து கொண்டுதான் ஆக வேண்டுமாம். இதில் எனக்கொன்றும் சம்பந்தமில்லை. உன் பாடு; மகாராஜா பாடு!''

வில்வமாலை அவரை எரித்து விடுவதைப் போல் பார்த்தாள். பிறகு ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவளைப்போல் தோட்டத்துப் பக்கம் போய் விட்டாள்.

அன்று இரவு மூன்றாம் ஜாமம் ஆரம்பமாகிக் கொண்டிருந்தது. வில்வமாலையோ குடிசைக்குள் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய மென்மையான கைகளில் ஒன்று வலிமை மிகுந்த கல் பிளக்கும் உளி ஒன்றை உறுதியாகப் பிடித்துக் கொண்டிருந்தது.



வில்வமாலை கொஞ்சமும் தயக்கமின்றிக் குடிசையின் முன் தோட்டத்தைத் தாண்டி வெளியே வந்தாள். பிறகு சுற்றும் முற்றும் பார்த்து விட்டு மேற்குத் திக்கில் சிறிது தொலைவில் அமைந்திருந்த சிற்பக் கலைஞர்களின் கூடாரங்களை நோக்கி நடக்க ஆரம்பித்தாள். அங்கே வரிசை வரிசையாக அமைந்திருந்த நூற்றுக்கு மேற்பட்ட கூடாரங்களிலிருந்து ஒரு சின்னஞ்சிறு கூடாரம் மட்டும் சற்று ஒதுங்கி அமைந்திருந்தது. அது சிற்றுளிமாறனின் கூடாரம்தான்.

வில்வமாலை அந்தக் கூடாரத்தைக் குறி வைத்துத்தான் வேகமாக நடந்து கொண்டிருந்தாள். கூடாரம் நெருங்கியதும், சர்வ ஜாக்கிரதையோடு கூடாரத்தின் பின்பக்கத்திலிருந்த ஒரு இடைவெளி வழியாக மெள்ள உள்ளே எட்டிப் பார்த்தாள்.

கூடாரத்தின் நடுவில் கல்லால் செய்யப்பட்ட தூண்டாவிளக்கு ஒன்று அமைதியாக எரிந்து கொண்டிருந்தது. ஒரு ஓரத்தில் சிற்றுளி மாறன் ஆழ்ந்த நித்திரையில் திளைத்திருந்தான். தாடியும் மீசையும் சடை முடியும் விநோதமான ஆடை அலங்காரமும் கொண்டிருந்த அவனுடைய தோற்றம் இரவின் அமைதியோடு கலந்து வில்வமாலைக்கு மிகுந்த பயத்தை அளித்தது. ஆனால் அது பாக்கு உடையும் நேரம்தான். அடுத்த கணம் கையிலிருந்த கனமான கூரிய கல் உளியைத் தன் சக்தியை யெல்லாம் பிரயோகித்து அவனுடைய மார்பை நோக்கி வீசி எறிந்து விட்டுக் குடிசையை நோக்கி விரைந்தாள். மறு கணம் எங்கிருந்தோ வந்து 'தொபீர்' என்று குதித்தார்கள் நாலைந்து இரவு நேரக் காவல் வீரர்கள். அவர்களுடைய கைகளில் கத்திகள் பளபளத்துக் கொண்டிருந்தன. வில்வமாலையின் முதுகில் ஓர் போர்வீரன் கத்தி முனையைப் பதித்து, "உன்னைக் கைது செய்திருக்கிறோம். அரண்மனையை நோக்கி நட" என்று கூறினான்.

வில்வமாலை அவனை ஒருமுறை அலட்சியமாகப் பார்த்து விட்டு ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அரண்மனையை நோக்கி நடந்தாள்.

"வில்வமாலை! உன் மேல் சாற்றப்பட்டுள்ள கொலைக் குற்றத்தை நீ ஒப்புக் கொள்கிறாயா?" என்று கேட்டார் ராஜராஜர் அவளைப் பார்த்து.

"ஆம், ஒப்புக் கொள்கிறேன்" என்று சுருக்கமாகப் பதில் சொன்னாள் வில்வமாலை.

"மிகவும் சந்தோஷம். ஆனால் எதற்காக அவனைக் கொலை செய்வதற்கு முயன்றாய்? காரணம் என்ன?"

"இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று என் தந்தையைப் பலர் முன்னிலையில் அவமதித்தது: மற்றொன்று நான் அவனுக்கு மனைவியாக வேண்டுமே என்பது."

"நீ அவனுக்கு மனைவி ஆவதில் என்ன தடை? அவன் எந்த விதத்தில் தாழ்ந்தவன்? தமிழ் நாட்டிலேயே பெரும் சிற்பியாகிய உன் தந்தையைவிட அவன் உயர்ந்தவன்தானே?"

"இருக்கலாம். ஆனால் என் ஞானப்பிரகாசத்தை விட அவன் எனக்கு உயர்ந்தவன் இல்லை...."

"குழந்தாய்! நீ ஞானப்பிரகாசத்தின் மேல் தீவிரமான காதல் கொண்டுள்ளாய் என்பதை நான் முன்பே அறிவேன். ஆனால் அதற்காக இப்படிப்பட்ட பாப காரியத்தைச் செய்யலாமா? நீ இரவு கொலை செய்த சிற்றுளி மாறன் ஒருவேளை உன் அன்புக்குரிய ஞானப்பிரகாசமாகவே இருந்தால்...."

அவைக்களமே அயர்ந்து போயிற்று. ஸ்தபதி மெய்சிலிர்த்துப் போனார். வில்வமாலையோ அலைகடலாய்ப் பொங்கினாள்.

"உண்மைதான், குழந்தாய்! ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு உன்னிடம் விடைபெற்றுச் சென்ற ஞானப்பிரகாசம்தான் சிற்றுளி மாறன். அவன் நேரே வடபுலத்தை அடைந்து ஒரு தகுந்த சிற்பியை நாடி ஆவேசத்தோடு சிற்பக் கலையைப் பயிலத் தொடங்கினான்; விரைவிலேயே ஈடு இணையற்ற சிற்பியாகத் தேர்ச்சியும் பெற்றான். அவன் சமீபத்தில் தஞ்சைக்குத் திரும்பி வந்தபொழுது தனியாக என்னைச் சந்தித்து எல்லாவற்றையும் கூறினான். உன் தந்தையின் சபதத்தை நிறைவேற்றுவதற்காகவும் உன்னைச் சிறிது வேடிக்கை பார்ப்பதற்காகவும் நாங்கள் இந்த நாடகத்தை நடத்தினோம். நாளை உனக்கும் அவனுக்கும் திருமணம் நடைபெறும் பொழுது எல்லாவற்றையும் விளக்கிச் சொல்லலாம் என்று எண்ணி இருந்தேன்; அதற்குள் நீ அவசரப்பட்டு விட்டாய்...."

இதுவரை ராஜராஜர் கூறியவற்றைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த வில்வமாலை இப்பொழுது நினைவிழந்து கீழே வீழ்ந்தாள். சுற்றி யிருந்தவர்கள் ஓடிவந்து அவளைத் தூக்கினார்கள். ராஜராஜர் எல்லோரையும் விலகச் சொல்லி விட்டுத் தாமே அவளுக்கு மூர்ச்சை தெளிவித்தார்.

பிறகு, "வில்வமாலை! மலையை மடுவாக்கவும் மடுவை மலையாக்கவும் காதலால் முடியும்; காதல் என்ற தெய்வீக சக்தி இல்லாவிட்டால் உலகமே இல்லை. உன்னுடைய உன்னதமான காதல்தான் கொலை செய்வதற்கும் உன்னைத் துணிய வைத்தது. ஆனாலும் நீ அதிர்ஷ்டசாலி. ஞானப்பிரகாசம் அநேகமாகப் பிழைத்துக் கொள்வான் என்று வைத்தியர்கள் கூறுகிறார்கள். வைத்தியர்களின் மருந்துக்கு அவனைப் பிழைக்க வைக்கும் சக்தி இல்லாவிட்டாலும், உன்னுடைய தெய்வீகக் காதலுக்கு அந்தச் சக்தி நிச்சயம் உண்டு" என்று சொல்லி நிறுத்தினார்.

அப்பொழுது நாலைந்து சேவகர்கள் ஒரு நீளமான பலகையைத் தூக்கி வந்து வில்வமாலையின் எதிரே வைத்தார்கள். அதில் தாடியும் மீசையும் சடை முடியும் அழிக்கப்பட்ட சிற்றுளி மாறன்—அதாவது ஞானப்பிரகாசம்— மார்பில் பெரிய கட்டோடு காட்சி அளித்தான்.

வில்வமாலையின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் மல்லிகை மொட்டுக்களைப் போல் சிதறி ஞானப்பிரகாசத்தின் மேல் உதிர்ந்தன. அவன் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

ஞானப்பிரகாசம் மௌனமாகத் தன் இடுப்பின் இத்தனை காலமும் பத்திரப்படுத்தியிருந்த தந்த வளையலை எடுத்து வில்வமாலையின் எழிற் கரத்தில் அணிவித்தான்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

வாரமொன்றுக்கு ப்ரூக்
பாண்ட் 2,89,00,000 தேயிலைப்
பாக்கட்டுகள் உற்பத்தி
செய்யும் இணையற்ற திறமையை
எப்படிப் புகழ்வது!

மற்றெல்லாத் தேயிலையை
விட, மக்கள் யாவரும் ப்ரூக்
பாண்ட் தேயிலையைத்தான்
ஆதரிக்கிறார்கள் என்பதில்
ஆச்சரியமேது!

...ப்ரூக் பாண்டின் அதிவேக
விநியோக முறைதான்,
அவர்கள்தேயிலை புத்தம்
புதியதாக நித்தமும்
திகழ்வதின் காரணம்.

# எப்பொழுதும்
# இன்பம்
# தப்பாது அளிப்பது
# ப்ரூக் பாண்ட்
# தேயிலையே



ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்

BB 273 K

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon